## ஆசிரியரைப் பற்றி...



பி.வி.தம்பி என்கிற பி.வாசுதேவன் தம்பி 1937–ம் ஆண்டு ஏப்ரல் 28–ம் தேதி பிறந்தவர். ஊர் ஹரிப்பாடு.

மலையாள நாவல் அரங்கத்தில் மிக விரைவிலேயே கவனத்திற்குரிய எழுத்தாளராக இடம் பெற்றவர் பி.வி.தம்பி. தனது பத்தொன்பதாவது வயதில் நியூ இந்தியா இன்ஷ்யூரன்ஸ் நிறுவனத்தில் பணிபுரிந்த இவர் எம்.ஏ., எல்.எல்.பி. பட்டங்கள் பெற்றார். 1986–ல் எல்.ஐ.சி. அதிகாரி பதவியை ராஜினாமா செய்து முழுநேர எழுத்தாளரானார்.

இவரது முதல் நாவலான 'ஹோமம்' 1979–ல் (மலையாள) குங்குமம் வார இதழின் விருது பெற்றது. இவரது குறிப்பிடத்தக்க நாவல்களில் சில: சூரியகாலடி, பள்ளிவேட்டை, ஆனந்த பைரவி.

'சோவியத் யூனியனின் புதிய கட்டமைப்பும், புதிய அரசியலமைப்பும்' என்கிற தலைப்பில் இவர் எழுதிய ஆங்கிலக் கட்டுரை 1988–ம் ஆண்டின் சோவியத் விருதை பெற்றுத் தந்தது. 1989–ல் சோவியத் யூனியன், போலந்து ஆகிய நாடுகளுக்குப் பயணம் செய்திருக்கிறார்.

வழக்கறிஞராகப் பணிபுரியும் திரு.பி.வி.தம்பி பதினைந்து புத்தகங்களின் ஆசிரியர். கிருஷ்ணப்பருந்து உட்பட சில திரைப்படங்களின் திரைக்கதை வசனகர்த்தாவாகவும் பணியாற்றியுள்ளார்.

கிருஷ்ணப்பருந்து இந்தியில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. மனைவி விஜயலக்ஷ்மியும் குழந்தை லதா, ராஜ்மோகன்தம்பி, ஸ்வப்னா, ஆகியோர் இவரது குடும்பத்தின் ஏனைய உறுப்பினர்கள்.

## அணிந்துரை

மலையாள இலக்கியத்தில் மிகவும் வலிமை வாய்ந்த ஒரு கிளை நாவல் என்பது. நாவலுக்கு ஒரு நூற்றாண்டைவிட வயது குறைவுதான். எனினும் அது எண்ணிக்கையிலும், தன்மையிலும் நல்ல வளர்ச்சியும், செழுமையும் பெற்றுள்ளதைக் காண முடிகிறது. இதுவரை வெளிவந்துள்ள முப்பத்தையாயிரம் புத்தகங்களில் ஐயாயிரத்திற்கு மேற்பட்டவை நாவல்கள்தான்!

மலையாள மொழியின் முதல் நாவல் எது என்பது குறித்த விவாதங்கள் இன்னும் தொடர்ந்து கொண்டுதானிருக்கின்றன. இருப்பினும் பொதுவாக அதற்கு அருகதை உள்ளதாகக் கருதப்படுவது சந்துமேனோனின் 'இந்துலேகா'. அன்றைய நாட்டுநடப்பை நினைவில் கொண்டு கூறுவதானால், அதை ஒரு சமுதாயப் பிரதிபலிப்பு என்றே கூறலாம். இன்றும் நம்முடைய நாவல்களைக் கூர்ந்து கவனித்தால் அவற்றில் பெரும்பாலானவை இதே இனத்தைச் சேர்ந்தவை என்பதை உணரலாம். பெரும்பாலான நாவல்களின் மையப்பொருள், குடும்பவாழ்க்கை அல்லது சமுதாயவாழ்க்கைதான். தனிமனித வாழ்க்கையின் போராட்டங்களும், மனதில் நிகழும் மோதல்களும் நாவலுக்கான விஷயங்களானது நவீன காலகட்டத்தின் சிறப்பு. அபூர்வமாகச் சில சரித்திரச் சம்பவங்களும், குறிப்பிடத்தக்க வாழ்க்கை முறைகளையும் விவரிக்கும் நாவல்களும் மலையாளத்தில் வெளியாகி உள்ளன. ஆனால், பொதுவாக மலையாள நாவலாசிரியர்களின் தேடுதல் முழுவதும் அவரவருக்குள், அவரவரது அனுபவங்களில், அவரவர் பயணப்படும் இடம், கால அளவுகளுடன் எல்லையிட்டுக்கொள்கின்றன என்பதே உண்மை.

'கர்மபந்தனம்' என்ற நாவலின் மூலமாக மலையாள இலக்கிய உலகில் கவனத்திற்குரிய ஒருவராகி விட்ட திரு.பி.வி.தம்பி, தன்னுடைய இலக்கிய முன்னோர்களையோ, சம காலத்தவரையோ பின்பற்றி இந்த 'கிருஷ்ணப்பருந்து' நாவலை எழுதவில்லை. 'பழையதொரு காலகட்டத்தில்

தன்னுடைய நாட்டினரிடமிருந்த நம்பிக்கைகளையும், நடவடிக்கைகளையும் கலைத்தன்மையுடன் வடிவமைக்க வேண்டும் என்று மனத்தில் எழுந்த உந்துதல்தான், இப்படிப்பட்டதொரு நாவலைப் படைக்கத் தூண்டியதா'க அவர் குறிப்பிடுகிறார்.

ஆனால், வெறும் 'உந்துதலை' மட்டுமே ஆதாரமாக்கி அவர் இந்த நாவலை எழுதவில்லை. ஏறத்தாழ ஒரு வருட காலம் அவர் எத்தனையோ தாந்திரீகப் புத்தகங்களுடன் போராடியிருக்கிறார். கேரளத்திலுள்ள பெரும்பாலான நம்பூதிரிகளின் வீடுகளிலும் ஏறியிறங்கியிருக்கிறார் மந்திரவாதிகள் பலரைச் சந்தித்திருக்கிறார். மந்திரவாதத்தை நம்புகிறவர்களையும் அவற்றால் மந்திரஸித்தி பெற்றவர்களாகக் கருதப்படும் முந்தைய தலைமுறையைச் சார்ந்த பலரைப் பேட்டி கண்டுமிருக்கிறார். சுருக்கமாகச் சொல்வதானால் விசாலமான பரப்பில் ஆழமான ஆராய்ச்சி செய்த பிறகுதான், அவர் நாவலை எழுதத் தொடங்கியிருக்கிறார்.

மந்திரவாதம் கேரளத்தின் பழைய சிகிச்சை முறைகளில் ஒன்று. எதிராளிகளை அழிப்பதற்கு இதை உபயோகித்திருந்தனர். இப்போதும் உபயோகிக்கிறார்கள். இன்றும் இது தொடர்பான சுவடிகள்—புத்தகங்கள், உபதேசங்கள், பயிற்சி, பிரயோகம் போன்றவை மிகவும் ரகசியமாகவே பாதுகாக்கப்படுகின்றன. குருநாதர்கள் தகுதி, தராதரம் பார்த்து, அதற்கான சோதனைகளில் வெற்றி பெற்றவர்களையே சீடர்களாகத் தேர்ந்தெடுத்து இந்த வித்தைகளைக் கற்றுத் தருவார்களாம். பெரும்பாலும் சுயலாபத்திற்காகவே இந்த வித்தையைப் பிரயோகிக்கிறார்கள் என்பதை நாம் மறந்துவிட முடியாது!

சூனியம் வைத்தல், எதிராளிக்குக் கெடுதல் செய்தல், மோடி வித்தை, மிருகபலி, நரபலி போன்ற பல்வேறு முறைகளில் கேரளத்தின் பல பகுதிகளிலும், பல காலகட்டத்திலும் மந்திரவாதம் பிரயோகத்தில் இருந்தது. இன்றும் பல பகுதிகளிலும் குறிப்பாக நாட்டுப்புறங்களில் இவை நடைபெற்றுக் கொண்டிருப்பதை நினைவில் கொள்ள வேண்டும். எதிரியை அழிக்க, ஆண்—பெண் வசியத்திற்கு, வேலை உயர்வு போன்றவற்றுக்கு ஒரு வழி என்கிற முறையில் மந்திரவாதத்தைப் பயன்படுத்துபவர்கள் இன்றும் இருக்கிறார்களாம்.



கேரளத்தில் அனேகக் குடும்பத்தினரை மந்திரவாதத்திற்கென்றே நியமித்திருந்ததை ஐதீகங்கள் மூலம் தெரிந்துகொள்ள முடிகிறது. கல்லூர், காட்டுமாடம், காலடி, குஞ்ஞுமாண் போன்ற பிராமண குடும்பத்தினரும் தலப்புறத்து நம்பி, நாலேக்காட்டில் பிள்ளை, கடமற்றத்து கத்தனார் போன்ற பெயர்கள் மாந்திரீக வித்தையில் இன்றும் மிகவும் புகழ்பெற்று விளங்குபவை. இன்றும் பல்வேறு விதமான மனோவியாதிகளுக்குச் சிகிச்சையாக பலி களைதல், தேய்த்து விடுதல், மந்திரவாதம் போன்றவற்றை அதிகமாகப் படித்தவர்களேகூடக் கைக் கொண்டு வருகிறார்கள் என்பது உண்மை!

மலையாள மொழியில் உள்ள மந்திரவாதம் தொடர்பான புத்தகங்களை விரல்விட்டு எண்ணி விடலாம். கே.கருணாகர மேனன் 1905—ல் வெளியிட்ட 'மந்திரத்தைப் பற்றி சில சூசகங்கள்' என்பது இந்த வகையில் முதலாவது என்று தோன்றுகிறது. 1931—ல் வெளிவந்த 'மந்திரப் பிரயோகங்கள்' மற்றொன்று. பி.கே.குஞ்ஞுன் வைத்தியரின் பாவப்பிரகாசம், மலையாள விளக்கத்துடன் கூடிய மந்திர விஞ்ஞானதீபிகா, கணபதி கல்பம், கருடகல்பம், ஸ்வயம்வர கல்பம், காளீகல்பம், திரிபுரசுந்தரி கல்பம், லலிதா சகஸ்ரநாமம், காயத்ரி, ரிக்வேத முறையிலான ஆசாரங்களை விளக்கும் முக்கியமான நூல்கள் எனலாம்.

மந்திரவாதம் முழுமையாக எல்லா இடத்திலும் எல்லா சமயத்திலும் நடைமுறையிலிருந்த, மக்கள் மந்திரவாதத்தை முழுமையாக நம்பிய ஒரு காலகட்டத்தைத்தான் தம்பி தன்னுடைய கிருஷ்ணப்பருந்தில் விளக்குகிறார். முற்றத்திலுள்ள துளசிமாடத்தில் மாலை நேரத்தில் தீபம் ஏற்றிவிட்டு நிற்கும் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் தலையைப் பறவைகளின் மன்னனான கருடன் வட்டமிட்டுப் பறப்பதுடன் நாவல் தொடங்குகிறது.

மந்திரவாதியான பப்புத்தம்பி புத்தூர் தறவாட்டின் காரணவர் (தலைவர்). தறவாட்டின் ஆராதனா மூர்த்தியாகவும் குலதெய்வமாகவும் விளங்குவது கிருஷ்ணப்பருந்து என்கிற கருடன். சகோதரியான குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் மகன் குமாரன்தம்பி மோசமான

வடிக்கைகள் கொண்டவனாக இருப்பினும், அவனைத்தான் புத்தம்பி தனது மாந்திரீக வாரிசாகத் தேர்ந்தெடுத்தார். அவனுக்கு திரோபதேசம் வழங்குகிறார். மாந்திரீகஸித்தி கைவரப்பெற்ற மாரன்தம்பி மிகவிரைவிலேயே புகழ் பெறவும் செய்தான். ஆனால், வனது கடந்த கால துர்நடவடிக்கைகள் அவனுக்குள் மறுபடியும் பிர்த்தெழ, நீண்டகாலம் தேவைப்படவில்லை. மந்திரவாதி என்பவன் ம்மசாரியாக இருக்கவேண்டும் என்கிற நிபந்தனையைக்கூட அவன் பாருட்படுத்தவில்லை. மந்திரஸித்தியை இழந்த குமாரன்தம்பி றுதியாகச் சென்று சேர்ந்த இடம் துர்மந்திரவாதம்.

அதிலும் அவன் தற்காலிகமாக வெற்றி பெற்றான். ஆனால், ல்ல மந்திரவாதம், துர்மந்திரவாதம் ஆகியவற்றுக்கிடையேயான பாராட்டத்தில் நல்ல மந்திரவாதம்தானே வெற்றி பெற வேண்டும்? ந்திரவாத மகிமையின் அடையாளமான கிருஷ்ணப்பருந்து, ஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் தலைக்கு மேலாக வட்டமிட்டுப் பறந்தபிறகு ஆகாயத்தில் உயர்ந்து மறைவதுடன் நாவல் முற்றுப் பெறுகிறது!

மந்திரவாதம் வெகுசரளமாகப் புழக்கத்திலிருந்த ஒரு காலகட்டத்தைத்தான் தம்பி தன்னுடைய நாவலில் விவரிக்கிறார். அடிப்படை மந்திரங்களின் சுலபமான விளக்கங்களாலும், ந்திரப்பிரயோகங்களின் தெளிவான வர்ணனைகளாலும் அந்தக் காலகட்டச் சம்பவங்களுக்கு யதார்த்த வடிவம் தர, மேற்குறிப்பிட்ட ஆராய்ச்சிகளின் மூலம் தம்பி கடுமையாக முயன்றிருக்கிறார். ஆனால், அவை நடைபெற முடியாதவை என்று யாருக்காவது தோன்றினால், அவர்களைக் குற்றம் கூறவும் முடியாது. மந்திரவாதத்தில் நம்பிக்கை உள்ளவர்களுக்கே அவை உண்மையானதாகவும், சாத்தியமான வையாகவும் தோன்ற முடியும். தன்னுடைய விளக்கங்கள் மூலம் தான் படைக்கும் சம்பவங்களின் மீது நம்பிக்கையை ஏற்படுத்த அவர் எடுத்துக் கொண்டிருக்கிற முயற்சி பாராட்டப்பட வேண்டிய ஒன்று. ஆனால், இக்கால (1984) வாசகர்களுக்கு மந்திரவாதத்தின் பலன்கள் முழுமையாகப் பலனளிக்காவிட்டால், அது தம்பியின் குற்றமாக இருக்க முடியாது!



தனக்குத் தெரியாத, கேள்விஞானத்தால் மட்டுமே தெரிந்து கொண்டிருந்த ஒரு காலகட்டத்தை ஆராய்ச்சி, மனப்பாடம் போன்றவற்றின் துணையுடன் ஏறத்தாழ நம்பக்கூடிய யதார்த்தத் தோற்றத்துடன் படைக்க முடிந்திருக்கிறது என்பதுதான் தம்பியின் வெற்றி. பாத்திரப் படைப்பு, சம்பவக் கோவை, கதையை விவரிப்பது போன்றவற்றில் தம்பி அசாதாரணமான ஒரு தன்மையை வெளிப்படுத்தியிருக்கிறார். சரளமாக மந்திரங்களை வெளிப்படுத்தும் போதும், மந்திரப் பிரயோகங்களை விவரிக்கும்போதும் சலிப்புத்தட்ட விடாமல் வடித்துள்ள முறை குறிப்பிடப்பட வேண்டிய மற்றொரு சிறப்பு. முதலிலிருந்து கடைசி வரை கூடுவிட்டுக் கூடுபாயும் உணர்வை இந்தப் புத்தகம் ஏற்படுத்துகிறது என்பதை சந்தேகத்துக்கு இடம் இன்றிக் கூறலாம்.

மந்திரவாதத்தில் நம்பிக்கை இல்லாதவர் இந்த நாவலின் ஆசிரியர். 'மந்திரவாதப் பிரயோகங்களுக்கு பலன் உண்டா இல்லையா என்பதைக் கூற என்னால் ஆகாது' என்கிறார் தம்பி. ஆனால், பரவலாக அதில் நம்பிக்கை இருந்த ஒரு காலம், அதை நம்பிய மக்கள்—இவை இரண்டையும் படைப்பதில் அவர் வெற்றி பெற்றிருக்கிறார். சிற்ப வேலைப்பாட்டின் அழகுடன், சரியான வடிவத்துடன், மனதைக் கவரும் ஓர் அழகான நூலாக 'கிருஷ்ணப்பருந்து' மலையாள நாவல்களுக் கிடையே பறந்து உயர்வது மகிழ்ச்சியான ஒரு காட்சி. குறிப்பிட்ட கால கட்டமும், குறிப்பிட்ட நம்பிக்கையின் அடிப்படையில் எழுந்த பழக்கவழக்கங்களையும் விளக்கும் நாவல்கள் குறைவாக உள்ள மலையாள மொழிக்கு நிச்சயம் இது ஒரு லாபம்தான்! இந்த நாவல் மூடப் பழக்கவழக்கங்களை வளர்க்க உதவுமென்று நான் கருதவில்லை.

விஞ்ஞானத்தில் நம்பிக்கை அதிகரித்து வரும் ஒரு காலகட்டத்தில், விஞ்ஞான வெளிச்சம் தேவையான அளவில் படாதிருந்த ஒரு கால கட்டத்தைப் பற்றிய தெரிந்துகொள்ளுதல், நிகழ்காலத்தின் விஞ்ஞான பயன்களில் நம்பிக்கையை ஊட்டி வலுவாக்க உதவும் என்று கருதலாம்.

கிருஷ்ணப்பருந்து ஒரு நல்ல நாவல். கூடுவிட்டுக் கூடுபாயும் உணர்வை ஏற்படுத்தும் நாவல். சமீப காலத்தில் நாவல் அரங்கிற்குள் நுழைந்த பி.வி.தம்பி அங்கும் சிறகடித்து உயருவார் என்கிற நம்பிக்கையுடன் நான் இந்த நூலை உங்களுக்கு அறிமுகப்படுத்துவதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

டி.என் ஜயச்சந்திரன்

துணைவேந்தர்—கோழிக்கோடு

(காலிகட்) பல்கலைக்கழகம்

தேஞ்ஞிப்பலம்

1984, பிப்ரவரி,5.

# முன்னுரை

நூற்றாண்டுகளுக்கு முந்தைய காலகட்டத்தில் மனித வாழ்வின் எல்லாப் பகுதிகளுடனும் ஒன்றிக் கலந்துவிட்டிருந்த ஒன்று மாந்திரீக வித்தை. அமானுஷ சக்திகளைப் பெற மந்திரப்பிரயோகங்களால் முடிந்திருக்கிறது என்பதற்கு வரலாற்று பூர்வமான ஆதாரங்கள் உண்டு.

மதங்கள் தோன்றுவதற்கு முன்பே தோன்றியது மந்திரவாதம். வார்த்தைகளை மனப்பாடம் செய்து பத்திரப்படுத்துவதுதான் மந்திரம். எழுத்துவன்மை, உச்சரிப்புச் சக்தி ஆகியவற்றால் மனோசக்தியைப் பலப்படுத்தி உத்திஷ்டமான காரியங்களைச் சாதித்துக் கொள்ள உதவும் அபாரமான ஒரு கலை மந்திரவாதம். மாந்திரீகர்கள் அல்லது மந்திரவாதிகள் என்று சொல்லப்படுபவர்களின் ஆழ்மனங்களும்கூட மந்திரவாதத்தின் கவர்ச்சிகரமான சக்திக்கு அடிமைப்படக்கூடியது.

நாடோடி வாழ்க்கையின் அறிவு சார்ந்த முக்கியமான ஒரு பகுதி மந்திரவித்தை. மாந்திரீகத்தைப் பற்றிய ஆராய்ச்சி என்பது விஞ்ஞானச் சுரங்கத்தைத் திறக்கும் முயற்சி எனலாம். நமது பூர்வீகர்களின் கலை, பண்பாடு, ஆசாரங்கள், அனுஷ்டானம் போன்றவை குறித்துப் புதிய தலைமுறைக்குத் தெரிவிப்பது. என்கிற லட்சியம்தான் என்னை இந்த நாவலை எழுதத்தூண்டியது. ஜனரஞ்சகமான கதைகளை வாசித்து அலுத்துப்போன வாசகர்களிடம் ஒரு புதிய அனுபவத்தை ஏற்படுத்த வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. பழைய காலகட்டத்தில் எனது நாட்டினரின் நம்பிக்கைகளையும், கர்மங்களையும் கலைப்பூச்சுடன் படைக்க வேண்டும் என்று என் மனம் வலுவாக உந்தியதும் மற்றொரு காரணம்.

மாந்திரீகர்களும், யக்ஷிகள் மற்றும் பூதப்பிரேத—பிசாசுகளும் கதாபாத்திரங்களாக உள்ள கலைப்படைப்புகளை யக்ஷிக்கதைகள் என்றோ மந்திரவாதக் கதைகள் என்றோ இகழ்ச்சியாகக் கூறுபவர்களும் இருக்கலாம். அவர்களுக்காகப் பிரபல மனோதத்துவ நிபுணரான சி.ஜி.யூங்கின் வார்த்தைகளை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன்:

"ஒவ்வொரு தனிமனிதனுக்கும் உள்ளது போலவே, சமூகத்திற்கும் ஒட்டுமொத்தமான ஒரு மயக்கநிலை மண்டலம் (Collective uncocience) உண்டு. ஒவ்வொரு தனிமனித உணர்வுகளுடன் அடிப்படை உணர்வாக இணைந்திருக்கும் இப்படிப்பட்ட கலைப்படைப்புகள், சமூகத்தின் மயக்கநிலை மண்டலத்தின் படைப்புகளாகின்றன. இவை எக்காலத்திலும் எல்லா மக்களுடையதுமாகவே விளங்குகிறது."

இந்த நாவலை எழுதுவதற்காக நான் ஏற்றுக் கொண்ட தியாகங்கள் கொஞ்சநஞ்சமல்ல. ஒரு வருடகால ஓய்வு ஒழிவற்ற மாந்திரீக ஆராய்ச்சிகளுக்கு நடுவே மண் மறைந்துபோன ஏராளமான மாந்திரீக– தாந்திரீக கர்மிகளின் வீடுகளுக்குச் சென்றேன். கைக்குக் கிடைத்த மந்திர ஓலைச்சுவடிகளைப் பரிசோதித்திருக்கிறேன். சிறுவயதில் நான் பெற்றிருந்த சம்ஸ்கிருத அறிவு பெருமளவு இதற்கு உதவியது. யந்திரசாரம், பிரயோகசாரம், மாந்திரீகதந்திரம், யோக சாஸ்திரம், மனுஸ்மிருதி, முகதர்சனம், லலிதா சகஸ்ர நாமம் மற்றும் பலவிதமான ஸ்தோத்திரங்களை ஆராய்ச்சி செய்தேன். இதைத் தவிர வெட்டம் மாணியின் புராணிக் என்சைக்ளோபீடியா, உள்ளூரின் (உள்ளூர் பரமேஸ்வர ஐயர்) இலக்கிய வரலாறு, பாஷாபோஷிணியின் சில பழைய இதழ்கள், எம்.வி.கிருஷ்ணன் நம்பூதிரியின் கட்டுரைகள் போன்றவற்றையும் பரிசோதிக்க நேர்ந்தது.

மந்திரவாதப் பிரயோகங்களுக்குப் பலன் இருக்கிறதா, இல்லையா என்று என்னால் சொல்ல முடியாது. ஆனால், அவற்றை நம்பியிருந்த மக்கள், அந்தக் கால கட்டம் போன்றவற்றைப் படைக்கும்போது அதற்கு யதார்த்தத்தின் சாயம் பூச ஒரு கலைஞன் முற்படுவானல்லவா? அதை நான் செய்திருக்கிறேன்.

கிருஷ்ணப்பருந்துக்கும் எனக்கும் பிரிக்க முடியாத ஒரு தொடர்பு உண்டு. கிருஷ்ணப்பருந்து என்கிற கருடன், என் பரம்பரையின் குலதெய்வமும்கூட.

யக்ஷிக் கதைகளையும், மந்திரவாதச் சரித்திரங்களையும் சொல்லித் தருவதற்கு எனக்கு ஒரு பாட்டி இருந்தார். என் அம்மா வழிப்பாட்டி, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி. புகழ்பெற்ற மாந்திரீகனாக இருந்த 'கருவாற்ற வைரமனை' இல்லத்தைச் சேர்ந்த மாதவன் போற்றி என்பவர் என் பாட்டியின் தகப்பனார். அந்தப் பாட்டியின் பெயரைத்தான் நாவலில் வரும் மாந்திரீகனின் அம்மாவிற்கு வைத்திருக்கிறேன். நாவலில் இடம்பெறும் புத்தூர் தறவாட்டுக்கு என் தந்தையின் (காலம் சென்ற திரு.பி.கிருஷ்ண பிள்ளை) தறவாட்டுடன் ஓர் ஒற்றுமை உண்டு. செங்கன்னூர் தாலூகாவில் தோனைக்காடு கிராமத்திலுள்ள புத்தூர் தறவாட்டில் (குடும்பத்தில்)தான் என் தந்தையார் பிறந்தார். யோகீஸ்வரன் என்று பரவலாக அறியப்படும் ஒரு மகாமாந்திரீகன் புத்தூர் தறவாட்டின் ஒரு பூர்வீகராக இருந்தார். புத்தூர் தறவாடும், கொட்டாரமும், சமாதிகளும், மாடங்களும் இன்று மாற்றாரின் கைகளில்.



நாவலில் வரும் முக்கியக் கதாபாத்திரங்களுக்கு தம்பி–தங்கச்சி என்ற பெயர்களை வழங்கியதன் மூலம் கதாபாத்திரங்களுடன் நான் அதிகமாக ஈடுபாடு ஏற்படுத்திக்கொள்ள முடிந்தது. அப்பாவின் தறவாட்டில் (பரம்பரையில்) பூர்வீகரான யோகீஸ்வரருக்கும், குமாரன்தம்பி என்கிற கதாபாத்திரத்திற்கும்கூட ஓர் ஒற்றுமையுண்டு.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி என்கிற கதாபாத்திரத்தில் என்னுடைய பாட்டி நிறைந்து நிற்கிறார். எனது சிறுவயது வடிவம்தான் கொச்சு ராமன். புத்தூர் வீடும், கொட்டாரமும் என் அப்பாவின் தறவாடும், கதை நடைபெற்றதாகக் கற்பனை செய்யப்பட்டுள்ள கிராமமும் நான் பிறந்த ஊரான ஹரிப்பாடுதான். வைரமனை இல்லம் என் தாத்தாவின் வீடு. இந்தக் கதை தொண்ணூறு சதவிகிதம் என் கற்பனையில் உடலெடுத்தது. மாந்திரீகப் பயிற்சி, ஆராய்ச்சி போன்றவற்றால் தயாரான கேன்வாசில் நான் அதைப் பிரதியெடுத்திருக்கிறேன்.

கிருஷ்ணப்பருந்து நாவல் மனோராஜ்யம் (மலையாள) வார இதழில் தொடராக வெளிவந்தபோது கேரளத்தின் பல பகுதிகளிலும் இது ஒரு விவாத விஷயமானது. ஆயிரக்கணக்கான பாராட்டுக் கடிதங்கள் எனக்கு வந்தன. என்னுடைய கடுமையான முயற்சிக்கு உரிய உயர்ந்த மதிப்புக் கிடைத்ததில் பெருமிதம் அடைந்தேன். அந்த நல்ல இதயங்களுக்கு முன்பாகத் தலை வணங்குகிறேன்.

கிருஷ்ணப்பருந்து நாவல் மலையாள மொழியில் இதுவரை ஒன்பது பதிப்புகள் வெளிவந்திருக்கிறது. திராவிட மொழிகளின் ஆசார்ய பதவியை அலங்கரிக்கும் தமிழ்மொழிதான், மலையாள மொழியின் தாய் என்பதில் ஆழ்ந்த நம்பிக்கை கொண்ட எழுத்தாளன் நான். இந்த

நாவல் புகழ்பெற்ற தமிழ்வார இதழ் ஒன்றில் பதினைந்தாண்டுகளுக்கு முன் தொடராக வெளிவந்தபோது, ஆயிரக்கணக்கான வாசகர்கள் வரவேற்றுப் பாராட்டியதை இந்தத் தருணத்தில் நன்றியுடன் நினைவு கூர்கிறேன்.

இந்த நாவலை மிகவும் அழகாக மொழிபெயர்த்த திரு.சிவன், மனதைக்கவரும் வகையில் வெளியிடும் கலா நிலையம் நிறுவனம் ஆகியோருடனான எனது நன்றி அளவிடற்கரியது!

கிருஷ்ணப்பருந்து நாவல் ஒரு பரிசோதனை முயற்சியும்கூட. நல்லவற்றை வரவேற்றுப் பாராட்டி, ஆதரித்து வாழ்த்தும் தமிழ் வாசகப் பெருமக்களுக்கு என்னுடைய நன்றி கலந்த வணக்கம்.

என்னுடைய குழந்தைப் பருவத்தில் பாட்டி என்னிடம் சொல்லியிருந்த கதைகள், இந்த நாவல் எழுதும்போது பெரிதும் உதவியுள்ளன. பாட்டி என்றோ இறந்துவிட்டார். பரிசுத்தமான அவரது நினைவுகளுக்கு முன்பாக நான் எனது கிருஷ்ணப்பருந்தைப் பறக்க விடுகிறேன்.

ஹரிப்பாடு
20.12.2000

பி.வி.தம்பி

## என்னுரை

பத்திரிகையாள நண்பர் வைத்தியநாதன் கிருஷ்ணப்பருந்து நாவலை மொழிபெயர்க்கிறார் என்பதையும் அது, அப்போது அவர் பணிபுரியும் சாவி பத்திரிகையில் தொடராக வெளிவந்து கொண்டிருப்பதையும் நான் தெரிந்து கொண்டது 86-ம் வருடத்தில். அதுவும் ஒரு பத்திரிகையாளர் சந்திப்பின்போது. வசுந்தரா என்டர்பிரைசஸ் நிறுவனம் 'குட்டை லேடி டார்ஜான்' என்ற பெயரில் 3D படத் தயாரிப்பில் ஈடுபட்டிருந்ததால், அதையொட்டி நடந்த பத்திரிகையாளர் சந்திப்பு அது. ஜெமினிசினிமா பத்திரிகையில் பணிபுரிந்து கொண்டிருந்த நான், அன்றுதான் நண்பர் வைத்தியநாதனை முதன்முறையாகச் சந்தித்தேன். அருமையான மொழிபெயர்ப்பு. தொடருக்கு நல்ல வரவேற்புக் கிடைத்தது. ஆனால், துரதிர்ஷ்டவசமாக தொடர், புத்தக வடிவம் பெறவில்லை!

தொண்ணூறுகளில் பகுத்தறிவுப் புத்தகங்களை விற்பனை செய்து வந்த அச்சக நண்பர் ஒருவருக்கு, கிருஷ்ணப்பருந்து நாவலின் மொழிபெயர்ப்பு உரிமையை வாங்குவதற்காக ஆசிரியரான திரு.பி.வி.தம்பி அவர்களை அவரது வீட்டில் சந்தித்தேன். மலையாளத்தில் 62 வாரங்கள் தொடராக வெளிவந்துள்ள சற்றுப் பெரிய நாவல் இது. தமிழில் தொடராக வெளியானபோது மொத்தக்கதையின் மூன்றில் ஒரு பகுதி வெட்டுப்பட்டது. எனவே, அனுமதி வழங்கிய ஆசிரியர், மூலப்புத்தகத்தின் ஒரு பிரதியை என்னிடம் தந்துவிட்டு, முழுமையாக மொழிபெயர்ப்புச் செய்யுமாறு கேட்டுக் கொண்டார். அப்படித்தான் எதிர்பாராமல் நான் இந்தப் பணியில் ஈடுபட நேர்ந்தது.

மலையாள மொழியில் தோன்றிய 'மாந்திரீக நாவல்' என்கிற பிரிவுக்குப் புத்துயிரூட்டிய இரண்டாவது நாவல் கிருஷ்ணப்பருந்து. மலையாள மொழியில் தொடராக வெளியானபோதே மகத்தான வரவேற்பு பெற்றது. அதனால் குறுகிய காலத்துக்குள்ளேயே இது 'ஸ்ரீ கிருஷ்ணப்

பருந்து' என்ற பெயரில் திரைப்படமாகவும் வந்து வெற்றி பெற்றது. மோகன்லால் கதாநாயகனாக நடித்த இந்தப் படத்தின் இயக்குநர் ஏ.வின்செண்ட்.

தமிழில் வெளியானபோது தொடருக்குப் படம் வரைந்தவர் ஓவிய நண்பர் அரஸ். கிருஷ்ணப்பருந்து மொழிபெயர்ப்பு எனக்குப் பல்வேறு விஷயங்களைக் கற்பித்த ஓர் அனுபவமும்கூட. மொழிபெயர்ப்புத் துறையில் நான் எவ்வளவு விழிப்புடன் இருக்கவேண்டும் என்பதை வலுவாக உணர்த்திய புத்தகம்.

நாவலை மொழிபெயர்க்க அனுமதி அளித்த ஆசிரியர் திரு.பி.வி.தம்பி, அழகான முறையில் புத்தகமாக வெளியிடும் கலா நிலையம், அட்டைப்படம் வரைந்த ஓவிய நண்பர் ஸ்யாம், மொழிபெயர்ப்பின்போது உதவிய பிரபல மலையாளத் திரைப்படக் கவிஞர் திரு. மங்கொம்பு கோபால கிருஷ்ணன், வாசிப்பில் ஆர்வம் உள்ள வாசக—வாசகியர் மற்றும் நூலகத்தார் ஆகியோருக்கு எனது மனமார்ந்த நன்றி உரித்தாகிறது.

தோழமையுடன்
சிவன்

சென்னை—78
தொலைபேசி : 4837681

# 1

"ஐயோ பருந்து!" - நடு முற்றத்திலிருந்த துளசிமாடத்தில், மாலைநேரத் தீபம் ஏற்றி, வணங்கிவிட்டுத் திரும்பத் தொடங்கிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி திடுக்கிட்டு அலறினார்!

மறுவிநாடி துளசிமாடத்தை வட்டமிட்டபடி சிறகடித்துப் பறந்த கிருஷ்ணப்பருந்து சட்டென்று மறைந்தது. அதோடு குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் திகைப்பும் அடங்கிப் போனது. வலது கையை மார்பில் அழுத்திப் பிடித்தபடி வயதான பெண்மணி அந்த மெதுவான குரலில் சொன்னார்: "கடவுளே. . . இப்பத்தான் மூச்சே சீரா வருது!"

"என்ன ஆச்சு சகோதரி?" - குளியலை முடித்துவிட்டு வீட்டிற்கு வந்த பப்புத்தம்பி பரபரப்படைந்தவராகக் கேட்டார்.

முற்றத்திலிருந்து மெதுவாகக் கிழக்குப்புறத் திண்ணைக்கு வந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி மூச்சிரைத்தபடி சொன்னார்: "என்னத்தைச் சொல்ல, பப்பு? ஒரு பருந்து - வெறும் பருந்தில்ல, சாக்ஷாத் கிருஷ்ணப் பருந்து -அது வந்த விசையைப் பார்க்கணுமே. பிறகு என் தலைக்கு நேரா வட்டமடிச்சுப் பறந்தது. நான் ஏகத்துக்குப் பயந்து போயிட்டேன். என்னைக் குத்திக் குதர்றதுக்குத்தான் வந்திருக்குன்னு நெனைச்சிட்டேன். என்னமோ என் அதிர்ஷ்டம் வந்த வேகத்திலேயே அது பறந்தும் போயிடுச்சு. இவ்வளவு பெரிய பருந்தை இப்பத்தான் முதல் தடவையாகப் பார்க்குறேன்."

சகோதரியின் வார்த்தைகளைக் கேட்ட பப்புத்தம்பி ஒரு கணம் கண்களை இறுக மூடித் தியானத்தில் ஆழ்ந்தார். சற்று நேரத்திற்குப் பிறகு கண்களைத் திறந்த அவர், வியப்படைந்து நின்றிருந்த சகோதரியிடம் கனமான குரலில் கூறினார்: "நம்ம

குலதெய்வமான கருட பகவான்தான் எழுந்தருளியிருந்தார். சகோதரி எதுக்காகப் பயப்படணும்? எனக்குத் தோணுறது என்னன்னா, என்னைக் கூப்பிடுறதுக்காகத்தான் கருட பகவான் வந்திருப்பார்னுதான்."

"பப்பு!"- குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி துயரம் நிறைந்த குரலில் அழைத்தார்.

தலை குனிந்து நின்றிருந்த பப்புத்தம்பி சொன்னார்: "நான் இப்போ ஜபம் பண்ணப் போறேன். இன்னைக்கு என்னோட ஜபம் ஒரு வேளை அதிக நேரத்தை எடுத்துக்கலாம். ராத்திரி பன்னிரண்டு நாழிகைக்குப் பிறகு நல்ல இருட்டில பாம்பு கடித்த ஒருத்தரை கொண்டு வருவாங்க சிலர். வர்றவங்க கட்டில்ல வச்சு இங்க கொண்டு வருவாங்க சிலர். வர்றவங்க கிழக்குப்புற முற்றத்தில காத்திருக்கட்டும். பயப்பட வேணாம்னு அவங்ககிட்டச் சொல்லுங்க. என்னோட ஜபம் முடியுற வரைக்கும் என்னைக் கூப்பிடக்கூடாது!"

பப்புத்தம்பி நேராகப் பூஜையறையின் வாசற்படியை நோக்கிப் போனார். அங்கு ஒரு வெண்கலக் கிண்டியில் நீர் நிறைத்து வைக்கப்பட்டிருந்தது. அருகில் ஒரு சிறிய வாழை இலைத் துண்டில் திருநீறும் இருந்தது.

அவர் கிண்டியை எடுத்து இடது உள்ளங்கையில் உறுதியாக நிற்க வைத்தார். இலைத்துண்டை வலது கையில் பிடித்தபடி, வலது காலை மடக்கி, பாத நுனியை வயிற்றின் இடது பாகத்தில் ஏற்றிவைத்து நிமிர்ந்தார். அதைத் தொடர்ந்து பப்புத்தம்பி 'கருடசேவை' யில் மூழ்கிப் போனார்.

கண்களை மூடி தியானத்தில் ஆழ்ந்த சகோதரனையே உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் மனத்தில் பயமேற்படுத்தும் சந்தேகங்கள் நிழல் பரப்பின. ஏதோ ஓர் ஆபத்து அடிமேல் அடிவைத்து அருகே நெருங்கிக் கொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது.

தினந்தோறும் மாலையில் வழக்கமாக நடைபெறுவதுதான் பப்புத் தம்பியின் 'கருட சேவை.' ஆனால், இன்றைய சேவைக்கு



மற்ற நாட்களைவிட ஏதோ அதிக முக்கியத்துவம் இருப்பதாகத் தோன்றியது குஞ்ஞுக்குட்டித் தங்கச்சிக்கு. தியானத்தில் ஆழ்ந்திருக்கும் தோரணையிலேயே ஏதோ ஒரு மாறுபாடு தெரிந்தது. அந்த முகத்தில் திவ்வியமான தேஜஸ் விளையாடியது. சற்று நேரத்துக்கு முன்பாக நிகழ்ந்த கருடனின் வரவும், அதைத் தொடர்ந்து நடைபெறும் சகோதரனின் நடவடிக்கைகளும் ஒதுக்கித் தள்ளக் கூடியவையல்ல.

குடும்பத்தின் குலதெய்வமான கருட பகவான் எழுந்தருளியிருப்பதாகத்தானே பப்பு சொன்னான்? அதுவும் அவனை அழைப்பதற்காக. அப்படியானால்...

வீட்டுக்கு மேலாக கருடன் வட்டமிட்டுப் பறந்த சம்பவங்கள் இதற்கு முன்பும் நடந்ததுண்டு. ஆனால், பூஜையறைக்கு முன்னாலுள்ள முற்றத்தில் இறங்கி, அதன் நடுவிலுள்ள துளசி மாடத்தை வலம் வந்து பயப்படுத்தும்படியாகச் சிறகடித்துத் திரும்பிப்போன சம்பவம் இதுதான் முதல் தடவை! கோபத்துடன் வந்த கிருஷ்ணப்பருந்து, மறைந்ததும்கூட அதே கோபத்துடன் தான்!

துளசிமாடத்தில் தீபம் ஏற்றிவிட்டு குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி திரும்ப முயன்றபோதுதான் கிருஷ்ணப்பருந்து எதிர்பாராமல் வெளிப்பட்டதும், பறந்ததும் நிகழ்ந்தது. தன்னைக் கொத்திக் குதறிவிடுமென்று பயந்தவர், உயிரற்றவளைப் போல அப்படியே அசைவற்று நின்று போனார். பருந்து திரும்பிப்போன பிறகுதான் உயிரே திரும்ப வந்தது. அப்பொழுதுதான் சகோதரனும் குளியல் முடித்துவிட்டு வந்து சேர்ந்தார்.

செய்தியைக் கேள்விப்பட்டவுடன் பப்புவின் முகம் தீவிர சிந்தனையில் ஆழ்ந்தது. கண்களை மூடியபடி கனத்த குரலில் அவன் சொன்னதென்ன? 'அவனை அவரை அழைப்பதற்காகக் கருட பகவான் வந்திருக்கலாம்' என்று தானே?

கிருஷ்ணப்பருந்து என்கிற கருடன் இந்தக் குடும்பத்தின் - முத்தூர் தறவாட்டின் (பரம்பரையின்) குலதெய்வம். ஆராதனா மூர்த்தி. இந்தக் குடும்பத்தின் தொடக்க காலம் முதல்

கருடதாசனாக ஓர் ஆண் சந்ததி, தன்னுடைய வாழ்க்கையை கருட சேவைக்காக ஒதுக்கி வைத்த பாரம்பரியம் கொண்டது. இதுவரையில் அந்த வழக்கத்திற்கு விக்கினம் எதுவும் நேர்ந்ததில்லை.

கருடசேவை அனுஷ்டிப்பவர் சைவ உணவை உட்கொண்டு பிரம்மச்சாரியாகவும், நிஷ்காம்ய கர்மியாகவும் இருக்க வேண்டும். கருடசேவை மூலமாகக் கைவரப் பெற்ற மந்திரஸித்திகள் அவரிடம் நிலையாகத் தங்கியிருக்க வேண்டுமானால், ஆசார அனுஷ்டானங்களில் கண்டிப்பாக எந்தவிதமான தவறும் நேரக்கூடாது.

தன்னுடைய இளைய சகோதரனான பப்பு அவனுடைய இருபதாவது வயதில் மாந்திரீகரான சாத்தும்மாவனிடமிருந்து (சாத்து + அம்மாவன். அம்மாவன் - தாய்மாமன்) சீடனாகப் பயிற்சி பெற்று கருட பக்தனானான். மருமகனுக்கு (சகோதரி மகனுக்கு) உபதேசம் செய்து ஆசீர்வதித்த அன்றுதான் மாமாவும் கடைசி மூச்சைவிட்டார். இரவில் தூங்கப் போனார். விடியற்காலையில் கிருஷ்ணப்பருந்தின் சிறகடியோசை கேட்டுத்தான் எல்லோரும் விழித்தார்கள். ஆனால், யாரும் பருந்தைப் பார்க்கவில்லை. நடுங்கும் குரலில் கருட பகவானை அழைத்துக் கொண்டிருந்தார் சாத்து மாமா. அதன் பிறகு அவரது குரல் கேட்கவே இல்லை. அதிர்ஷ்டமான சாவுதான்!

நாற்பத்தியிரண்டு வருடங்கள் கடந்துவிட்டன. பப்புவுக்கு இப்போது அறுபத்தியிரண்டு வயது. தன்னைவிட ஐந்து வயது இளையவன். நினைவுதெரிந்த நாளிலிருந்து அவனுக்குக் காய்ச்சலென்று ஒன்றுகூட வந்ததில்லை. ஆறடி உயரமும் அதற்கேற்ற ஆஜானுபாகுவான தோற்றமும் கொண்ட அவன் மாந்திரீகன் மட்டுமில்லாமல், நல்ல ஒரு உடற்பயிற்சியாளனாகவும் இருந்தான்.

கருடனின் இன்றைய வரவுக்கும், அவனுடைய ஆயுளுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ? மரணத்தை முன்கூட்டியே அறிந்துகொள்ள முடிந்தவர்கள் இந்தக் குடும்பத்தின் மாந்திரீகர்கள்.



கருடன் அழைக்க வந்திருப்பதாக அவனுக்குத் தோன்றியதற்குப் பின்னணியில் அவனது மரணம் ஒளிந்திருக்கிறதோ?

என்னுடைய பித்ருக்களே (முன்னோர்களே)! அப்படி எதுவும் நடக்காமல் இருக்கட்டும். என்னுடைய கண்கள் மூடிய பிறகுதான் அவன் இறக்க வேண்டும். விஷக்கடி வைத்தியன் என்ற நிலையிலும் மாந்திரீகன் என்ற முறையிலும் அவன் இப்பொழுது மிகவும் பிரபலமானவன். அவனுக்குப் பிறகு அப்படிப்பட்ட ஒரு வாரிசாக வரவேண்டியவன் என்னுடைய ஒரே மகனான குமாரன்தான்.

இருபத்தைந்து வயதைத் தாண்டிய பிறகும் பொறுப்பில்லாத ஒரு வாழ்க்கைதான் குமாரனுடையது. பப்புவிற்குப் பிறகு கருட பக்தனாகவும், குடும்பத்தின் பரம்பரை மாந்திரீகனாகவும் ஆவதற்குரிய எந்த அருகதையும் அவனுக்கு இல்லை. அப்படியானால் இந்தப் பரம்பரையின், வேறு ஏதாவது ஒரு கிளையைச் சேர்ந்த ஓர் இளைஞனைத்தான் தன்னுடைய வாரிசாகப் பப்பு தேர்வு செய்ய வேண்டியிருக்கும். சொந்த மருமகன் இருக்கும்போது, தூரத்து உறவான வேறு மருமகன் எவரையாவது மாந்திரீகனாக்க பப்பு ஒப்புக்கொள்வானா?

குமாரனையே தனது சீடனாக அங்கீகரிக்க பப்பு தீர்மானித்தாலும், பிரம்மச்சரியம் காத்து சாத்வீகமான மாந்திரீகனாக, கருட சேவையை அனுஷ்டிக்க குமாரனால் முடியுமா?

பிந்தைய வாரிசுக்கு மந்திரோபதேசம் நல்கிய பிறகுதான் மாந்திரீகனுக்கு மரணம் ஏற்படும் என்று அவர் கேள்விப்பட்டிருந்தார். அப்படி ஒரு விஷயத்தைப் பற்றியே பப்பு எதுவும் சொல்லாத நிலையில்... பப்புவின் மரணத்தைக் குறித்து தான் எதற்காகப் பயப்பட வேண்டும்?

"என்னுடைய பரதெய்வங்களே! என் பயத்தை அகற்றித் தாருங்கள். என் பப்புவுக்கு அப்படி எதுவும் நேரக்கூடாது!"- குஞ்ஞுகுட்டித்தங்கச்சி சுற்றுப்புறத்தை மறந்து உரத்த குரலில் பிரார்த்தித்தார்.

"அம்மா, கிழக்குப்புற முற்றத்துல யாரெல்லாமோ வந்திருக்காங்க." - சமையல்காரி நாணிக்குட்டி சமையலறைத் திண்ணையிலிருந்து குரல் கொடுத்தாள்.

சட்டென்று சுற்றுப்புறச் சூழலுக்கு இறங்கி வந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கிழக்குப்புறத் திண்ணையை நோக்கி நடந்தார். முற்றத்தில் சிலர் கூட்டமாக நின்றிருந்தனர். பாம்பு கடித்த ஒரு பெண்ணை ஒரு கயிற்றுக் கட்டிலில் படுக்கவைத்து எடுத்து வந்திருந்தனர். அடக்கி வைத்திருந்த எவரெவருடைய விசும்பல்களோ நிசப்தமான சுற்றுப்புறத்தில் அவ்வப்போது பிளவுகளை ஏற்படுத்திக் கொண்டிருந்தன.

"கருநாகம் தீண்டிடுச்சு அம்மச்சி! தம்பி ஐயா எங்க இருக்கார்?" - எரிந்து கொண்டிருந்த சிம்னி விளக்கை உயர்த்திப் பிடித்தபடி வயதான ஒருவர் பணிவுடன் கேட்டார்.

"அவன் நாமம் ஜபிச்சிட்டிருக்கான். நீங்க வருவீங்கன்னு ஏற்கெனவே சொல்லியிருந்தான். யாரும் கவலைப்படக்கூடாது. அவசரப்படவும் வேண்டாம். ஜபம் முடிஞ்சதும் பப்பு வருவான்" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அவர்களுக்கு ஆறுதல் கூறினார்.

"ஐயோ! இப்பவே உடம்பு கருநீல நிறமாயிடுச்சு. இன்னும் தாமதமானா..." கூட்டத்திலிருந்த வயதான பெண்மணி ஒருவர் தவிப்புடன் சொன்னாள்.

"ஜபம் முடிஞ்சு அவன் வர்றது வரைக்கும் யாரும் எதுவும் பேசாம இருக்கணும்" - ஓர் எச்சரிக்கை போல் குரலை உயர்த்திப் பேசிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வீட்டிற்குள் நுழைந்தார்.

முற்றத்தில் ரகசியக் குரல்களில் பேச்சுகளும், விசும்பல்களும் உயர்ந்து கொண்டிருந்தன. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தாங்க முடியாமல் முன்புறக் கதவைச் சாத்தினார். பிறகு பூஜை அறைப் பக்கம் பார்வையைத் திருப்பிச் சகோதரனது ஜபத்தை ஊன்றிக் கவனித்தார்.

தெளிவற்ற சிந்தனைகளில் லயித்திருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சட்டென்று திடுக்கிட்டார். நடுமுற்றத்தில் அதோ பூதாகாரமான ஒரு கிருஷ்ணப்பருந்து வட்டமிட்டுப் பறக்கிறது.



சில நிமிடங்களில் பருந்து பட்டென்று மறைந்தது. அதன் பிறகும் சிறகடியோசை அந்தப் பகுதி முழுவதும் முழங்கிக் கொண்டிருக்கிறது!

"க்ஷிப ஓம் ஸ்வாஹ" - பப்புத்தம்பி மந்திரத்தை உருப்போடத் தொடங்கினார். ஜபம் முடிவடையும் தறுவாயில்தான் பப்புத்தம்பி மந்திரத்தை உருப்போடுவார் என்பது குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்குத் தெரியுமாதலால் முன்புறக் கதவைத் திறந்தார்.

பூஜையறை வாசற்படியருகே ஒற்றைக்காலில் நின்று கருடசேவை நடத்திக் கொண்டிருந்த பப்புத்தம்பி, நடுமுற்றத்தின் வழியாக வீசியடிக்கும் சூறாவளி போல் பாய்ந்தார்.

கட்டிலில் கிடந்த பெண்மணியின் நெற்றியில் தன் வலது கையிலிருந்த விபூதியைத் தேய்த்த பப்புத்தம்பி, இடது கையில் வைத்திருந்த கிண்டியிலிருந்து அவளுடைய இடது உள்ளங்கால் பகுதியில் நீரைச் சொரிந்தார்.

"எழுந்திரும்மா" - பப்புத்தம்பி கட்டளைக்குரலில் கேட்டுக் கொண்டார்.

உறக்கத்திலிருந்து திடுக்கிட்டு விழித்து எழுந்தது போல அந்தப் பெண்மணி கட்டிலிலிருந்து துள்ளியெழுந்தாள்.

"சரி, நீ நடந்தே வீட்டுக்குப் போகலாம். காலியான கட்டிலை யாராவது தூக்கிக்கங்க" - அவர் உத்தரவிட்டார்.

எல்லோரும் கூப்பிய கைகளுடன் விடை சொல்லிப் பிரிந்தனர்.

"சகோதரி"- பப்புத்தம்பி அழைத்தார்.

"என்ன பப்பு?" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பதில் குரல் கொடுத்தார்.

"சகோதரி, நான் இன்னைக்கு ராத்திரியே குமாரனுக்கு [illegible]ரோபதேசம் கொடுக்கப் போறேன்" - பப்புத்தம்பியின் குரலில் உறுதியான தீர்மானம் கலந்திருந்தது.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பேச முடியாமல் கல்லாகச் சமைந்து [illegible]ார்!

## 2

எல்லாம் மின்னல் வேகத்தில் நடந்தன. வீட்டின் மேற்குப்புறச் சிற்றறையை நோக்கி ஓடினார் பப்புத்தம்பி.

"குமாரா! சீக்கிரமா எழுந்து கதவைத் திறடா..." - கதவைத் தட்டியவாறு பப்புத்தம்பி கத்தினார்.

கதை எதுவும் புரியாமல் கதவைத் திறந்து தூக்கக் கலக்கத்துடன் விழித்தபடி நின்றிருந்த குமாரன்தம்பியிடம் தாய்மாமன் கட்டளையிட்டார்: "கிழக்குப்புறக் குளத்திற்குப் போய் நூற்றியொரு தடவை மூழ்கியெழுந்து ஈரத்துணியோடு நிலவறைக்கு வந்துசேர்!"

'ஏன்? எதற்கு?' என்றெல்லாம் கேட்பதற்கான தைரியம் மருமகனிடம் இருக்கவில்லை. தாய்மாமாவின் முன்பாகச் சொன்னதைச் செய்வதைத் தவிர, வாய் திறந்து எதையும் கேட்க அவனால் முடியாதிருந்தது.

குமாரன்தம்பி புத்தூர் வீட்டின் கிழக்குத்திசையிலுள்ள குளத்தை நோக்கி விறுவிறுவென்று நடந்தான்.

"மகனே!" - கிழக்குப்புற முற்றத்தில் நின்று கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அழைத்தார். குமாரன்தம்பி, தாயின் அருகே சென்றான். அரைகுறையான நிலவொளியில் அவன் அம்மாவின் திகைப்படைந்த முகத்தைப் பார்த்தான்.

"என்னம்மா?"



"என்னத்தைச் சொல்றது மகனே! பப்பு உனக்கு மந்திரோபதேசம் தரப்போறான். என்மகன் பழைய குணங்களையெல்லாம் விட்டுட்டு நல்லவனா, பக்தனா வாழணும். நம்மளோட குடும்பப் பாரம்பரியத்தை நீ நாசமாக்கிடக்கூடாது. உன் தாய்மாமா மாதிரிப் பிரம்மசசரியம்காத்து, புகழ்பெற்ற மாந்திரீகனா நீ இந்தக் குடும்பத்தோட நல்லபேரைக் காப்பாத்தணும்!"

அம்மாவின் வார்த்தைகள் தன்னுடைய நெஞ்சில் கூர்மையான முள்களாகித் தைப்பதுபோல் குமாரன்தம்பிக்குத் தோன்றியது. தாய்மாமாவின் வாரிசாக, இந்தக் குடும்பத்தின் மாந்திரீகனாகும் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்வதா? நான் பிரம்மச்சாரியாவதா? பச்சைக் காய்கறிகளை மட்டுமே சாப்பிட்டு ஒரு சன்னியாசி மாதிரி வாழ்வதா? கருடசேவையும் ஜபமுமாக ஒரு யோகியைப் போல் வாழ்நாளைக் கழிப்பதா?

தான் ஒருபோதும் எதிர்பார்த்திராத காரியம் இது. ஒரு போதும் விரும்பாத பதவியும்கூட! சுகபோகங்களில் ஆழ்ந்து வலுவிழந்து போன மனம் அவற்றையெல்லாம் சுத்தமாக சர்வபரித் தியாகம் செய்துவிட வேண்டுமா? புகைபிடிப்பதிலும் மதுபானத்திலும் அதிகமான ஆர்வம் கொண்ட நான், இனி அவற்றைத் தவிர்த்துவிட வேண்டுமா? பெண் சுகத்தின் மோகத்தில் ஆழ்ந்து கிடக்கும் தன்னுடைய மனம், விரக்தியைப் புணர வேண்டியிருக்கிறது!

தறவாட்டின் மற்ற கிளைகளில் தன்னைவிட அதிகம் படிப்பும் திறமையும் உள்ள எத்தனையோ இளைஞர்கள் இருக்கிறார்கள். பப்புமாமாவின் அடுத்த வாரிசாக மாந்திரீகப் பதவிபெற விரும்புபவர்கள்தான் அதில் பெரும்பாலானவர்கள், அவர்களில் யாராவது ஒருவரைத் தேர்ந்தெடுக்காமல், சொந்தச் சகோதரியின் மகன் என்ற ஒரே பிரத்தியேகக் காரணத்துக்காகத் தன்னுடைய தலையில் இந்த முள்கிரீடத்தை வலிய அடித்து ஏற்றுவது கஷ்டமான ஒரு நிலைமைதான்!

மாந்திரீகப் பதவியேற்றுக் கொள்ளும் குடும்ப உறுப்பினருக்கு பெரும் புகழும் நல்ல வருமானமும் கிடைக்கும் என்பது உண்மைதான். இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த, மாந்திரீகக்

கர்மங்கள் நடத்தப் பயன்படும் கொட்டாரப் பகுதியையும், இந்த வீட்டையும், சுற்றியுள்ள நிலப்பரப்பையும் நிர்வகிக்க வேண்டியது மாந்திரீகனின் கடமைதான். குடும்பத்தினர் மட்டுமின்றி ஊராரும் மிகவும் கௌரவமாக நடத்துவார்கள் என்பதும் சரிதான். ஆனால், அம்மாவின் ஒரே மகனான நான் என்னுடைய வாழ்க்கையின் எல்லாச் சுகங்களையும் தியாகம் செய்துவிட்டு ஒரு மாந்திரீகனாகி... பிரம்மச்சாரியாகக் காலம் தள்ளுவதா?

இனிமேல் எதைப் பற்றியும் யோசித்துப் பயனில்லை. மூழ்கியெழுந்து ஈரத்துணியுடன் வருமாறு அல்லவா காரணவர் (தாய்மாமா) கட்டளை இட்டிருக்கிறார். கீழ்ப்படிந்து நடப்பதைத் தவிர வாய், திறந்து அபிப்பிராயம் சொல்லும் உரிமைகூட இல்லாத அடிமையல்லவா நான்?

அப்பாவைப் பார்த்த நினைவே இல்லை. ஊரின் பெரிய கோயிலைச் சார்ந்த ஹோம மண்டபத்தில் தேவாரக்காரராக (இறை ஊழியம் செய்பவராக) இருந்த ஏதோ ஒரு துளு பிராமணராம் அவர். தனக்கு இரண்டு வயதும், தன்னுடைய சகோதரிக்கு ஒரு வயதும் ஆனபோது திருமேனி (கோயில் பூசாரியைக் குறிப்பிடும் சொல், இங்கு குமாரனது தந்தை) அவரது சொந்த ஊரான மங்கலாபுரத்துக்குப் போய் விட்டாராம். அங்கு அவருக்கு அந்தர்ஜனமும் (அந்தர்ஜனம் - வீட்டைவிட்டு வெளியேறாத பெண்மணி. நம்பூதிரி வீட்டுப் பெண்மணிகள். இங்கு அவரது சொந்த மனைவியைக் குறிக்கிறது), குழந்தைகளும் இருந்தார்களாம். நாயர் குடும்பத்தில், நம்பூதிரி உறவால் பலியாக்கப்பட்ட துர்பாக்கியசாலியான தன்னுடைய தாய். அப்பாவின் முகம்கூட நினைவிலில்லாத துரதிர்ஷ்டக்காரன் குமாரன் என்கிற நான்.

படிப்பில் அவ்வளவு கெட்டிக்காரனல்ல. இருந்தும் மாமா அப்படியே விட்டுவிடவில்லை. வீட்டில் உட்காரவைத்து சித்தரூபம், அமரகோசம், மாஹம், மகாபாரதம், பகவத்கீதை போன்றவற்றைக் கற்பித்தார். தென்புற முற்றத்தில் நின்றிருந்த கிளிமரத்தின் (ஒரு வகை மரம்) எத்தனையோ கிளைகளை உடைக்கவைத்தது, பெரும்பாலும் தன்னுடைய முதுகும், தொடைகளும்தான்.



குருவான தாய்மாமனிடம் மிகச் சிறுவயதில் ஏற்பட்ட பயம் இன்றும் தன்னுடைய மனத்தில் படம் விரித்து ஆடிக்கொண்டிருக்கிறது. அவருடைய வாய்மொழிக்கு எதிர்மொழி கிடையாது. மாமாவிடம் பயம் இருந்தாலும் இளமையின் சலனங்கள் தன்னைவிட்டுப் பிரிய அனுமதித்ததில்லை. புகைபிடித்தல், சூது விளையாட்டு, குடி, பெண்ணுறவு போன்றவற்றில் நிபுணத்துவம் பெற்றுவிட்டிருந்தேன். நிறைய விஷயங்களை மாமாவின் காதுக்கு எட்டவிடாமல் அம்மா மறைத்திருக்கிறார். அப்படியும் சிலவற்றை அவர் தெரிந்துகொள்ள நேர்ந்தது. அப்படித் தெரிய நேர்ந்த ஒவ்வொரு முறையும் அடி, உதைகள் தாராளமாகவே கிடைத்தன.

மாந்திரீகன் மோசமானவனாக இருந்தால் மொத்தக் குடும்பமுமே அழிந்துவிடும் என்பது நம்பிக்கை. தன்னால் பாதை தவறாமல் முன்னேறிச் செல்ல முடியுமா?

"குமாரா!" - வீட்டின் மேற்குப் புறமிருந்த நிலவறையிலிருந்து மாமாவின் அலறல் கேட்டது.

குமாரன்தம்பி குளத்தை நோக்கி ஹனுமானைப் போல் பாய்ந்தான்.

எண்ணிக்கை தவறாமல் நூற்றியொரு தடவை மூழ்கி எழுந்தான். பிறகு ஈரமான உடையுடன் மேற்குப் புறமிருந்த நிலவறையை லட்சியமாக்கி ஓடினான்.

நிலவறை வாசற்படிக்கு வந்த குமாரன்தம்பி மலைத்துப் போனான். இருளடைந்து கிடந்த நிலவறை இப்போது வெளிச்சத்தால் நிறைந்திருந்தது. ஏழுதிரிகளில் எரிந்து கொண்டிருந்த நிலவிளக்கின் இருபுறங்களிலும் ஏராளமான சிறிய எண்ணெய் விளக்குகளும், பந்தங்களும் பொருத்தப்பட்டிருந்தன.

பத்மாசனமிட்டு அமர்ந்து துளசி தளங்களால் (இலைகளால்) அர்ச்சனை செய்து கொண்டிருந்த பப்புத் தம்பியிடம் அன்றுவரை காணாத அமானுஷ்யமான ஒளியைக் கண்ட குமாரன்தம்பி, தன்னையும் மீறிக் கைகளைக் கூப்பினான்.

"குமாரா வந்துட்டியா?" - கண்களைத் திறக்காமல் பப்புத்தம்பி சன்னமான குரலில் கேட்டார்.

"வந்துட்டேன்!" குமாரன்தம்பி மிகவும் பணிவுடன் பதிலளித்தான்.

பப்புத்தம்பி மெதுவாகக் கண்களைத் திறந்தார். மருமகனை உற்றுப் பார்த்த பிறகு மெதுவாக எழுந்தார்.

"நிலவறையின் கதவை மூடிவிட்டு விளக்கிற்கு முன்னால் வந்து நில்" - தாழ்ந்த குரலில் கட்டளையிட்டார்.

நிலவறையின் கதவை மூடித் தாழ் போட்டபோது குமாரன் தம்பியின் மனம் நடுங்கியது. மாமாவின் தோற்றமும் தோரணையும் மாறிவிட்டிருந்தது. அவரது உடம்பே நான்கு மடங்கு பெரிதாகியிருக்கிறது!

நிலவறைக்குள் சிறகடியோசை! நான்குபுறச் சுவர்களி லிருந்தும் வீணை ஒலி உயர்ந்து கொண்டிருந்தது!

அதிசயக் காட்சிகள் நிறைந்த கனவு உலகத்திற்குள் அகப்பட்டதுபோல், மலைத்துப்போய் நின்றிருந்த அனந்தரவனது (மருமகனது) காதுகளில் மாமாவின் கட்டளை கேட்டது.

"கீழேயுள்ள கிண்டியை எடுத்து வலது உள்ளங்கைப் பகுதியில் வை. பிறகு இதுபோல் நின்றுகொண்டு நான் சொல்லித்தரும் மந்திரங்களைத் திரும்பச் சொல்."

மாமாவின் கட்டளைப்படி கிண்டியை எடுத்து உள்ளங்கையில் வைத்த பிறகு, மாமாவைப் பின்பற்றி வலது காலை மடக்கி, பாதப் பகுதியை வயிற்றின் இடதுபுறத்தில் உறுதியாகப் பதிய வைத்தான்.

ஒற்றைக்காலில் நின்றபோது அடிவயிற்றில் வலி தோன்றியது. கீழே விழுந்து விடுவோமென்றும் தோன்றியது.

"பயப்படாதே, குமாரா! பழக்கப்பட்டுவிட்டா சிரமம் தெரியாது" - மாமா உபதேசித்தார். பிறகு கருடசேவையின் மந்திரத்தை ஒவ்வொரு வரியாகச் சொல்லித் தந்தார். ஒவ்வொரு



வரியையும் பல தடவை திரும்பச் சொன்ன பிறகு, அது மருமகனின் மனத்தில் பதிந்துவிட்டது என்று அவரது மனத்துக்கு உறுதியான பிறகே அவர் மந்திரோபதேசத்தைத் தொடர்ந்தார். மந்திரோபதேச வேளையில் மாமா மலர்ந்த முகத்துடன் சிரித்தபடி இருந்தது மருமகனுக்குப் புதிய அனுபவமாக இருந்தது.

புத்தூர் வீட்டிலிருந்து கூப்பிடு தொலைவிலுள்ள சுப்ரமண்யசாமி கோயிலில் திருப்பள்ளி எழுச்சி பாடிய சங்கநாதம் முழங்கியது. விடிவதற்கு நேரம் இன்னும் அதிகமில்லை.

மந்திரோபதேசம் முடிவடைந்தது மாமா, மருமகனை அருகே வருமாறு அழைத்தார். மிகவும் தாழ்ந்த குரலில் அவர் சொன்னார்: "நான் இப்போ உனக்கு உபதேசித்தது கருடசேவைக்கான ஆரம்ப மந்திரங்கள் மட்டும்தான். தினமும் விடியற்கருக்கலில் எழுந்து, நூற்றியொரு தடவை குளத்தில் மூழ்கி எழுந்து, பூஜை அறையின் வாசற்படியருகே ஒற்றைக்காலில் நின்று இந்த மந்திரங்களை மனத்திற்குள் உருவிட வேண்டும்!"

"சரி மாமா" - கூப்பிய கைகளுடன் அனந்தரவன் பதிலளித்தான்.

"அது மட்டும் போதாது. இன்று உன்னுடைய புனர்ஜன்மம் நடந்திருக்கிறது. இனிமேல் நீ பழைய குமாரன் இல்லை. புத்தூர் பரம்பரையின் மகா மாந்திரீகனும், விஷக்கடி வைத்தியனுமான புதிய குமாரன் தம்பி நீ. உன்னுடைய பழைய வாழ்க்கை நிகழ்ச்சிகளையெல்லாம் நீ மறந்துவிட வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும் நீ பிரம்மச்சரிய விரதத்தை மீறக்கூடாது. ஒரு குடும்பஸ்தனாக மாற வேண்டுமென்ற மோகம் உன்னை அடிமைப்படுத்தும் நிமிடத்தில், நம் பரம்பரையைச் சேர்ந்த வேறொரு உறுப்பினரை வாரிசாக்கிவிட்டு, நீ மாந்திரீக வாழ்க்கையிலிருந்து விலகிவிட வேண்டும். புரிந்ததா?"

"புரியுது மாமா... எல்லாத்தையும் நீங்க சொன்னபடியே செய்யிறேன்."

"இரு... இறைச்சி, மது எல்லாத்தையும் சுத்தமா ஒதுக்கிடணும். தொடக்கூடாது. புகைபிடிக்கக்கூடாது. நான் இறந்த

நாற்பத்தியோராவது நாள் நீ நம்மகொட்டாரத்துக்குப் போகணும். அதன் சாவி என் பெட்டியில் இருக்கிறது. அறையைத் திறந்து பீடத்திலுள்ள உடைவாளைக் கையிலெடுத்து கருடதேவனை ஒரு நாழிகை (25 நிமிடங்கள்) நேரம் தியானிக்க வேண்டும். அதற்குப் பிறகு நமது மங்குப் பாட்டியையும், சாத்து மாமாவையும் மற்ற பித்ருக்களையும் தியானிக்க வேண்டும். குடும்ப யக்ஷி(பரதேவதைகளில் ஒன்று. வணக்கத்திற்குரிய மோகினி)யையும் வணங்கிவிட்டு வாளை அதன் பழைய இடத்திலேயே வைக்க வேண்டும். பிறகு பீடத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ள ஓலைச்சுவடிக் கட்டுகளைக் கவனத்துடன் எடுத்துக் கொண்டு அறையைப் பூட்டிவிட்டு வெளியே வர வேண்டும். அந்த ஓலைக்கட்டில் ஐந்து சுவடிகள் உள்ளன. முதல் சுவடியில் நம் பரம்பரையின் வரலாறு உள்ளது. மற்ற நான்கு சுவடிகளிலும் கருடசேவை, அனுமான்சேவை போன்ற பிற சேவைகளுக்குரிய ரகசிய மந்திரங்கள் உள்ளன. ஓலைச் சுவடிகளையெல்லாம் படித்து முடித்தவுடன் திரும்பவும் கொண்டு போய் கொட்டாரத்தின் பழைய இடத்திலேயே வைக்க வேண்டும். அதன் பிறகு அந்த அறையை நீ ஒருபோதும் திறக்கவே கூடாது. புரிஞ்சதா?"

"புரிஞ்சது மாமா!"

"இன்னும் ஒரு விஷயம். மரணம் நெருங்கிவிட்டதுன்னு எப்போ உனக்குத் தோணுதோ, அந்த நிமிடமே நீ வேறொரு வாரிசைக் கண்டுபிடித்து மந்திரோபதேசம் தரணும். தலைமுறை தலைமுறையா இந்த வழக்கம் தொடரணும். கருடசேவை மூலமா விஷக்கடிச் சிகிச்சையையும் மந்திர கர்மங்களையும் நடத்தும் ஒரு மகாமந்திரீகன் எக்காலத்திலும் இந்தப் பரம்பரையில் இருக்கணும். பிந்தைய தலைமுறைக்கு மந்திரோபதேசம் தராம ஏதாவது ஒரு மாந்திரீகன் இறந்துபோக நேர்ந்தால், அவனுடைய ஆத்மா அனாதைப் பிணமா இந்த வீட்டுக்கும், ஊருக்கும் ஒரு தொந்தரவா அலைஞ்சு திரியும். பிரம்மச்சரியம் தவறுகிற மாந்திரீகனது நிலையும் இதுவேதான். அதோட பரம்பரையின் ஸித்தியும் அழிஞ்சு போய்விடும்."



மாமாவும் அவருக்குப் பின்னால் மருமகனுமாக நிலவறைக்கு வெளியே வந்தபோது பொழுது விடிந்திருந்தது. அப்போதும் உறங்காமல் கண் விழித்தபடி வீட்டின் மேற்குப்புற முற்றத்தில் அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தார், வயதான குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி.

"அக்கா தூங்கலையா?" - பப்புத்தம்பி அன்பு நிறைந்த குரலில் கேட்டார்.

"நான் எப்படிப் பப்பு தூங்க முடியும்? ஆமாம்... உனக்கு ஏன் எல்லாத்துலயும் இவ்வளவு அவசரம்?"

"என் காலம் முடியுறதுக்கு இன்னும் சில நாழிகைகள்தான் இருக்கு" - பப்புத் தம்பியின் குரலில் பதற்றம் தெரிந்தது.

அறுபத்தியேழு வயதான குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி, அறுபத்தியிரண்டு வயதான சகோதரனை அருகில் அழைத்து வாஞ்சையுடன் அணைத்தார்.

"வீண் வார்த்தைகள் பேசாதே பப்பு!"

"வீண் வார்த்தைகள் இல்லை அக்கா... நான் போக வேண்டிய நேரம் வந்துடுச்சு!"

# 3

தென்புற அறையில் சப்ரமஞ்சக் கட்டிலில் நீண்டு நிமிர்ந்து அமைதியாகப் படுத்துக் கிடந்த பப்புத்தம்பியின் அருகில் ஈரமான விழிகளுடன் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அமர்ந்திருந்தார். கட்டிலின் தலைமாட்டுப் பகுதியில் பணிவுமிக்கவனாக நின்று கொண்டிருந்தான் குமாரன்தம்பி.

சகோதரியின் துயரம் துடிக்கும் கண்களை உற்றுப் பார்த்த பப்புத்தம்பி சொன்னார்: "வருத்தப்படாதே அக்கா... எனக்குக்

கொஞ்சம் 'கங்கா தீர்த்தம்' தந்துட்டு 'பித்ருக்களைத் தியானம் செஞ்சுட்டிரு."

பிறகு, மருமகனுக்கு நேராகப் பார்வையை ஓட்டிய பப்புத்தம்பி உத்தரவிட்டார்: "நீ சீக்கிரமாப் போய் குளித்துவிட்டு, பூஜையறைக்கு முன்பாக நின்று கருடசேவையைத் தொடங்கு!"

குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி எழுந்து சென்று பூஜையறையைத் திறந்தார். மச்சுப் பகுதியில் கட்டித் தொங்க விடப்பட்டிருந்த, கங்கா ஜலம் நிறைந்த சொம்பை அவிழ்த்து எடுத்தார்.

வெகு நாட்களுக்கு முன்பு பெரிய தாய்மாமா தேவன் நாராயணன்தம்பி காசிக்குப் போய்த் திரும்பி வந்தபோது கொண்டு வந்த கங்காதீர்த்தம் அது. அவருடைய மரண சமயத்தில் சாத்து மாமா அவருக்குக் கொடுத்ததும் இதே சொம்பில் இருந்துதான் என்று கேள்விப்பட்டிருந்தார். அதற்குப் பிறகு சாத்துமாமாவின் மரணத்தின்போது தானேதான் துளசியிலையை சொம்பிலுள்ள நீரால் நனைத்து கங்கா நீர்த்துளிகளை அவரது வாயில் ஊற்றிக் கொடுத்தோம். இதோ இப்போது தன் உடன்பிறந்த சகோதரனின் கடைசிப் பானமாக இதே தீர்த்தத்தைக் கொடுக்கப் போகிறோம்.

சொம்புடன் கட்டிலை நெருங்கிய அக்காவிடம் பப்புத்தம்பி புன்னகையுடன் கூறினார்: "அந்த மொந்தையிலிருந்து என் வாயில் கொஞ்சம் தீர்த்தத்தை ஊற்று அக்கா!"

விசும்பல்களை முற்றிலுமாக அடக்கிக்கொண்டு குஞ்ஞுக் குட்டித் தங்கச்சி மொந்தையைச் சாய்த்துச் சகோதரனின் திறந்த வாய்க்குள் தீர்த்தத்தை ஊற்றினார். இரண்டு வாய் குடித்ததும் பப்புத் தம்பி மந்திரித்தார்: "போதும் திருப்தியாகி விட்டது!"

"அக்கா...." அன்பு நிரம்பி வழியும் குரலில் பப்புத்தம்பி அழைத்தார்.

"என்ன பப்பு?" - அக்காவின் கேள்வி, ஓர் அலறலின் மேலங்கி அணிந்து கொண்டது.



"நான் நம்ம காரணவர்களிடம் செல்கிறேன். அதோ பார், என்னை அழைத்துக் கொண்டு போவதற்ச்சுட்டுப் போறதுக்காக கிருஷ்ணப் பருந்து வந்திருக்கிறது."

பப்புத்தம்பியின் கண்கள் மூடிக் கொண்டன. இனி ஒரு போதும் தன்னுடைய சகோதரனின் விழிகள் திறக்கப் போவதில்லை என்று குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் மனத்துக்குத் தோன்றியது. அவருடைய முகபாவமே மாறிவிட்டது. கையிலிருந்த சொம்பைத் தரையில் வைத்த பிறகு, எழுந்து கிழக்குப் புறத்தைப் பார்த்தபடி கூப்பிய கைகளுடன் நின்றார். கண்களைமூடி மனமுருகிப் பிரார்த்தனையில் ஈடுபட்டார்.

"சிறய்க்கல் கோயில் பகவதியே, கோவிலகத்தை விட்டு இங்கு வந்து சேர்ந்த மங்குப்பாட்டியே, மாந்திரீகத் தாத்தாவே, தலைக்கு மேற்புறமாக இருக்கிற பித்ருக்களே, தேவன் நாராயணன் மாமா, சாத்துமாமா, குலதேவதையாள கருட பகவானே... என் ...கமான சகோதரனை ஏற்றுக் கொள்ளுங்கள்."

குளித்துவிட்டு வந்த குமாரன்தம்பி பூஜையறைக்கு முன்புறம் ...றைக்காலில் நின்றுகொண்டு கருடசேவையை ஆரம்பித்தான்.

பிரார்த்தனையில் மூழ்கி, எல்லாவற்றையும் மறந்து போயிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியோ, கருடசேவையில் ஆழ்ந்து போயிருந்த குமாரன்தம்பியோ, மரணத்தின் கைகளுக்குள் அகப்பட்ட பப்புத்தம்பியோ அதைப் புரிந்து கொள்ளவில்லை. ஆனால், ஒரே ஒரு நபர் மட்டும் அதைப் பார்த்துப் பயந்தாள் - அவள், சமையற்காரி நாணிக்குட்டி!

நடுமுற்றத்தை நோக்கிப் பாய்ந்துவந்த கிருஷ்ணப் பருந்து ...மாகக் குரலெழுப்பியவாறு சிறகுகளை வீசியடித்து வீட்டின் ...புறப்பகுதி முழுவதையும் வட்டமிட்டுவிட்டு, பப்புத்தம்பி ...திருந்த சப்ரமஞ்சக் கட்டிலை வலம் வந்தது.

நாணிக்குட்டியின் அலறலைக் கேட்டுக் கண்களைத் திறந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அந்தக் காட்சியைக் கண்டார். ...பரையின் தர்மதேவதையான கிருஷ்ணப்பருந்து - கருட

பகவான், தன்னுடைய உடன்பிறப்பின் கட்டிலுக்கு மேற்புறமாகக் கட்டிலை வலம் வருகிறது.

"கருட பகவானே! என் பப்புவை நீங்கள்தான் பத்திரமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்." - மலரப் போகும் மொட்டுப்போல் கைகளைக் குவித்து வணங்கிய குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி பரிதாபமான குரலில் வேண்டிக் கொண்டார்.

கருடன் நடுமுற்றத்தின் வழியாகப் பறந்து ஆகாய மார்க்கமாக உயர்ந்தது. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி, தன் சகோதரனுக்கு அருகே சென்று அவன் முகத்தை வலது கையால் வருடினார்.

அவர் திடுக்கிட்டார். தன் பப்பு இறந்து விட்டிருக் கிறான். அவன் சொன்ன வாக்கைக் காப்பாற்றியிருக்கிறான். அவன் பித்ருக்களின் (மூதாதையரின்) இடத்திற்குக் கருட வாகனத்தில் ஏறிப் பயணமாகியிருக்கிறான்!

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி சகோதரனின் சலனமற்ற உடம்பின் மீது விழுந்தார். நாணியின் அலறல் சத்தம் குமாரன்தம்பியின் ஜபத்திற்குத் தடையேற்படுத்தியது. அவன் கருடசேவையை முடித்துக் கொண்டு மாமாவின் உயிரற்ற உடம்பை நெருங்கினான்.

புத்தூர் தறவாட்டின்(பரம்பரையின்) எல்லாக் கிளையினரும் செய்தியறிந்து அங்கு வந்து குழுமினர். இறப்பதற்கு முன்பாக பப்புத்தம்பி தன்னுடைய மருமகனான குமாரன்தம்பிக்கு மந்திரோபதேசம் செய்த விவரத்தை எல்லோரும் தெரிந்து கொண்டனர். அருகதையற்றவனுக்கு மாந்திரீகப் பதவி கொடுத்த தறவாட்டுக் காரணவரை (குடும்பத் தலைவரை) அவர்கள் எல்லோரும் மனமாரச் சபித்தார்கள்.

பரம்பரையின் ஆசாரத்தையொட்டி பப்புத்தம்பியின் உடலை ஒரு பெட்டியில் வைத்து உப்பையும் கற்பூரத்தையும் நிரப்பி பரம்பரையின் குடும்பச் சொத்தான கொட்டார மைதானத்தில் சிதையூட்டினர். அப்போதே சுவர் எழுப்பி, மாடமும் அமைக்கப் பட்டது. வரிசையாக நிற்கும் மாடங்களில் ஒன்பதாவது மாடம் பப்புத்தம்பியினுடையது.



குமாரன்தம்பியின் குணத்திலும், வாழ்க்கை முறையிலும் ஏற்பட்ட மாற்றங்கள் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்கு அதிகமான வியப்பையும் அதைவிட அதிகமான மகிழ்ச்சியையும் ஏற்படுத்தின.

அமைதியானதாக மாறிவிட்ட அவனது நடவடிக்கைகள் - காலையிலும் மாலையிலும் தவறாமல் குளியலும், கருடசேவையும். ஒரு யோகியைப் போல் எப்போதும் தியானம். தினமும் மாலை வேளையில் கொட்டாரத்துக்குச் சென்று, குருவான தாய்மாமனின் மாடத்தில் விளக்கேற்றித் தொழுதான். குமாரன்தம்பி முற்றிலும் ஒரு புது மனிதனாக மாறியிருக்கிறான்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் இதயத்தில் மகிழ்ச்சியும், பெருமிதமும் ஒன்று சேர்ந்து ஆனந்த நடனமாடின. அவர் நாணிக் குட்டியிடம் சொன்னார்: "அடியே, குமாரன் எப்படி மாறிப்போயி ட்டான் பார்த்தாயா? உனக்கு ஒரு விஷயம் தெரியுமா? புத்தூர் தறவாட்டின் மேன்மைக்கு இதுவரையில எந்தக் குறையும் ஏற்பட்டதில்லை; இனிமேலும் ஏற்படாது."

நாணிக்குட்டி இளக்காரமாக நீட்டிமுழக்கி முனகினாள். "ம்... ம்..." அவளுடைய மனத்திற்குள் சிரிப்பு பொங்கி வழிந்து கொண்டிருந்தது.

'குமாரன்தம்பியைப் பத்தி எனக்குத் தெரிஞ்ச அளவுக்கு, அவங்க அம்மாவுக்குத் தெரியுமா? இதெல்லாம் எவ்வளவு நாளைக்கு?' இப்படித்தான் ஓடின அவளது மனத்தின் சிந்தனை.

## 4

லௌகீக விஷயங்களில் மனத்தைத் திருப்பாமல், அதைப் பிரம்மத்தில் நிலைநிறுத்துபவன்தான் உண்மையான பிரம்மச்சாரி என்று மாமா சொல்லியிருக்கிறார். அப்படியென்றால்

பெண்களுடன் உடலுறவு கொள்வது போன்ற ஒரு தவறல்லவா அவர்களை மனத்தால் நினைப்பதும்?

மாந்திரீகனாகிவிட்டதும் புனர்ஜன்மம் பெற்றதாக மாமா குறிப்பிட்டது, தன்னுடைய எதிர்காலத்திற்கான வழியை அவர் சுட்டிக் காட்டியதாகத்தான் தோன்றுகிறது. தன் முந்தைய கால வரலாற்றை அவர் ஓரளவிற்காவது புரிந்து கொண்டிருக்க வேண்டும். பழையதையெல்லாம் மறக்கவும், எதிர்கால வாழ்க்கையைக் களங்கப்படுத்தாமல் பாதுகாக்கவும் மந்திரோபதேசம் பெற்ற அன்றைய இரவிலேயே திடமாக விரதமிருக்கத் தீர்மானித்த விஷயங்கள்.

இருந்தும் ஏன் இந்த நள்ளிரவில் உறக்கத்துடன் கலக்காமல் வெறுமனே படுக்கையில் புரண்டும் திரும்பியும் படுத்தபடி கூடாத விஷயங்களைப் பற்றியெல்லாம் யோசிக்க நேர்கிறது?

மாமா இறந்து இன்றுடன் நாற்பது நாள்களாகின்றன. இதுவரையில் மனத்தை அடக்கி நிறுத்தத் தன்னால் முடிந்திருக்கிறது. சுயக்கட்டுப்பாட்டை இழக்காமல் பத்திரமாகக் காப்பாற்ற முடிந்திருக்கிறது. நாளைய பொழுது தன்னுடைய மாந்திரீக வாழ்க்கையின் அதிமுக்கியமான நாள். நாற்பத்தியோராவது தினத்தின் சந்தியா வேளையில் குளித்துச் சுத்தமான பிறகு, தறவாட்டுக் கொட்டாரத்தின் அறைப்புரை (பூஜையறையை)த் திறந்து உடைவாளைக் கையிலெடுத்துப் பிரார்த்திக்க வேண்டும் என்று மாமா கூறியிருக்கிறார்! தியானத்திற்குப் பிறகு மகத்தான, மிகவும் அரிதான ஓலைச் சுவடிகளை எடுத்து, படிக்கத் தொடங்கி 'மகா மந்திரீகன்' ஆவதற்கான முயற்சியில் ஈடுபடவேண்டும். அனுஷ்டானங்களில் ஏதேனும் தவறு நேர்ந்து விட்டால், அதனால் ஏற்படும் மோசமான விளைவுகள் குறித்தும் மாமா முன்னெச்சரிக்கை தந்திருக்கிறார்.

இருந்தும் என் மனம் முட்டாள்தனமான ஒரு குரங்காக மாறிவிட்டிருக்கிறது. இன்று மாலை நேரத்திலிருந்து மனத்தின் திடம் லேசாக இளகத் தொடங்கியிருக்கிறது.



கிழக்குப்புறக் குளத்தில் குளித்து கருடசேவையைத் தொடங்குவதற்காக வரும் வழியில், சமையலறையின் வடக்குப் பகுதியில் நின்று, வைத்த கண் வாங்காமல் தன்னையே பார்த்துக் கொண்டிருந்த நாணிக்குட்டியைக் கவனிக்க நேர்ந்தது. இதற்கு முன்பும் எத்தனையோ தடவை தன்னுடைய கவனத்தைக் கவர்வதற்கு அவள் முயன்றிருக்கிறாள். அப்போதெல்லாம் மனத்தைக் கடிவாளமிட்டு நிறுத்த முடிந்த தன்னால்... இன்று மட்டும் அது முடியவில்லை!

அவளுடைய புன்சிரிப்புக்குப் பதில் தராமலிருக்கத் தன்னுடைய உதடுகளால் முடியவில்லை. 'இரவில் சந்திக்கலாம்' என்று அவள் சைகை காட்டியபோது முடியாதென்று பதிலளிக்கத் தன்னுடைய கைகள் ஒத்துழைக்கவில்லை. தனது மௌனத்தை அவள் சம்மதமாகவே எடுத்துக் கொண்டிருப்பாள்.

தறவாட்டின்-இந்த வீட்டின் காரியஸ்தராக இருந்த குமாரசாரின் மகள் நாணிக்குட்டி. குமாரசாருக்கு இரண்டு பெண்கள், நாணிகுட்டியும், லக்ஷ்மிக்குட்டியும். இரண்டு வருடங்களுக்கு முன்பு லஷ்மிக்குட்டி இறந்து போனாள். அதற்குப் பிறகு, குமாரசார் மனநோயளியாக மாறிப்போனார். இப்போது தனது மனைவியுடன், இந்தக் குடும்பத்துக்குச் சொந்தமான இடத்தில் சிறியதாக ஒரு வீடுகட்டிக் குடியிருக்கிறார். நாணிக்குட்டி இந்த வீட்டின் சமையற்காரியாக வந்து சேர்ந்து ஏறத்தாழப் பதினைந்து வருடங்களாகின்றன.

நாணிக்குட்டி கறுப்புநிறம்தான். இருந்தாலும் கட்டழகு அமைந்தவள். அவளுடன் எத்தனையோ வருடங்களாக முறையற்ற உறவு கொண்டிருக்கிறோம். கடந்த நாற்பது நாள்களுக்கு முன்பு வரை ஊருக்குத் தெரியாமல், வீட்டுக்குத் தெரியாமல் இந்தத் தொடர்பு நீடித்தது. அவளைவிட அழகியான அவளது தங்கையிடமும் மிகவும் நெருக்கமாகவே இருந்தோம். அவளுடைய மரணத்துக்குக்கூட நான் ஒரு காரணமல்லவா?

கடவுளே, நான் எதைப் பற்றியெல்லாம் யோசிக்கிறேன்? அதுவும் மேன்மையான மனிதனும், யோகீஸ்வரனுமான

பப்புமாமா பயன்படுத்திய சப்ரமஞ்சக் கட்டிலில் படுத்துக்கொண்டு அவருடைய வாரிசான நான் மனத்தை தர்மத்துக்கு விரோதமான வழியில் அவிழ்த்து விட்டிருக்கிறேன்!

கூடாது! நாணிக்குட்டி மட்டுமல்ல... வேறு எந்த ஒரு பெண்ணின் உருவமும் தன்னுடைய மனச்சுவரைக் கடந்து வரக்கூடாது. எந்தப் பெண்ணைக் குறித்த நினைவும் தன் மனத்தை அலைக்கழிக்க அனுமதிக்கக்கூடாது. நான் ஒரு பிரம்மச்சாரி. சாத்வீகமான மாந்திரீகன். புத்தூர் தறவாட்டின் கருடபக்தன். பப்புத்தம்பியின் அடுத்த வாரிசு!

வீட்டின் தென்புற அறையில் இப்படிப் படுத்திருப்பது ஒருவேளை ஆபத்தை வரவழைக்குமோ? சமையலறை வாசலையொட்டி நாணிக்குட்டி இரவில் படுத்திருப்பாள். அவள் படுத்திருக்கிற இடத்தை ஒட்டியபடி இருப்பதுதான் அம்மாவின் படுக்கையறை. ஆனால், அம்மா படுத்தவுடனே ஆழ்ந்த உறக்கத்துக்குப் போய்விடக் கூடியவர். சிறிய சத்தங்கள் எதுவும் அவரை எழுப்பிவிடாது. அம்மாவின் இந்தப் பலவீனத்தைப் பயன்படுத்தித்தான் எத்தனையோ வருடங்களாகத் தனது மேற்குப்புற அறையிலிருந்து... இரவு நேரங்களில், வெளிப்புறமாக வந்து சமையலறைக் கதவைத் தட்ட முடிந்திருக்கிறது. நாணிக்குட்டியுடன் இரவுகளைக் கழிக்கவும் முடிந்திருக்கிறது.

இன்று அவள் சமையலறை வாசலிலிருந்து எழுந்து திண்ணை வழியாகக் கிழக்குப் புறம் வந்து இந்த அறைக்குள் வந்து விடுவாளோ? அப்படி வந்து விட்டால்... தான் குழப்பத்தில் ஆழ்ந்துவிடமாட்டோமா? அவளுடைய நெருக்கம் தன் திடசித்தத்தைப் பலவீனப்படுத்திவிட்டால்? அவளது ஸ்பரிசம் தன் கடினமான விரதத்தின் உறுதியைத் தகர்த்துவிட்டால்...

காலடியோசை கேட்கிறதே? யாரோ மெதுவாக அடிமேல் அடிவைத்துக் கிழக்குப்புறமாகத் தன் அறையை நோக்கி வருவது போல்... ஆமாம் வருகிறார்கள்!

யோசனைகளின் ஆழத்தின் அமிழ்ந்தும் உயர்ந்தும் தத்தளித்த குமாரன்தம்பியின் மனத்தில் மாமா சொல்லியிருந்த ஓர் உபதேசம் சட்டென்று மேலெழும்பியது.



'சோதனைக் கட்டங்களை நேரிடும்போது நீ மனம் நொந்து கருடபகவானைத் தியானம் செய். அதன் பலன் உனக்கு அனுகூலமாக இருக்கும்.'

குமாரன்தம்பி படுக்கையிலிருந்து எழுந்தான். ஒற்றைக்காலில் நின்று கண்களை மூடி, கருடசேவையைத் தொடங்கினான்.

"ஐயோ! என்னைக் கொல்லுதே!" புத்தூர் வீட்டின் கிழக்குத் தளத்திலிருந்து நாணிக்குட்டியின் இரக்கத்துக்குரிய அலறல் எழுந்தது. அவள் சமையற்கட்டை நோக்கி ஓடிக் கொண்டிருந்தாள். அவளை விடாது துரத்தியபடி கருடனும் விரைந்தது.

"என்னைக் காப்பாற்றுங்களேன்... காப்பாற்றுங்களேன்." நாணிக்குட்டியின் அழுகையொலி உயர்ந்து கொண்டே இருந்தது.

அலறலைக் கேட்டு குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கண்விழித்தார். விளக்கை ஏற்றினார். சமையலறை வாசலுக்கு வந்தபோது அவர் பயந்தே போனார். கிருஷ்ணப் பருந்து நாணிக்குட்டியை அலகாலும், நகங்களாலும் தாக்கிக் கொண்டிருந்தது.

ஏதோ விபரீதம் நடந்திருக்கிறது என்று மோப்பம் பிடித்துவிட்ட குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி உரத்த குரலில் அழைத்தார்: "குமாரா, சீக்கிரமா ஓடிவா!"

அவரது தொடர்ந்த அழைப்புகளின் பலனாக குமாரன்தம்பி தியானத்திலிருந்து கண்களைத் திறந்தான். நடந்ததை யூகித்த குமாரன்தம்பி உரத்த குரலில் வேண்டிக் கொண்டான்: 'கருடபகவானே! தயவு செய்து அவளை விட்டுவிடுங்கள். நாணி இனிமேல் ஒரு போதும் தவறு செய்யவே மாட்டாள்!"

பருந்து நடுமுற்றத்தின் வழியாக மேற்புறமாகப் பறந்து மறைந்தது. வேதனையால் துடித்துக் கொண்டிருந்தபோதும் நாணிக்குட்டியின் மனத்தில் அவமானம், நிர்வாண நடனமாடிக் கொண்டிருந்தது.

குமாரன்தம்பிக்கு கருடசேவையின் சக்தி குறித்த நிரூபணம் நேரடியாகவே கிடைத்து விட்டது. பெண்ணின்பம் பற்றிய

விஷயங்களில் மனம் நழுவிப் பரவும்போதும், கவர்ச்சிகரமான விஷயங்களில் சிக்கிக்கொள்ளப் போகிறோம் என்று தோன்றும் போதும் கருடசேவை தன்னைக் காப்பாற்றி விடுமென்றும், எனவே தன்னுடைய பிரம்மச்சரியத்தைக் கட்டிக்காக்க வேண்டுமென்றும் உறுதியாகத் தீர்மானித்தான்.

இருப்பினும் குமாரன்தம்பிக்கு நாணிக்குட்டியிடம் இரக்கம் தோன்றியது. கருடபகவான் அவளை இப்படித் தாக்கிக் குதறியிருக்க வேண்டுமா? வெறுமனே பயப்படுத்தியிருந்தால்கூட அவள் பின்வாங்கிப் போயிருக்கமாட்டாளா?

நாணிக்குட்டியின் முகத்திலும் கழுத்திலும், முதுகுப் பகுதிகளிலும் ஏற்பட்டிருந்த காயங்களுக்கு, குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி பிண்ட தைலம் தடவினார்.

"அடியே நாணிக்குட்டி! புத்தூர் தறவாட்டின் மாந்திரீகனை வசீகரிக்கிறதுக்காக எப்படிப்பட்ட ஊர்வசியே முயன்றாலும் இதுதான் நிலைமை. புரிஞ்சதா?" - என்று நாணியிடம் அவர் எடுத்துரைக்கவும் தவறவில்லை.

## 5

அன்றும் வழக்கம்போலவே மாலை நேரத்தில் குளியலை முடித்த குமாரன்தம்பி அறப்புரை வாயில்படியில் நின்று கருட சேவை செய்தான். சுப்ரமண்யசுவாமி கோயிலில் தீபாராதனைக்கான வாத்தியங்கள் ஒலிக்கத் தொடங்கியபோது தான் தியானம் முடிவடைந்தது.

"அம்மா, நான் கொட்டாரத்துக்குப் போறேன். அங்குள்ள அறப்புரையிலிருந்து ஓலைச்சுவடிகளை எடுத்துட்டுத் திரும்பி வர்றேன்." - குமாரன்தம்பி, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியிடம் கூறினான்.



"ஓ... பப்பு இறந்து இன்னியோட நாற்பத்தியொருநாள் முடியுது இல்லையா? அதிகமா இருட்டுறதுக்கு முன்பே வந்து விடு, குமாரா. ரொம்பவும் கவனமாக இருக்க வேண்டிய நேரமிது" - மகனுடைய தலையில் கையை வைத்து அனுக்கிரகம் செய்த தாய் உபதேசித்தார்.

மாந்திரீகன் தொடர்ந்து மாந்திரீகப் பாடம் படிக்கத் துவங்கும் நேரம் முதல் கெட்ட சகுனங்களைச் சந்திக்க நேருமென்று அவர் கேள்விப்பட்டிருந்தார். தன் சகோதரன் பப்புத்தம்பிக்கு ஆரம்ப காலத்தில் நேரிட்ட சோதனைகள் ஏராளம். மந்திரோபதேசம் பெற்ற அந்த இரவில் வீட்டு முற்றத்தில் எங்கிருந்தோ எப்படியோ வந்து சேர்ந்த எருமைக் கிடா ஒன்று தன் சகோதரனைத் தாக்க வந்தது. தக்க சமயத்தில் கிருஷ்ணப்பருந்து பாய்ந்து வந்து எருமைக்கிடாவைத் துரத்தியது. மற்றொரு நாள் மத்தியான வேளையில் ஒரு ரத்த ரக்ஷஸ் (காட்டேரி) அழகான ஒரு பெண்ணின் வடிவத்தில் தென்புறமிருந்த சாலையில் நின்று அவனை கைகாட்டி அழைத்தது. அவனுக்குச் சந்தேகம் தோன்றியது. நின்ற நிலையிலேயே கருட சேவையைத் தொடங்கினான். கருடன் பாய்ந்து வந்ததும் அழகி மாயமாக மறைந்துபோனாள்!

அம்மாவின் கவலையையும், வியப்பையும் கண்ட மகன் கூறினான்: "கருடபகவானும் பப்புமாமாவும் என் இதயத்தில எப்பவும் இருக்கிறார்கள் அம்மா. எனக்கு எந்தவிதமான ஆபத்தும் நேராது. இருந்தாலும் நான் சீக்கிரமாவே திரும்பி வர்றேன்."

புத்தூர் தறவாட்டின் பொதுச் சொத்துத்தான் கொட்டாரம் என்ற பெயரில் வழங்கப்படுகிற பழைய ஓலை வேய்ந்த கட்டடமும், அதைச் சேர்ந்த விசாலமான தோட்டப் பகுதியும். சுப்ரமண்யர் கோயிலின் வடக்குப் பகுதியிலுள்ள பெருங்குளத்தின் மேற்குப் புறத்தில் இருப்பது இந்த கொட்டாரம். மாந்திரீகனாகப் பதவி ஏற்கும் நபர் கொட்டாரத்தின் நிர்வாகி. மாந்திரீகர்கள் இறந்து விட்டால் அவர்களை அடக்கம் செய்வது (இங்கு அவர்களது உடம்பை எரித்தபின் மிஞ்சும் எலும்புத் துண்டுகளைப் பத்திரப்படுத்தும் இடம்) அந்த நிலப்பரப்பிற்குள்தான். ஒன்பது கல்லறைகளும் மற்றும்

மாடங்களும் உள்ள அந்தக் கொட்டாரப் பகுதிக்குள் நுழைய ஊராருக்குச் சற்று பயம்தான். அந்தக் குடும்பத்து மாந்திரிகனைத் தவிர, அந்தக் குடும்பத்தின் மற்ற உறுப்பினர்கள கூட அங்கு செல்வதில்லை. புத்தூர் வீட்டிலிருந்து நேராக மேற்குப்புறமாக ஒரு ஃபர்லாங் தூரம் நடந்தால் பெருங்குளம். பெருங்குளத்தை வலம் வந்தால் கொட்டாரத்தை அடையலாம்.

கையில் ஒரு குத்துவிளக்குடன் (இங்கு குத்துவிளக்கு என்பது நாம் பயன்படுத்தும் குத்துவிளக்கு அல்ல. கடப்பாரை வடிவத்தில் இதன் கீழ்ப்புறம் கூர்மையாக மண்ணுக்குள் குத்தி நிறுத்த வசதியாக இருக்கும். மேற்புறத்தில் ஒரு சிறிய சங்கிலி மற்றும் வளையத்துடன் விளக்கு பொருத்தப்பட்டிருக்கும்.) குமாரன்தம்பி கொட்டாரத்துக்குப் புறப்பட்டான். அன்றும் மாலை நேரத்தில் பப்புத்தம்பியின் மாடத்தில் விளக்கு ஏற்றி விட்டு வீட்டிற்கு வந்து மறுபடி குளியலும் கருடசேவையும் செய்தான். அப்போது ஏற்றி வைத்த விளக்கு அணைந்து போயிருக்குமென்று நினைத்துத்தான் குத்துவிளக்கைத் தோளில் போட்டுக் கொண்டு கிளம்பினான்.

கொட்டாரப் பகுதியில் வெளிச்சமே இல்லை. மாடத்தில் ஏற்றியிருந்த விளக்கு அணைந்திருந்தது. கொட்டார முற்றத்தில் குத்துவிளக்கைச் செருகி ஏற்றினான் குமாரன்தம்பி. பிறகு விளக்கை பூஜையறை வாசலருகே நிறுத்திவைத்தான். மடியிலிருந்து சாவியை எடுத்துக் கதவைத் திறந்தான்.

திடுமென்று குமாரன்தம்பியை பயம் சூழ்ந்து கொண்டது. பூஜையறைக்குள் நுழைவதற்குத் தயக்கம் ஏற்பட்டது. உடம்பு மொத்தமும் நடுங்குவதாகவும், வியர்ப்பதாகவும் அவனுக்குத் தோன்றியது.

"பயப்படாதே குமாரா! உள்ளே நுழையலாம்"- அசரீரி கேட்பதுபோல் தோன்றியது. பப்புமாமாவின் குரல்!

குமாரன்தம்பி தைரியத்தை வரவழைத்துக்கொண்டு அறைக்குள் நுழைந்தான். அறப்புரைக்குள் வந்ததும் மனத்தில் தைரியத்தை சேமித்து வைத்திருந்த ஜாடி உடைந்து தகர்ந்தது. அவன் உடல் திடுக்கிட்டு நடுங்கியது.



பீமாகாரமான பறவை ஒன்று அந்த அறைக்குள் வட்டமிட்டுப் பறந்து கொண்டிருந்தது. அதன் சிறகடியோசை அவனுடைய காதுகளில் வெடியோசைகளாகப் பதிந்தன.

கண்களை இறுக்கி மூடினான். பிறகு பப்புமாமாவைத் தியானித்தான். தனக்குத் தெரிந்த கருட மந்திரங்களை உருப்போட்டபடி கருடசேவையைத் தொடங்கினான்.

படிப்படியாகப் பறவையின் சிறகடியோசை ஓய்ந்தது. பூஜையறையில் முழு அமைதி நிலவியது. கருடசேவை முற்றிலும் அமைதி யான சூழ்நிலையில் முடிவடைந்தது.

குமாரன்தம்பி பீடத்தை நெருங்கி உடைவாளை இரு கைகளாலும் எடுத்து உயர்த்திப் பிடித்தான். காலம் கடந்த மாந்திரீகர்களான தாய்மாமன்களையும், பித்ருக்களையும், குடும்பக் காவல் மோகினியையும் தியானித்தபடி சிலநிமிடங்கள் அதே நிலையில் நின்றான்.

பப்புமாமாவை மனத்திற்குள் வரவழைத்து வணங்கிய பிறகு உடைவாளைப் பீடத்தில் வைத்தான். பிறகு பீடத்தின் மேற்புறமிருந்த ஓலைச்சுவடிக் கட்டுகளை வலது கையால் எடுத்தான். பட்டுத்துணியில் கட்டப்பட்டிருந்த ஓலைச்சுவடிக் கட்டுகளை நெஞ்சோடு அணைத்துப் பிடித்தபடி சில நிமிடங்கள் தியானத்தில் ஆழ்ந்தான்.

ஏதோ ஒருவிதமான புதிய ஆவேசத்திற்கு அடிமையாகியிருந்த குமரான் தம்பி வெளியே வந்தான். பூஜையறை வாசலை இழுத்துப் பூட்டினான்.

எரிந்து கொண்டிருக்கும் குத்துவிளக்கின் முன்னால் அமர்ந்து ஓர் ஓலைச்சுவடியையாவது உடனடியாகப் படித்துப் பார்த்தால் என்னவென்று குமாரன்தம்பிக்குத் தோன்றியது. முதல் சுவடி, புத்தூர் தறவாட்டின் தோற்றத்தைப் பற்றியது என்று மாமா ஏற்கெனவே கூறியிருந்தார். தன்னுடைய பரம்பரையின் கதையைத் தெரிந்து கொள்ள குமாரன்தம்பி பரபரத்தான். குத்துவிளக்கின் வெளிச்சத்தில் அவன் பட்டுத்துணியை அவிழ்த்து முதலாவது சுவடியைக் கையில் எடுத்தான்.

'கண்ணூரின் சிறய்க்கல் கோவிலகத்திலிருந்து புறப்பட்டு இந்த ஊரை அடைந்த பழங்கதை' - என்கிற தலைப்பைப் படித்ததும் குமாரன்தம்பியின் ஆவல் அதிகரித்தது. தம்பிமார்கள் (இங்கு தம்பிமார், தங்கச்சிமார் என்பது உறவுப் பெயரல்ல. அது ஒரு குடும்பத்தவரின் பரம்பரைப் பெயர்). கண்ணூரின் சிறய்க்கல் கோவிலகத்திலிருந்து இங்கு வந்து சேர்ந்த மங்குத் தம்புராட்டியின் வம்சத்தவர்கள் என்று கேள்விப்பட்டதுண்டு (தம்புராட்டி - மேற்குலப் பெண்களைக் குறிக்கும் மரியாதை மிக்க சொல்). அந்தக் குடும்பத்தவர்கள் அனைவரும் மங்குப்பாட்டியை தேவிக்கு இணையாக நினைத்து வணங்குவது வழக்கம். ஆனால், தான் உட்பட்ட இப்போதைய இளந்தலைமுறையினருக்கு மங்குப் பாட்டியின் கதையோ, குடும்பச் சரித்திரமோ தெரியாது.

சுற்றுப்புறத்தை மறந்தவனாக குமாரன்தம்பி, முதல் ஓலைச்சுவடியைக் கவனமாக வாசித்தான். வாசித்து முடித்தபோது அவனது இதயத்தில் பெருமிதத்தின் மத்தாப்புகள் ஒளி சொரிந்தன.

எப்படிப்பட்ட ஐதீக சாகசமான வரலாறு இந்தப் புத்தூர் பரம்பரையினுடையது! வீரசாகசமான அனுபவங்களல்லவா தன் மூதாதையருடையது! பிரத்தியேகமாக மங்குப்பாட்டியினுடையது!

ஒரு கதையையோ, சரித்திரத்தையோ வாசித்ததுபோல் தோன்றவில்லை குமாரன்தம்பிக்கு. ஒவ்வொரு சம்பவத்தையும் நேரடியாகப் பார்ப்பதைப் போலவே மனத்தின் வெண்திரையில் அவை ஒவ்வொன்றாகப் பதிந்தன.

புத்தூர் தறவாட்டின் மேன்மையான பாரம்பரியம் தங்கக் கிரீடமணிந்து அவனுடைய மனத்தின் பிரதான முற்றத்தில் வசீகரமாக நடனமாடியது.

அதோ தெரிகிறதே... அதுதான் கண்ணூர் சிறய்க்கல் கோவிலகம்! கேரளச் சிற்பக்கலையின் அடையாளமாக, உன்னதமான வேலைப்பாடமைந்த மணிமண்டபம்!

மணிமண்டபத்தின் முற்றத்தில் ஒரு தேவகன்னியாக நிற்கிறார், கோவிலகத்தின் இளைய தம்புராட்டியான மங்குத் தம்புராட்டி.



கனவு மயங்கும் கருநீல விழிகளில் காந்த சக்தி; கைத்தண்டுகளில் தங்கக் காப்புகள்; கழுத்தில் காசுமாலை; கால் பாதங்களை தழுவியபடி கிடக்கும் தங்கக் கொலுசுகள். எல்லாம் இளைய தம்புராட்டியின் தங்கநிற உடலுடன் போட்டியிடுகின்றன.

தங்க விக்கிரகத்துக்குச் சமமான உடலின் நிர்வாணத்தை மறைக்கும் முலைக்கச்சை அணிந்து, புட்டப்பகுதிகளை மறைத்துக் கீழ்ப்புறமாகப் பரவிய தலைமுடியின் நுனியை முடிந்து பிச்சிப்பூ சூடி, செவ்விதழ்களில் மல்லிகை மொட்டுகள் மலரும் வண்ணம் புன்னகையுடன் தரிசனம் தரும் தேவகன்னிகை! அதுதானே மங்குத் தம்புராட்டி.

"மங்குத்தம்புராட்டியை பெரிய தம்புரான் அழைக்கிறார்."

சபிக்கப்பட்ட ஒரு முகூர்த்தத்தில் ஒரு பணிப்பெண் அறிவித்தாள்.

மங்குத் தம்புராட்டி தன்னையும் மீறி திடுக்கிட்டாள். தயங்கித் தயங்கி பெரிய மாமாவின் முன்னால் வந்தாள். தரையைப் பார்த்தபடி நின்ற தம்புராட்டி, நாட்டை ஆளும் தம்புரானின் வார்த்தைகளைக் கேட்டு தலை முதல் பாதம்வரை நடுங்கினாள். கேள்வி மீண்டும் கேட்கப்பட்டது. "நீ இவனுடன் தொடர்பு வைத்திருக்கிறதா கேள்விப்பட்டது உண்மையா மங்கு? சொல்!"

மங்குத்தம்புராட்டி நடுங்கினாள். கோவிலகம் (அரண்மனை) அதிர்ந்தது. பெரிய தம்புரான் அலறினார்!

தைரியத்தை வரவழைத்துக் கொண்ட மங்குத்தம்புராட்டி மெதுவாகத் தலையை உயர்த்தினாள். பெரிய தம்புரானுக்கு அருகே கைகால்கள் கட்டப்பட்ட நிலையில் நின்று கொண்டிருந்தார் அரண்மனைப் படைத்தலைவரான கேளுநாயர். உடற்பயிற்சியிலும் வீர விளையாட்டுகளிலும், களரி முறைகளிலும் மாந்திரீக வித்தைகளிலும் தேர்ந்தவர். கருட பக்தனான அந்த இளம் வீரனின் முகத்தில் கம்பீரம் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தது. அவரது கைகளில் விலங்கு பூட்டப்பட்டிருந்தது. வாளும் கேடயமும் ஏந்திய இரண்டு வீரர்களுக்கு நடுவில் கோபம்

இன்றி நின்று கொண்டிருந்த கேளு நாயரின் விழிகளுடன் மங்குத்தம்புராட்டியின் நனைந்த விழிகள் கலந்தன. நான்கு நயனங்களும் பயமின்றிக் குசலம் விசாரித்துக் கொண்டன.

பெருமூச்சுகளினுடையதும், பேசமுடியாமல் தொண்டை அடைத்துக் கொண்டதால் ஏற்பட்ட திணறல்களின் நாதத்துளிகள் ராஜ சன்னிதானத்தில் மோதிக்கொண்டபோது மன்னர் (பெரிய தம்புரான்) அலறினார்.

"ராஜத்துரோகியைக் கொண்டுபோய் சிறையிலடையுங்கள்!"

வேறு வழியற்ற வீரர்கள் அரசகட்டளையை நிறைவேற்றினார்கள்.

"மாளு"-பெரிய தம்புரான் தன் சகோதரியை அன்புடன் வார்த்தையை இழுத்து நீட்டி அழைத்தார்.

அழுது வீங்கிய முகத்துடன் மாளுத்தம்புராட்டி (மன்னரின் சகோதரி) மன்னரின் முன்னால் வந்து நின்றாள். சொந்த மகளின் எதிர்கால விதியெழுத்தை அறிய அவள் காதுகளைக் கூர்மைப்படுத்தி நின்றாள்.

"இன்று இவளைப் பத்திரமாகப் பார்த்துக் கொள். நாளைக்கு விடியலில் படிப்பிண்டம் (பிண்டம் வைப்பது என்பது இறந்தவர்களுக்குச் செய்யும் சடங்கு) வைத்து, இவளை வெளியேற்றிவிடு." மங்குவைச் சுட்டிக்காட்டி தம்புரான் கட்டளையிட்டார்.

"இந்தத் தடவை மன்னித்து விடுங்கள் அண்ணா... பெற்றவயிறு பற்றியெரிகிறது" சகோதரி முறையிட்டார்.

"முடியாது மாளு! அரண்மனையின் விதிமுறைகளை மீற நான் தயாராக இல்லை." மன்னர் உறுதியான குரலில் கூறினார்.

மகளது வலதுகையை வலுவாகப் பிடித்த மாளுத்தம்புராட்டி மன்னனிடம் கேட்டாள்: "கேளுவை என்ன செய்யப் போகிறீர்கள்?"

"அவனைக் கொல்ல வேண்டியதுதான்" - இதிலும் மன்னரின் குரல் உறுதியாகவே வெளிப்பட்டது. சொன்ன பிறகு தலையைத் தாழ்த்திக் கொண்டார்.



அன்று இரவு அம்மாவின் மார்பில் முகம் புதைத்து கண்ணீர் சிந்திய மங்கு கேட்டாள்: "கேளு நாயரை, பெரிய மாமா கொன்னுடுவாரா அம்மா?"

"கொன்னுடுவாங்கம்மா!"-மாளு தம்பிராட்டி தீனமான குரலில் பதிலளித்தாள்.

"அவர் சாகமாட்டாரும்மா!" மங்கு மந்திரித்தாள்.

"ஏன் மகளே?"

"நான் இறந்தால்தான் அவரும் இறப்பார்."

"புரியலையே... மகளே?"

"அவரது உயிர் என் வயிற்றில் இருக்கிறது அம்மா!"

"ஐயோ, என் மகளே! மோசம்போயிட்டேனா?" - அது ஒரு வேதனைக் குரலாக இருந்தது.

இரவின் கடைசி யாமத்தில் கணவனான சோமதத்தன் நம்பூதிரிப்பாடுடன் யோசனை நடத்திய மாளு ஒரு தீர்மானத்திற்கு வந்தாள்: 'அதாவது விடிவதற்கு முன்னாலேயே மகள் மற்றும் இளைய மகனுடன் நாட்டைவிட்டே வெளியேறி விடுவதென்று.'

மறுநாள் விடியற்காலையில் நம்பிக்கைக்கு உகந்த சில வீரர்களின் துணையுடன் கைக்கு அகப்பட்ட தங்க ஆபரணங்கள், நாணயங்கள், உணவுப் பண்டங்கள், உடைகளுடன் மாளுவும் அவளது கணவரும் குழந்தைகளும் கோவிலகத்திலிருந்து மறைந்தனர்.

லட்சியம் எதுவுமில்லாமல் அவர்கள் தென்புறமாக நடைபயணத்தைத் தொடங்கினர். மதிய நேரத்தில் பாரத நதியின் (பாரதப்புழ) கரையை அடைந்தனர். குளித்து, சாப்பிட்டு அவர்கள் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும்போது குதிரைகளின் குளம்படிச் சத்தங்கள் கேட்டன. தப்பிக்கும் வழியைப் பற்றி யோசிப்பதற்குள் ஒரு குதிரை வீரர் அருகே வந்துவிட்டார்.

நம்பமுடியாத காட்சியைக் காண்பது போல் அவர்கள் மலைப்புடன் பார்த்தனர், கேளுநாயர்!

குதிரையிலிருந்து கீழே குதித்த கேளு நாயர் மிகவும் சோர்வடைந்து காணப்பட்டார். மங்குத்தம்புராட்டி அவரை இறுகக் கட்டி அணைத்து வாய்விட்டு அழுதாள் - கதறினாள். அன்புக்குரியவளை ஆறுதல் படுத்திய அவர் சொன்னார்: "சிறையிலிருந்து தப்பிச்சு வந்திருக்கிற எனக்குப் பின்னாலேயே படை வீரர்களும் பாய்ந்து வருகிறார்கள்."

பட்டுத்துணியில் முடிந்து வைத்திருந்த ஓலைச்சுவடிகள் சிலவற்றை அவர்களிடம் ஒப்படைத்த கேளு நாயர் தொடர்ந்தார்: "நீ பெற்றெடுப்பது மகனாக இருந்தால், அவன் வயதுக்கு வரும்போது இந்த மந்திரங்களை அவனுக்கு உபதேசிக்க வேண்டும். அவன் பிரம்மச்சரியம் அனுஷ்டித்து, கருடசேவை நடத்தி, விஷக்கடி வைத்தியனாகவும் மாந்திரீகனுமாக மக்களுக்குச் சேவை செய்யட்டும். மாறாக நீ பெற்றெடுப்பது பெண் குழந்தையாக இருந்தால் உன் சகோதரன் மாந்திரீகனாகட்டும். பிறகு அவனுடைய சகோதரி மகனுக்கு அவன் உபதேசிக்கட்டும். இப்படி உன்னுடைய குடும்பத்தில் மாந்திரீகப் பாரம்பரியம் நிலைபெற்று விளங்கட்டும்!"

வந்த வழியிலேயே அவர் திரும்பினார். உரத்த குரலிலான ஆரவாரச் சத்தம் கேட்டு மங்குத்தம்புராட்டியும் மற்றவர்களும் திடுக்கிட்டனர். படைவீரர்கள் கேளு நாயரை வெற்றி கொண்ட சம்பவத்தின் அடையாளமாக அது இருக்க வேண்டும்.

காடுகளின் ஊடாகவும், ஆற்றோரமாகவும் பயணம் செய்த அவர்கள் திருவிதாங்கூர் பகுதியை அடைந்தனர். மத்திய திருவிதாங்கூரிலிருந்த ஒரு குறுநில மன்னர் அவர்களுக்கு அடைக்கலம் தந்தார்.

மங்குத்தம்புராட்டி ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அதனால் மங்குத்தம்புராட்டியின் சகோதரன் மாந்திரீகனானார். அதன் பிறகு படிப்படியாக மருமகன்கள் வாயிலாகப் மாந்திரீகப் பாரம்பரியம் கைமாறி வந்திருக்கிறது.



இந்த விவரங்கள்தான் முதல் ஏட்டுச்சுவடியில் இருந்தன. மங்குப்பாட்டி இறப்பதற்கு முன் எழுத்தாணியைப் பயன்படுத்தி, ஓலைச்சுவடிகளில் குறித்து வைத்ததாக இருக்க வேண்டும் இவையெல்லாம் என்று குமாரன் தம்பி ஊகித்தான்.

# 6

நேரம் போனதே தெரியவில்லை. முதலாவது ஓலைச் சுவடியை வாசித்ததிலிருந்து சிந்தனைகளின் தாழ்வாரத்தில் தவம் அனுஷ்டித்துக் கொண்டிருந்தோம்.

கிழக்குப்புறமிருந்த பெருங்குளம் உறங்கிவிட்டிருந்தது. தென்புறமிருந்த சுப்ரமண்யர் கோயிலில் இரவு நேர பூஜை முடிந்துவிட்டிருந்தது. முன்புறமிருந்த சாலை, பாதம் பதிவதிலிருந்து விடுப்பட்டதாலோ என்னவோ காலடியோசை எதுவும் கேட்கவில்லை.

சுற்றப்புறம் ஜனநடமாட்டம் இல்லாமலிருந்தது. குத்து விளக்கிலிருந்த எண்ணெய் தீர்ந்து விட்டிருக்கிறது. இதுவரை பிரகாசமாக எரிந்த திரி, எண்ணெயற்றுக் கருகும் வேடத்துக்குத் தயாராகிறது.

மீதமுள்ள சுவடிகளை நிதானமாக வாசிக்கலாம். எப்படி இருந்தாலும் ஓர் இரவுக்குள் இவ்வளவு சுவடிகளையும் வாசித்து முடிப்பது என்பது முடியாத விஷயம். ஓலைச்சுவடிகளை மறுபடி பத்திரமாகக் கட்டிக்கொண்டு வீட்டிற்குப் புறப்படவேண்டியதுதான்

ஓலைச்சுவடிகள் அடங்கிய பட்டுத்துணி மூட்டையைக் கக்கத்தில் இடுக்கிய குமாரன்தம்பி எழுந்தான். குத்துவிளக்கை வலது தோளில் ஏற்றி நிதானமாக நடந்தான்.

தென்புறமாக நடந்தால் கோயில் முற்றத்தை ஒட்டி நேராக நடந்து கிழக்குச் சாலை வழியாக வீட்டை அடையலாம். வடக்குப்

புறமாக நடந்தால் பெருங்குளத்தின் வடபுறமிருக்கும் நடைபாதை வழியே குறுக்காகச் செல்லலாம். நடையைச் சற்றுக் குறைத்துக் கொள்ளலாம்.

சன்னமான நிலவொளி இருக்கிறது. ஆனால், ஜனநடமாட்டமில்லாத தனிமை பயமேற்படுத்துகிறது. மாந்திரீகன் கோழையாக இருக்கக்கூடாதே! நிறையச் சோதனைகளைச் சந்திக்க வேண்டிய நேரம் இது என்று அம்மா கூறியது நினைவுக்கு வந்தது. எப்படிப்பட்ட அக்கினிச் சோதனைகள் நிகழ்ந்தாலும் அவை எல்லாவற்றையும் வெற்றி கொள்ள வேண்டியவன் நான்.

மகா மாந்திரீகனும் கர்மியுமான பப்புத்தம்பியையல்லவா நான் பின்தொடர்கிறேன். கோழைத்தனத்தை உதறியே தீரவேண்டும். இல்லாவிட்டால் எப்படித் தன்னால் மந்திரங் களையும் ஹோமங்களையும் நடத்த முடியும்?

கருடசேவை மூலமாக விஷக்கடி வைத்தியனாகிவிட்டால் மட்டும் போதாது. பிசாசுகளையும், காட்டேரிகளையும், சுடலை பத்ரகாளியையும் மோகினிகளையும் அவற்றால் ஏற்படும் தொல்லைகளையும் அகற்றுவதற்கு வல்லமை பெறவேண்டும். அதற்குத் தேவையான மகத்தான மந்திரங்கள் கையில் கிடைத்துள்ளன. எனவே எப்படிப்பட்ட சோதனைகளையும் தொல்லைகளையும் அனுபவிக்க நேர்ந்தாலும் அவற்றைத் தைரியமாக சந்தித்தே தீரவேண்டும்.

மாமா உபதேசித்த ஒரு சில கருடமந்திரங்கள் மட்டுமே தற்போது துணையாக உள்ளன. எவ்வளவு பெரிய ஆபத்தாக இருந்தாலும் கருடசேவை மூலமாக அவற்றை வெல்ல முடியும் என்று பப்புமாமா உபதேசித்திருக்கிறார்!

இருந்தாலும் தன்னுடைய மனத்தின் ஒரு மூலையில் காரணமற்ற பயம் பறையடிப்பது எதனால்?

இடது கட்கத்தில் ஓலைச்சுவடிக் கட்டும் வலது தோளில் குத்துவிளக்குமாக குமாரன்தம்பி தைரியத்துடன் வடக்குப் புறமாக நடந்தான் - பயத்தை விரட்டியடித்த, வீரனுடைய தோரணையில்!





ஆனால், இதயத்துடிப்புகள் அதிகரித்து உடல் மொத்தமும் வியர்த்துக் கொட்டியது. பாதங்கள் சொன்னபடி கேட்க மறுத்தன. இருப்பினும் தைரியம் உள்ளவனைப் போல் காட்டிக் கொண்டு குமாரன்தம்பி நடந்தான்.

வடக்குப்புற வளைவு தாண்டி கிழக்குப்புறம் போகும் வழியில் ஒரு பாம்புக்கோயில் உள்ளது. அதன் முன்புறமாக கிழக்குப்புறம் செல்ல வேண்டும். காவின் முன்பாக நடக்கும்போது விபரீதம் ஏதாவது நிகழ்ந்து விடுமோ என்கிற பயம் குமாரன்தம்பியின் மனத்தை அலைக்கழித்தது. அப்போதுதான் பப்புத்தம்பியின் கனத்த குரல் உயர்ந்து ஒலிப்பதாக குமாரன் தம்பிக்குத் தோன்றியது.

"ஆபத்து முன்னால் காத்திருப்பதாக நினைத்துத்தான் ஒவ்வொரு அடியையும் நீ எடுத்து வைக்க வேண்டும் குமாரா. மாந்திரீக வித்தைகளை எல்லாம் நீ கற்றுக் கொள்வது வரையில் உனக்குத் தெரிந்த கருட மந்திரத்தையே பக்தி பூர்வமாக ஜெபித்துக் கொண்டிரு. கிருஷ்ணப்பருந்து உன் உயிரைக் காப்பாற்றும்."

ஆமாம், தன் குருவான பப்புமாமாவின் உபதேசம்தான் இப்போது கேட்டது. ஞானதிருஷ்டியுள்ள மாந்திரீகனாக இருந்தார் பப்புமாமா. எந்தச் சம்பவத்தையும் முன் கூட்டியே தெரிந்துகொள்ள அவரால் முடிந்திருக்கிறது. பாம்பு கடித்த யாராவது அவரிடம் அபயம் கேட்டு வருவதற்கு முன்பே அவர் அந்த விஷயத்தை ஞானதிருஷ்டி மூலம் தெரிந்து கொள்வது வழக்கம். மாமா மாதிரித் தனக்கும் அந்தத் திறமை ஏற்படாமல் போகாது. கைவசம் உள்ள ஓலைச் சுவடிகளையெல்லாம் கற்று அனுஷ்டானங்களைத் தவறாமல் பின்பற்றினால் தானும் அப்படிப்பட்ட ஞானியாகலாம்.

கருடனை மனத்தில் தியானித்தபடி குமாரன்தம்பி முன்புறமாக நடந்தான். குத்துவிளக்கிலிருந்த திரி அணைந்து போனதை அவன் அறியவில்லை. நிலா வெளிச்சம் நிறைந்த சுற்றுப்புறத்தை வருடுவது போல், பாம்புக் கோயிலிலிருந்து தென்புறமாக வீசியடித்த தென்றலின் வருடலை ஏற்றுக் கொண்டவனாக அவன் நடந்தான்.

குமாரன்தம்பி திடுக்கிட்டது சட்டென்றுதான். ஒரு பெண் தாழ்ந்த குரலில் அழும் சத்தம். யாரோ பிடித்து நிறுத்தியதுபோல் சட்டென்று நின்றான்.

இப்போது அந்தக் குரல் கேட்கவில்லை. ஒருவேளை தனக்கு அப்படித் தோன்றி இருக்குமோ? ஆளரவமற்ற இந்த இடத்தில் நள்ளிரவில் எந்தப் பெண் வர முடியும்?

மீண்டும் ஏதோ சத்தம் கேட்டதுபோல் தோன்றவே குமாரன் தம்பி காதுகளைக் கூர்மைப்படுத்தினான். ஒரு பெண்ணின் ரகசியக் குரலிலான சிரிப்பு. வடக்குப் புறத்திலிருந்து சிரிப்புச் சத்தம் வந்து கொண்டிருந்தது.

குமாரன்தம்பி வடக்குப் பக்கம் கவனித்தான். அப்போது தான் பாம்புக்கோயிலின் நேர்முன்னால் நிற்கிறோம் என்பது அவனுக்குப் புரிந்தது.

பாம்புக் கோயிலிலிருந்த பிரம்மாண்டமான பாலை மரத்தின் (கப்பல் அலரி) மீது அவனுடைய பார்வை பதிந்தது. மரத்தின் மேற்புறத்திலிருந்து பூக்கள் உதிர்ந்து கொண்டிருந்தன. அதைத் தவிர வேறு எந்தச் சத்தமும் இப்பொழுது கேட்கவில்லை.

என்ன ஒரு வாசனை! பாலைப் பூக்களுக்கு இப்படி ஒரு மணம் இருப்பது இப்போதுதான் தெரிகிறது. மூக்கிற்குள் பாய்ந்து வரும் மணம் போதையூட்டுவதாக இருந்தது.

பாலைப்பூவின் மணத்தை முகர்ந்து கொண்டு நின்று விட்ட குமாரன்தம்பியின் மனத்திலிருந்து கருடனின் நினைவு விலகி விட்டதை அவன் அறியவில்லை.

சட்டென்று திடுக்கிட்டான். தனக்குப் பின்னால் மிக நெருக்கத்தில் சலங்கைகள் குலுங்கின.

'நள்ளிரவில் இந்த வழியின் ஊடாக வரும் நடனமணி யாராக இருக்க முடியும்?' - அவன் யோசித்தான். என்ன இருந்தாலும் திரும்பிப் பார்க்க வேண்டியதில்லை. முன்புறமாக நடந்தான்.



ஒரு சில தப்படிகள் எடுத்து வைத்திருப்பான். காலில் சலங்கை கட்டிய யாரோ தன்னைப் பின்தொடர்வதாக குமாரன் தம்பிக்குத் தோன்றியது. தன்னுடைய காலடியோசையை ஒட்டி பின்னால் வருபவரும் அடியெடுத்து வைத்து நடக்கிறார்!

"குமாரேட்டா..." ஒரு பெண்ணின் கிள்ளைமொழி.

"குமாரேட்டா, கொஞ்சம் நில்லுங்க!" இளம்பெண்ணின் கொஞ்சலுடன் கூடிய வேண்டுகோள்.

பழக்கப்பட்ட குரல்! குமாரன்தம்பி பரபரப்படைந்தான். அசையும் திறனை இழந்துவிட்டவனைப்போல் கல்லாகச் சமைந்து நின்றான்.

"இங்க பாருங்க குமாரேட்டா... நான்தான் வந்திருக்கேன்."

"யார் நீ?"-திரும்பிப் பார்க்காமலே அவன் கேட்டான்.

பின்னாலுள்ள இளம்பெண்ணின் ரகசியமான சிரிப்புச் சத்தம். அத்துடன் அவளுடைய கேலியும் சேர்ந்து கொண்டது.

"என் குரலைக்கூடவா என் குமாரேட்டன் மறந்துட்டார்? மாந்திரீகனானதும் மனுஷத் தன்மை இல்லாமல் போயிடுச்சா? ஒரு தடவை திரும்பிப் பார்த்துட்டுச் சொல்லுங்க... நான் யாருன்னு?"

தன் இதயத்தினூடாக ஓர் எரிநட்சத்திரம் பாய்ந்துபோனது போல் தோன்றியது குமாரன்தம்பிக்கு. இரண்டு வருடங்களுக்கு முன்னால் இறந்துபோன லக்ஷ்மிகுட்டியின் குரலைக் கேட்டோம். அவளுடைய அதே சிரிப்புதான் முழங்கியதும்.

"லக்ஷ்மிக்குட்டீ!" - அவனையும் மீறி அவனது உதடுகள் முணுமுணுத்தன.

"ஆமாம், குமாரேட்டா. அதே லக்ஷ்மிகுட்டிதான் நான்! புத்தூர் வீட்டின் காரியஸ்தரான குமாராசாரின் இரண்டாவது மகள் லக்ஷ்மிக்குட்டி. உங்களுக்குப் பிரியமான லக்ஷ்மிகுட்டி!"

காலம், இடம் போன்ற எல்லாவற்றைப் பற்றிய உணர்வும் அற்றுப் போனவனைப்போல் நின்று விட்ட குமாரன்தம்பியின் கன்னத்தில் வலுவான அடிவிழுந்தது போல் தோன்றியது. கூடவே பப்பு மாமாவின் மிரட்டல் குரல்: "டேய் மட சிரோமணி, உனக்குப் பின்னால் நிற்பது யக்ஷி (மோகினி). இன்றைக்கு வெள்ளிக்கிழமை என்பதை மறந்துவிட்டாயா? உன் கைவசமுள்ள குத்துவிளக்கையும், பனையோலைச் சுவடிகளையும் கையிலிருந்து நழுவவிடாதே. பயம் இல்லாமல் நீ அந்த யக்ஷியிடம் பேசு. அவள் உன்னை விட்டு விலகவில்லை என்றால் கருடபகவானை வழக்கமாகச் சேவிக்கும் பூஜையறைவாசலுக்குச் சென்று தியானம் செய்!"

குமாரன்தம்பிக்குப் புதியதொரு தைரியம் வந்து சேர்ந்தது.

# 7

வேண்டுமென்றே குரலில் கடுமையை வரவழைத்துக் கொண்டு குமாரன்தம்பி கேட்டான்: "நீ யக்ஷிதானே?"

அழுகையா, சிரிப்பா என்று பிரித்தறிய முடியாத ஒரு குரலில் அதற்குப் பதில் கிடைத்தது.

"நான் கேட்டதற்குப் பதில் சொல்லணும்" குமாரன் தம்பியின் குரலில் கட்டளையின் தொனி படிந்திருந்தது.

"மாந்திரீகனாகி விட்ட ஆணவத்தில இப்படிப் பேசறீங்களா? பழசையெல்லாம் நீங்க மறந்து போயிட்டீங்களா குமாரேட்டா?"

விசும்பலுடன் வந்த அந்த கேள்வியைக் கேட்டபோது குமாரன்தம்பியின் மனம் துடித்தது. மறதியின் உள்ளறைகள் திறக்கப்பட்டு, விடுதலை பெற்ற நினைவுகள் அவனுடைய இதயச் சுவர்களை உடைத்துத் தகர்ந்து உள் நுழைந்து கூக்குரல் எழுப்பின.

நினைவுகளை விரட்டியடிக்க முடியாமல் அவன் திணறினான். முந்தைய நினைவுகளை விரட்டியடிக்க அவனது மனம் ஒப்புக் கொள்ளவில்லை. சுற்றுப்புறத்தை மறந்தான். அவனையே மறந்தான. லக்ஷ்மிக்குட்டி அவனுடைய மனத்தின் கருவறையில் பிரதிஷ்டை செய்யப்பட்ட விக்கிரகம் மாதிரி நிலை பெற்றுவிட்டாள். அவளைப் பற்றிய நினைவுகள் புதுப்பிறவி எடுத்தன.



புத்தூர் தறவாட்டின் காரியஸ்தராக இருந்த குமாரசாருடைய இரண்டாவது மகள் லக்ஷ்மிக்குட்டி, தன்னை விட ஒரு வயது இளையவள். இளையவனானாலும் குமாரனை, குமாரக் குழந்தை என்று அழைக்க வேண்டுமென்று அவளுடைய சகோதரியான நாணிக்குட்டியும், தாய்-தந்தையும் அவளிடம் கூறியிருந்தனர். இருந்தாலும் அவள் 'குமாரேட்டன்' என்றுதான் சிறு வயதிலிருந்தே அழைத்து வந்தாள்.

விளையாட்டுத் தோழன் - தோழியாகத்தான் தானும் லக்ஷ்மிக்குட்டியும் வளர்ந்தோம். புத்தூர் வீட்டின் கிழக்குப்புற முற்றத்தில் பட்டுக்கோவணம் உடுத்திய அவனும், இடுப்புத்துண்டு மட்டும் கட்டிய லக்ஷ்மிகுட்டியும் சேர்ந்து மண்ணால் அப்பமுண்டாக்கினார்கள்; மண்வீடு கட்டினார்கள்; மண்ணரிசியால் மாயாஜாலமாகப் பால்சோறு பொங்கினார்கள்.

இளமைப் பருவமடைந்தபோது வீட்டின் தென்புறத் திண்ணையில் ஒன்றாக இருந்து குன்றிமணிகள் வைத்துப் பல்லாங்குழி விளையாடுவார்கள். ஒருநாள் அப்படி விளையாடியபோது தொடர்ந்து நாலைந்து முறை வெற்றி பெற்றவள் அவள்தான். தனக்குக் கோபம் வந்தது. பல்லாங்குழியை முன்புறமாக ஒதுக்கித் தள்ளிவிட்டு கத்தினோம். "எழுந்து போடி திருடி. நீ திருட்டு விளையாட்டு விளையாடுற." பல்லாங்குழிப் பலகை அவளது வலதுகால் முட்டியில் மோதியது. அவள் உரத்த குரலில் அழத்தொடங்கினாள். சத்தம் கேட்டு தன் அம்மா ஓடி வந்தார். வந்தவர் தனது இடது காதைப் பிடித்துத் திருகியபடி கேட்டார்: "வயது பதினஞ்சாயிடுச்சில்ல போக்கிரி! லக்ஷ்மிக்குட்டி கூடப் பல்லாங்குழி விளையாட உனக்கு வெட்கமா இல்லையா?"

அப்போதும் அழுது கொண்டிருந்த லக்ஷ்மிக்குட்டியையும் அம்மா கண்டிக்கத் தவறவில்லை. "ஏண்டி பெண்ணே, இனிமேல்

நீ இந்தப்பக்கமே வரக்கூடாது. சமையலறைப் பக்கமா வந்து எதையாவது வாங்கிச் சாப்பிட்டுட்டு உன் வீட்டுக்குப் போயிடணும். தெரியுதா?"

அந்தச் சமயத்தில் லக்ஷ்மிக்குட்டி சில நாட்கள் தன் வீட்டுப் பக்கம் வரவில்லை. "லக்ஷ்மிக்குட்டியைக் கொஞ்ச நாளாகக் காணோமே!" - நாணிக்குட்டியிடம் ரகசியமாகக் கேட்டபோது, அவள் வாய்பொத்திச் சிரித்தபடி தாழ்ந்த குரலில் கூறினாள். "குமாரன் குஞ்ஞே (குழந்தையே) லக்ஷ்மிக்குட்டி வயசுக்கு வந்துட்டா. அதனால அவளை அம்மா வெளியே விடமாட்டாங்க."

லக்ஷ்மிக்குட்டியிடம் தென்பட்ட மாற்றம் வியப்புக்குரியதாக இருந்தது. அதன் பிறகு அவளைப் பார்த்தது ஒரு சிவராத்திரி அன்றுதான். எல்லா சிவராத்திரிகளிலும் தன் தறவாட்டு வீட்டிற்கு முன் திருவாதிரைக்களி (பெண்கள் தங்களது இரண்டு கைகளையும் சேர்த்துத்தட்டி வட்டமாக நின்று நடனமாடும் நிகழ்ச்சி) நடப்பதுண்டு. அண்டை அயல் வீட்டுப் பெண்களில் பலரும் அன்று வீட்டிற்கு வந்து கொண்டாட்டத்தில் பங்கெடுப்பார்கள். அம்மாவும் அவர்களுடன் கலந்து கொள்வது வழக்கம்.

அன்று முதல் முறையாக லக்ஷ்மிக்குட்டியும் திருவாதிரைக் கொண்டாட்டத்தில் கலந்துகொண்டாள். மிகக் குறைந்த கால அளவுக்குள், திருவாதிரைக் கும்மியைக் கற்பிக்கும் கல்யாணி அம்மாவிடமிருந்து அதைக் கற்றுக் கொண்டிருந்தாள். உடன் ஆடிக்கொண்டிருந்தவர்களை வலுவிழக்கச் செய்துவிட்டு அடி தப்பாமல், தாளம் தவறாமல், சுரம் மீறாதபடி பாடி ஆடினாள்.

நிலத்தை அதிர வைத்த லக்ஷ்மிக்குட்டியின் காலின் அழுத்தமும் வலுவான கைதட்டலும், இனிமையான குரலில் அமைந்த பாட்டும் தனது நெஞ்சிற்குள் 'குலவைப் பூக்களைத் தூவின. சற்றுத் தூரத்தில் நின்று திருவாதிரைக் கொண்டாட்டத்தைக் கவனித்த தன்னுடைய கண்கள் அவளுடைய மேனியழகை ஒவ்வொரு பகுதியாக ஒற்றியெடுத்தன.

அவள் கால்களில் சலங்கை அணிந்திருந்தாள். அவளது பாதங்களின் அழகுதான் சலங்கைகளின் நாதத்துக்கு



உயிரளித்தன. சிறுத்த இடையும், இறுக்கிக் கட்டிய ரவிக்கையை அவிழ்க்கத் தயாராகத் திமிறியெழும் திரண்ட மார்புப் பகுதிகளும், குழந்தைத்தனம் தளும்பி வழியும் வட்ட முகமும், நுனியில் முடிச்சுப் போட்டு கணுக்கால் வரை நீண்டிருந்த தலை முடியும், கருநீல விழிகளும் தன் மனத்தை உழுது புரட்டின.

ஒரு தடவை லக்ஷ்மிக்குட்டி பாடிய பாட்டை உள்வாங்கித் திரும்பிப் பாட முடியாமல் உடனிருந்தவர்கள் தடுமாறினர். தனது அம்மா அவளிடம் கேட்டார்: "கதகளிப் பாட்டு வரியைத் தானே நீ பாடின?"

அவள் தலையாட்டினாள். மறுபடியும் அவள் அதையே பாடினாள். வெகுநேர முயற்சிக்குப் பிறகுதான் மற்றவர்கள் அதை ஏற்றுப் பாட முடிந்தது. பின்னாளில் பப்புமாமாவிடமிருந்து கதகளி ஆட்டக் கதைகளைப் பற்றிப் படித்தபோதுதான் லக்ஷ்மிக்குட்டி பாடிய வரிகளின் மகத்துவம் புரிந்தது.

நாட்டுப்புறத்துத் திருவாதிரைப் பாட்டுப் பாடும் பெண்களுக்குத் தெரியாத கதகளிப் பாட்டை அவள் ராக-தாளத்துடன் பாடியிருந்தாள். இரயிம்மன் தம்பியின் உத்தரா ஸ்வயம்வரத்தில், கேதார கௌட ராகத்திலுள்ள ஒரு பாட்டை அவள் செம்பட தாளத்தில் பாடினாள்.

அந்த வரிகளை இப்போதும் தன்னால் நினைவுகூர முடிகிறது. புகழ் பெற்ற கதகளிப் பாடகர் அதைப் பாடிக் கேட்டபோதும் லக்ஷ்மிக்குட்டியின் பாட்டு மாதிரி அதெல்லாம் அவ்வளவு இனிமையானதாகத் தோன்றவே இல்லை.

பள்ளிக்கூடப் படிப்பை நிறுத்திய பிறகு லக்ஷ்மிக்குட்டி ஒரு பாடகியாகவோ, நாட்டியமணியாகவோ மாறும் அதிர்ஷ்டம் ஏற்படவில்லை. புத்தூர் வீட்டின் வெளிவேலைகளைச் செய்யுமளவுக்குதான் அவளது தலைவிதி அமைந்திருந்தது. சமையற்கட்டு வேலைக்கு அக்காளும் மற்ற வேலைகளுக்கு தங்கையும் என்று ஆனார்கள்.

படிப்பில் மிகவும் மோசமாக இருந்ததால் பதினெட்டாவது வயதில் ஏழாம் வகுப்புடன் வெளியேறி வந்துவிட்ட தனக்கு

தாய்மாமன் நேரடியாகவே ஸம்ஸ்கிருதம் கற்பிக்கத் தொடங்கினார். வருடங்கள் கடந்து சென்றன. ஒரு விடியற்காலையில் முற்றத்தைப் பெருக்கும் ஓசையுடன் கொலுசுகள் குலுங்கும் நாதமும் கேட்டன. பப்புமாமா அறப்புர(பூஜைஅறை) வாயிலில் கருடசேவையில் ஈடுபட்டிருந்தார். அம்மா விழித்திருக்கவில்லை. நாணிக்குட்டி சமையலறையைச் சுத்தம் செய்து கொண்டிருந்தாள்.

முற்றத்தைப் பெருக்கும் ஓசை மேற்குப் புறத்திலிருந்து கேட்டது. மேற்குப்புறமிருந்த சிற்றறையில் படுத்திருந்த நான் நிதானமாக எழுந்து மெதுவாகக் கதவைத் திறந்தேன். பெருக்கிக் கொண்டிருந்தவள் என்னைப் பார்த்தவுடன் சட்டென்று நிறுத்திவிட்டு வடக்குப் பக்கமாக ஓடிவிட்டாள். நெஞ்சின் துடிப்புகளை அடக்க முடியாமல் நான் நின்றிருந்தேன். பெருக்கிக் கொண்டிருந்தவள் வேறு யாருமில்லை - லட்சணம் பொருந்திய லக்ஷ்மிக்குட்டி.

சில நிமிடங்களுக்குப் பிறகு அவள் திரும்பி வந்தாள். குறிப்பாக எதுவும் நடக்காதது மாதிரி மறுபடியும் முற்றத்தைப் பெருக்கத் தொடங்கினாள். பெண்ணின் மனோவியலைத் தெரிந்து கொள்ள முடியாத நான், பழையபடி சிற்றறையின் கதவை மூடிப் படுக்கையில் படுத்துக்கொண்டேன்.

யாரோ கதவைச் சுரண்டுவதாகத் தோன்றியது. அசையாமல் அப்படியே கட்டிலில் படுத்திருந்தேன். சற்று நேரத்திற்குப் பிறகு கதவு திறந்து கொண்டது. லக்ஷ்மிக்குட்டி சிற்றறைக்குள் வந்தாள். அவளுக்கு மூச்சிரைத்தது. சட்டென்று துள்ளியெழுந்த நான் அவளை எனது கைவளையத்திற்குள் இழுத்தேன்.

"ஏமாத்திடாதீங்க குமாரேட்டா" - நடுங்கும் குரலில் அவள் வேண்டினாள். உணர்ச்சி வெப்பத்தின் ஆதிக்கம் என் நாக்கைப் பலவீனப்படுத்தியிருந்ததால் அதற்குப் பதிலளிக்கவில்லை.

அந்த அறைக்கு அடுத்ததுதான் நிலவறை. புத்தூர் தறவாட்டின் இருட்டு அறை. பித்ருக்கள் உறங்கும் அறை. குலதெய்வமான கருடனின் பள்ளியறை. பப்புமாமாவின் ரகசிய



பூஜைகள் நடைபெறும் இடம். அதற்கான பொருள்களை வைத்துள்ள பரிசுத்தமான பகுதி.

அதைப் பற்றியெல்லாம் யோசிக்க அப்போது முடியவில்லை. நான் செய்தது தவறுதான். மகாபாவம்தான் அங்கு நடந்தது. மாந்திரீக ஸ்தானமான தறவாட்டின் நிலவறையில் இருட்டைத் தேடி, லக்ஷ்மிக்குட்டியுடன் நுழைந்தேன்.

பரிசுத்தமான இடத்தில் விலக்கப்பட்ட கனியைப் புசித்த பிறகுதான் விவேகம் துணைக்கு வந்தது. அவிவேகமாக நடந்துகொண்டோம் என்பதை அவளும் ஞாபகப்படுத்தவில்லை.

நிலவறையிலிருந்து சோர்ந்துபோய் வெளியேறும்போது லக்ஷ்மிக்குட்டி விசும்பலுடன் சொன்னாள்: "குமாரேட்டா! என் காலை எதுவோ ஒண்ணு கடிச்சிடுச்சு!"

"ஏதாவது பூச்சி பொட்டாயிருக்கும்; பரவாயில்லை" நான் அவளைச் சமாதானப்படுத்தினேன்.

அவள் மறுபடியும் முற்றத்தைப் பெருக்கத் தொடங்கினாள். நான் நேராகச் சென்றது கிழக்குப்புறக் குளத்திற்கு. மூழ்கிக் குளித்துவிட்டுத் திரும்பும்போது அம்மா தூங்கியெழுந்து கிழக்குப்புறத் திண்ணையிலிருந்து நாமம் ஜபித்துக் கொண்டிருந்தார்.

"நீ என்ன இன்னிக்கு இவ்வளவு சீக்கிரமாக குளிச்சுட்டு வர்ற?" - அம்மாவுக்கு வியப்பு.

"என்னமோ இன்னிக்கு அப்படித் தோணுச்சு" பரபரப்பில் சொன்னேன்.

"எல்லாம் நல்லதுக்குத்தான்!" - அம்மா கைகளைக் கூப்பி மகனுக்காகப் பிரார்த்தனை செய்தார்.

வீட்டிற்குள் நுழைந்தபோது பப்புமாமா கருடசேவையை முடித்துவிட்டுச் சிந்தனையில் ஆழ்ந்தவராக நின்று கொண்டிருந்தார். எனக்கு வியப்பாக இருந்தது. சாதாரணமாக இந்த நேரத்திற்குள் கருடசேவையை முடிப்பது அவர் வழக்கமில்லை.

ஏதாவது அசுப அறிகுறி தென்பட்டால் மட்டுமே கருட சேவையை அவர் பாதியில் நிறுத்துவது வழக்கம்.

"இங்க வாடா!" - என்னைப் பார்த்ததும் பப்புமாமா கட்டளையிட்டார்.

கிடுகிடுவென்று நடுங்கியவாறு அறைக்குள் நுழைந்தேன். என்னை உச்சி முதல் பாதம்வரை ஏற இறங்கக் கவனமாகப் பார்த்துவிட்டு அவர் கேட்டார்: "நீ இவ்வளவு விடியற்காலையில குளிக்கிற வழக்கமில்லையே! இன்னிக்கு உனக்கு என்ன ஆச்சு?"

"சீக்கிரமா விழிச்சுட்டேன். வேறு ஒண்ணும் இல்லை."

"நீ அசுத்தமாகிப் போனதாலதானே இப்போது குளிச்சிருக்கிற?"

பதில் எதுவும் சொல்லாமல் தலை குனிந்து நின்றபோது அம்மா அங்கு வந்து சேர்ந்தார். மாமா மறுபடியும் கருடசேவைக்குத் தயாராகிக் கொண்டிருந்தார்.

"சகோதரீ! ஒருவரை விஷம் தீண்டியிருக்கு. அரை நாழிகைக்குள்ள விஷக்கடி பட்டவரை இங்க கொண்டு வருவாங்க. காப்பாற்ற முடியாதுண்ணு அவங்ககிட்டச் சொல்லிடு."

"ஏன் பப்பு?"

"தீண்டியிருக்கிறது ஐந்துதலை நாகம். கடிபட்ட நபர் இறந்துட்டார்."

விசும்பல் சத்தம் புறப்பட்டது அம்மாவிடமிருந்து. மாமா தியானத்தில் ஆழ்ந்துவிட்டார். நான் சுயநினைவை இழந்தவனாக மாறினேன்.

சற்று நேரத்திற்குள் குமாரசாரும் அவரது மனைவியும் அசைவற்ற லக்ஷ்மிக்குட்டியைத் தாங்கிப் பிடித்துக் கொண்டுவந்து கிழக்குப்புறத் திண்ணையில் படுக்க வைத்தனர். அவர்கள் ஒருவர் மாற்றி ஒருவர் உரத்த குரலில் அலறியழத் தொடங்கியபோது அம்மா சொன்னார்: "மிகவும் தாமதமா வந்திருக்கீங்க!"



ஒரு வெள்ளை வேட்டியை எடுத்து அம்மா லக்ஷ்மிக்குட்டியின் உடலை மூடினார். பிறகு உரத்த குரலில் அழுதார். குமாரசாரும் மனைவியும் மகளது சவ உடம்பின் மீது சரிந்து விழுந்தனர்.

முற்றத்தைப் பெருக்கிவிட்டு வழக்கம் போலப் பெருங்குளத்துக்குக் குளிக்கப் போனாள் லக்ஷ்மிக்குட்டி. குளத்தின் படிக்கட்டில் மயங்கி விழுந்தாள். குளத்தில் இருந்த பெண்கள் அவளை வீட்டில் கொண்டுவந்து சேர்த்தார்கள். வெறும் மயக்கம் என்றுதான் எல்லோரும் நினைத்தனர். ஆனால், லக்ஷ்மிக்குட்டி இறந்து போயிருந்தாள்!

என் மீது யாருக்கும் எந்தவிதமான சந்தேகமும் ஏற்படவில்லை. ஆனால், மகா மாந்திரீகனான பப்புமாமா ஞானதிருஷ்டி மூலம் நடந்ததை நடந்தபடி அறிந்திருந்தார்.

அன்று இரவு பப்புமாமா என்னை தென்புறத்திலிருந்த கிளி மரத்தடிக்கு அழைத்துக் கொண்டு போனார்.

"குமாரா! இனி ஒருபோதும் நீ தவறு செய்யக்கூடாது. நம் குடும்பப் பெருமையை அழித்துவிடக்கூடாது" - தழுதழுத்த குரலில் மாமா உபதேசித்தார்.

வருடங்கள் இரண்டு கடந்துவிட்டன. லக்ஷ்மிக்குட்டியின் உடலை அடக்கம் செய்த இடத்தில் ஒரு தென்னங்கன்று தழைத்து வளர்கிறது. எத்தனையோ தடவை அந்த மரத்தருகே நின்று சொல்லியிருக்கிறேன். "அன்பிற்குரிய லக்ஷ்மிக்குட்டி! என்னை மன்னிச்சிடு... நான்தான் உன்னைக் கொன்றவன்"

இதோ இப்போது என்றோ இறந்து போன லக்ஷ்மிக்குட்டி யக்ஷி வடிவில் எனக்குப் பின்னால் நின்று கொண்டிருக்கிறாள். எதிர்பாராமல் - இளவயதில் இறப்பதால் யக்ஷிகளாக மாறும் பெண்களைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். என் லக்ஷ்மிக்குட்டியும் மரணத்துக்குப் பிறகு அப்படியொரு யக்ஷியாக மாறிவிட்டாளா? லக்ஷ்மிக்குட்டியிடம் எனக்குள்ள அன்பை இப்போது வெளிக்காட்டினால் விபரீதமாகிவிடும். யக்ஷியிடம் ஒருபோதும் அன்பை வெளிப்படுத்தக் கூடாது!

குமாரன்தம்பி சுயநினைவு பெற்றான். தான் ஒரு மாந்திரீகன் என்பதும் ஒரு யக்ஷியிடம் உரையாடிக் கொண்டிருக்கிறோம் என்பதும் நினைவுக்கு வந்தன.

குமாரன்தம்பி கனத்த குரலில் கூறினான்: "நீ என் பின்னால வரக்கூடாது. ஓடிப்போயிடு."

உடனடியாக வந்தது பதில்! "நான் உங்களையும் கூட்டிக்கொண்டுதான் போவேன்."

"எங்கே கூட்டிட்டுப் போவ?" குமாரன்தம்பி கோபத்துடன் கேட்டான்.

"அதோ... வடக்குத் திசையில பாருங்க. அந்தப் பாலைமரத்து உச்சியிலதான் நான் குடியிருக்கேன். குமாரேட்டா வாங்க... என்னோடவே தங்கிக்கலாம்."

குமாரன்தம்பி கண்களை மூடினான். ஒற்றைக் காலில் நின்று கருடசேவை தொடங்கினான்.

யாரோ தன்னை வலம்வந்து ஓடிக் கொண்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. அவன் கண்களைத் திறக்கவில்லை.

தன் தலைக்கு மேலாகச் சிறகடியோசை கேட்டபோதும் குமாரன்தம்பி அசையவே இல்லை.

சட்டென்று யக்ஷியின் புலம்பல் துயரத்துடன் கேட்டது: "ஐயோ என்னைக் காப்பாத்துங்க. கிருஷ்ணப் பருந்து என்னைக் குத்திக் குதறிவிடும். நான் இனிமே ஒருபோதும் உங்களைத் தொல்லைப்படுத்த மாட்டேன்."

"இதை நீ சத்தியம் செஞ்சு சொல்ல முடியுமா?" - அதே நிலையில் நின்றபடி அவன் கேட்டான்.

"செய்றேன். குமாரேட்டன் பிரம்மச்சாரியாக இருக்கிற வரையில் நான் நிச்சயம் உங்களைத் தொல்லைப்படுத்த மாட்டேன். இது சத்தியம், சத்தியம், சத்தியம்!"



யக்ஷியின் சத்தியம், யக்ஷியாலேயே மீற முடியாத ஒன்று என்பதைக் கேள்விப்பட்டிருந்தான். கருட சேவையை முடித்துவிட குமாரன் தம்பி தீர்மானித்தான். அவன் வலது காலைத் தரையில் ஊன்றி, கூப்பிய கைகளுடன் பிரார்த்தனை செய்தான். "குல தெய்வமான கருட பகவானே விடை பெற்றுக் கொள்ளுங்கள்."

சிறகடியோசை ஓய்ந்தது. அவன் கண்களைத் திறந்து பார்த்தான். சுற்றுப்புறம் அமைதியாக இருந்தது. முன்புறமாக நடக்கத் தொடங்கினான். இல்லை... இப்போது யாரும் பின் தொடரவில்லை. யக்ஷி மறைந்துவிட்டது!

இடதுபுறக் கட்கத்தில் ஓலைச்சுவடிக்கட்டு பத்திரமாக இருந்தது. அதேபோல் வலது புறத்தோளில் குத்துவிளக்கும் இருந்தது.

வெற்றி பெற்ற ஒரு வீரனைப் போல குமாரன்தம்பி வீட்டை நோக்கி நடந்தான்.

## 8

வீட்டின் வடக்குப்புறம் வந்து நின்ற குமாரன்தம்பி குரல் கொடுத்தான். அவன் அழைத்தது அம்மாவை; வந்து வாசலைத் திறந்ததோ நாணிக்குட்டி.

வழிவிட்டு ஒதுங்கி நின்ற அவள் பணிவுடன் சொன்னாள்: "அம்மா கொஞ்ச நேரத்துக்கு முன்னால வரையிலும் தூங்காம உங்களுக்காகக் காத்திருந்தார். இப்போ தூங்கியிருப்பாங்கன்னு நினைக்கிறேன். அம்மாவை எழுப்பணும்னா எழுப்புறேன்."

"வேண்டாம். கொஞ்சம் தண்ணி கொண்டு வா!"

திரியைக் குறைத்து வைத்திருந்த சிம்னி விளக்கின் தீபத்தைச் சற்று உயர்த்திய பிறகு அதைத் திண்ணையில் வைத்துவிட்டு பெரிய கிண்டி ஒன்றில் தண்ணீருடன் வந்தாள் நாணிக்குட்டி.

"அங்க வைச்சுடு" - குமாரன்தம்பி சுவாரஸ்யமின்றிக் கூறினான்.

கிண்டியைக் கீழே வைத்துவிட்டு அவள் உட்புறம் திரும்பிச் சென்றபோது குமாரன்தம்பியின் பார்வை அவனையுமறியாமலே அவளைப் பின்தொடர்ந்தது. அதைப் புரிந்துகொண்ட நாணிக்குட்டி சமையற்கட்டின் அருகே இருந்த வராந்தாவின் ஓரத்தில், இருளடைந்த ஒரு மூலையில் ஒதுங்கி நின்றாள். அவளுக்கு மூச்சு வாங்கியது. தவறு நிகழ்ந்துவிட்டது என்கிற குற்ற உணர்வுடன் அவன் கண்களைத் திருப்பிக் கொண்டான்.

பரிதாபத்துக்குரிய விசும்பல் சத்தம் அவனது காதுகளில் விழுந்தது. அவனுடைய மனம் உமியில் விழுந்த நெருப்பு போல் கனியத் தொடங்கியது. முந்தைய கால சம்பவங்களைக் குறித்த நினைவுகள் குற்ற உணர்வின் ஆழத்திற்கு அவனைத் தள்ளின. அவனுக்கு மூச்சுத் திணறியது.

திடுமென்று குமாரன்தம்பிக்கு ஞானோதயம் ஏற்பட்டது. தான் பழைய குமாரன்தம்பியல்ல. மாந்திரீகனாக ஜன்மாந்திரம் எடுத்த புது மனிதன். முந்தைய சம்பவங்களை எல்லாம் பயனற்றவையாகக் கருதியே தீரவேண்டும். பழையதை எல்லாம் நினைத்துத் தனது பிரம்மச்சரியத்திற்குக் களங்கம் ஏற்படுத்துவது பாவம்.

கையிலிருந்த குத்துவிளக்கைத் திண்ணையில் வைத்தான். ஒரு சடங்கு மாதிரி கைகால்களைக் கழுவிய பிறகு ஓலைச் சுவடிகளுடன் வீட்டிற்குள் நுழைந்தான்.

பூஜையறை வாசலில் அப்போது நிலவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. நள்ளிரவு தாண்டியும் தான் வராததால் விளக்கை அணைக்கவில்லை என்று தோன்றியது.

நாணிக்குட்டி வடக்குப்புற வாசலை மூடினாள். சிம்னி விளக்கைக் கிழக்குப்புறத் தளத்தில் கொண்டுபோய் வைத்தபிறகு தயங்கித் தயங்கி அவள் கேட்டாள்:

"என்ன சாப்பிடுறீங்க?"

"எனக்கு இன்னிக்கு உபவாசம். போய்ப் படுத்துக்க.." பதற்றமான குரலில் அவன் பதிலளித்தான்.



ஓலைச்சுவடிகள் உள்ள பட்டுத் துணிக்கட்டை நில விளக்குக்கு முன்னால் வைத்த குமாரன்தம்பி அதைத் தலை தாழ்த்தி வணங்கினான். மனத்தில் கருட பகவான் சிறகடித்தார்.

திடுமென்று எதுவோ ஞாபகம் வந்தது போல், விளக்கின் முன்னாலிருந்த ஓலைச்சுவடிகளையும், விளக்கையும் எடுத்துக்கொண்டு தென்புற அறை வழியாக மேற்குப்புறச் சிற்றறைக்குச் சென்றான். பின்பு பயபக்தியுடன் நிலவறைக்குள் நுழைந்தான்.

இடுங்கிய நிலவறையின் இருள் மறைந்தது. அங்கிருந்த எல்லா விளக்குகளையும் ஏற்றினான். பிறகு விளக்குகளைப் பார்த்தபடி அவற்றுக்கு எதிர்ப்புறமாகச் சப்பணமிட்டு உட்கார்ந்தான். கட்டை அவிழ்த்து இரண்டாவது ஓலைச்சுவடியை வெளியே எடுத்தான்.

கருடசேவைக்கான மற்றும் சில மந்திரங்களும், அனுஷ்டானங்களும் விவரிக்கப்பட்டிருப்பது இரண்டாவது ஓலைச்சுவடி என்று அதன் முதல் ஓலைத்தாளிலேயே குறிப்பிடப் பட்டிருந்தது. உட்கார்ந்த நிலையில் ஒரே தடவையில் அந்த மந்திரங்கள் அனைத்தையும் மனப்பாடமாக்க வேண்டுமென்றும், அதற்குப் பிறகுள்ள ஒரு நல்ல நாளில் தியானமுறைப்படி உருவாக்கிய கருட விக்கிரகத்தை பத்மபீடத்தில் பொருத்திப் பக்தியுடன் பூஜை செய்ய வேண்டுமென்றும், ஒற்றைக் காலில் நின்றபடி "க்ஷிப ஓம் ஸ்வாஹா" என்கிற பஞ்சாட்சர மந்திரத்தை ஐந்து லட்சம் முறை ஜபித்துவிட்டால் முழுமையான மந்திர ஸித்தி கைகூடுமென்றும், கருடன் நித்யமித்திரனாக மாறிவிடுமென்றும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது.

மந்திரப் பயிற்சியில் மனத்தை ஈடுபடுத்தி ஏகாக்ரகச் சிந்தையில் ஆழ்ந்த குமாரன்தம்பி, பாம்பின் "ஸ்ஸ்" என்ற சீறல் சத்தம் கேட்டு மெலிதாக நடுங்கவும் செய்தான். நிலவறையின் ஒரு மூலையில் ஐந்து மின்மினிப்பூச்சிகள் சலனமற்று வரிசையாக இருப்பது போல் தோன்றியது. கண்ணைக் கூசச் செய்யும் ஒளியைச் சொரிய மின்மினிப் பூச்சிகளால் முடியுமா என்ன? அவனுக்குச் சந்தேகமாக இருந்தது.

ஒரு நிலவிளக்கை உயர்த்தி அந்தத் திசையை உற்றுக் கவனித்தான். ஓர் ஐந்துதலை நாகம் படம் எடுத்து நின்று கொண்டிருந்தது.

நிலவறைக்குள் ஐந்துதலை நாகம் வசிப்பதாகவும், மாந்திரீகனைத் தவிர மற்றவர்களால் அதைப் பார்க்க முடியாது என்றும் ஏற்கெனவே கேள்விப்பட்டிருந்தான். இப்போதுதான் முதல் தடவையாக அதை நேரடியாகக் கண்டான்.

லக்ஷ்மிக்குட்டியைத் தீண்டியது ஐந்துதலை நாகம் என்று பப்புமாமா சொல்லியிருந்தது குமாரன்தம்பியின் நினைவில் எழுந்தது. பரிசுத்தமான நிலவறையை அசுத்தப்படுத்தியதற்கான தண்டனையா?

நிலவறையை அசுத்தப்படுத்தியதற்கு உண்மையான காரணகர்த்தா நான்தான். இருந்தும் என்னை எதுவும் செய்யாமல் அப்பாவியான லக்ஷ்மிக்குட்டியை ஐந்துதலை நாகம் தண்டித்தது. புத்தூர் தறவாட்டைச் சேர்ந்தவர்களை ஐந்துதலை நாகம் மட்டுமல்ல, எந்தப் பாம்புமே தீண்டாது. அப்படியே தீண்டினாலும் விஷம் உடம்பில் ஏறாது என்றும் சொல்லப்படுகிறது.

கருடமூர்த்தியின் இருப்பிடமென்று நம்பப்படுகிற இந்த நிலவறையின் பாதுகாவலாக ஐந்துதலை நாகம் வந்ததைக் குறித்து நடைமுறையிலிருந்த ஓர் ஐதீகம் குமாரன்தம்பியின் நினைவில் எழுந்தது.

புத்தூர் தறவாட்டின் புகழ்பெற்ற மாந்திரீகனாக இருந்த தேவன் நாராயணன்தம்பி ஒரு தடவை மண்ணாறசாலை நாகராஜன் கோயிலுக்குச் சென்று தரிசனம் முடிந்து திரும்பும் போது ஓர் ஐந்துதலை நாகம் மிகவும் கஷ்டப்பட்டு ஊர்ந்து போவதைக் கண்டு, அதற்கு உடலில் ஏதோ கோளாறு இருப்பதையும் தெரிந்துகொண்டாராம். பாம்புகளிடம் பயமில்லாதிருந்த அவர் அந்த நாகத்தின் அருகே சென்று பரிசோதித்தார். அதனுடைய தலையொன்றில் ஒரு பெரிய முள் தைத்திருந்ததை கண்டுபிடித்தார்; தாங்க முடியாத வேதனையுடன் அது ஊர்ந்து கொண்டிருந்தது அவருக்குப் புரிந்தது. அவர் கருணையுடன் அதனுடைய தலையிலிருந்த முள்ளை எடுத்து எறிந்தாராம். அதன்



அந்த மாந்திரீகன் தன் வீட்டிற்குத் திரும்பும்போது ஐந்துதலை நாகமும் அவரைப் பின்தொடர்ந்ததாம். வீட்டிற்கு வந்து சேர்ந்த பிறகுதான் ஐந்துதலை நாகம் தன்னைத் தொடர்ந்து வந்திருப்பதை அவர் அறிந்து கொண்டாராம்.

"ஆமாம், நீ என் கூடவே வந்துட்டியா? சரி, அப்படியானா இங்குள்ள நிலவறையில வசிச்சுக்க; எனக்கும் ஒரு துணையா இருக்கட்டும்" என்று அவர் ஐந்துதலை நாகத்திடம் கூறினாராம். இதுதான் அந்தக் கதை.

தினந்தோறும் இந்த நிலவறையில் பூஜை நடத்தும்போது நிவேதனம் செய்யப்படும் பால், பழம் போன்றவற்றை அங்கேயே வைத்துவிட்டுப் போவது வழக்கம். சற்று நேரம் கழித்து வந்து பார்த்தால் அதெல்லாம் இருக்காது. ஐந்து தலை நாகம் அவற்றைச் சாப்பிட்டிருக்கும்.

ஐந்துதலை நாகத்தை மாமா பலமுறை பார்த்திருக்கிறார். இதோ இப்போது நானும் பார்த்தாகிவிட்டது.

குமாரன்தம்பி மறுபடியும் ஏட்டுச்சுவடியை வாசிப்பதில் கவனத்தைத் திருப்பினான். சுற்றுப்புறத்தை மறந்தான். இடம், காலம் போன்ற உணர்வே அவனுக்கு இல்லாமலாகிப் போனது.

நிலவறையில் சிறகடியோசை உயர்ந்தது. ஐந்துதலை நாகம் பணிவாகத் தலையைத் தாழ்த்தியது. பக்தியில் லயித்திருந்த குமாரன்தம்பி எந்தவிதமான இடைஞ்சலும் இல்லாமல் மனப்பாடம் செய்வதைத் தொடர்ந்தான்.

முதலில் மாந்திரீகனது தலைக்கு மேலாக வட்டமிட்டுப் பறந்த கிருஷ்ணப்பருந்து இதோ இப்போது அவனுடைய தலையின் மீதே உட்கார்ந்திருக்கிறது.

குமாரன்தம்பி பதற்றமடையவில்லை. திகைப்படையவில்லை. பயப்படவில்லை. கவனத்தைச் சிதறவிடவில்லை. அப்போதும் அவனது நாவிலிருந்து கருடசேவை மந்திரங்கள் அனாயாசமாக உதிர்ந்து கொண்டே இருந்தன.

பொழுது விடிந்ததைக்கூட அவன் தெரிந்து கொள்ளவில்லை. பக்தியின் போதையில் அவன் மயங்கிப் போயிருந்தான்.

நிலவறையின் வாசல்படியில் வந்துநின்று உள்புறமாகப் பார்த்துக் கைகூப்பிய குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் விழிகள் நிறைந்து வழிந்தன. உக்கிரமூர்த்தியான கருடபகவான் தன் மகனது தலையில் எழுந்தருளியிருக்கிறார்! மாந்திரீக ஸித்தி பெறுவதற்கு முன்பே அவனுக்குப் கருடமூர்த்தி காட்சி தந்திருக்கிறார்! தனது மகனைப் பற்றி மனத்தில் இருந்த பயங்களெல்லாம் மறைந்துவிட்டன. குமாரன் திவ்வியமானவன்; அனுக்கிரகம் பெற்றவன். இந்தக் குடும்பத்தின் மாந்திரீகனாவதற்கு அருகதையும், யோக்கியதையும் உள்ளவன்தான். கருட பக்தியும், குடும்பப் பெருமிதமும், மகனோடுள்ள பாசமும் தோளோடு தோள் சேர்ந்து குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் இதயத்திற்குள் நுழைந்து பஞ்சவாத்ய மேளங்களை எழுப்பின. உணர்ச்சிகளின் கலவையால் அவருக்கு மூச்சுத்திணறியது.

கைவசமுள்ள ஏட்டுச்சுவடிகள் முழுவதையும் படித்து முடித்த பிறகுதான் தன் மகன் நிலவறையிலிருந்து வெளியேறுவான் என் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சிக்குத் தெரியும். அதுதான் இதுவரை நடந்துள்ள வழக்கம். பப்புத்தம்பியும் அப்படித்தான் செய்தான். மந்திரங்களும், தந்திரங்களும் மனப்பாடமாவது வரையில் நிலவறை என்பது அவர்களுக்கு ஒரு பயிற்சிசாலைதான். மாந்திரீகன் அதுவரை உபவாசத்தில் இருக்கவேண்டும்.

பயிற்சி முடிந்துவிட்டால் தொடர்ந்து நாள் கணக்கில் இடைவிடாமல் பூஜைகளும், ஹோமங்களும் நடக்கும். அப்படிப் பட்ட சமயங்களில் நிலவறை ஒரு ஹோம மண்டபமாக மாறும்.

பூஜைகளும், ஹோமங்களும் நடக்கும்போது மாந்திரீகன் துர்ச்சகுனங்களைக் காண நேரிடலாம். சில கடுமையான சோதனைகளுக்கும் ஆளாக வேண்டி வரலாம். அவற்றை யெல்லாம் நேரிட்டு வெற்றி பெற்று லட்சிய பீடத்தை அடைய புத்தூர் குடும்பத்தின் முந்தைய மாந்திரீகர்களால் முடிந்திருக்கிறது. தன் மகனாலும் அது முடியும்!



ரகசியமாகத்தான் மாந்திரீகன் அனுஷ்டானங்களை நடத்த வேண்டுமென்பது குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்கு ஞாபகம் வந்தது. தான் அங்கே நிற்பதுகூட சரியல்லவென்று அவருக்குத் தோன்றியது. சட்டென்று வீட்டுக்குள் போனார்.

பூஜையறை வாசலை அடைந்தபோது வாத்திய சங்கீதத்தின் மங்களகரமான இசை கேட்பதாக அவருக்குத் தோன்றியது. காதுகளைக் கூர்மைப்படுத்திக் கேட்டார். இப்போது கேட்பது இனிமையான சுருதியுடன் கூடிய ஒரு பாட்டு. இனிமையான ஆண் குரல்! மனத்தை மயக்கும் அந்தப் பாட்டு அவரை மெய்சிலிர்க்க வைத்தது!

இவ்வளவு அருமையாகப் பாடத் தெரிந்த பாடகன் யாராக இருக்க முடியும்? இந்தக் குடும்பத்தின் உறவுத் தொடர்புள்ள எவரும் இதுவரை பாடகனானது இல்லை. அண்டை அயல் வீடுகளிலும் அப்படி யாரும் கிடையாது. அப்படியானால் இங்கு வந்து இப்போது பாட்டுப் பாடுவது யார்?

பாட்டு புறப்படும் இடத்தைக் கண்டுபிடிப்பதில் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் கவனமும், முயற்சியும் திரும்பின. அவரது முயற்சிக்குப் பலனும் கிடைத்தது. சமையலறையிலிருந்துதான் பாடகன் தன்னை மறந்து பாடிக் கொண்டிருந்தான். யார் அந்தத் தேவப்பாடகன்?

சமையலறைக் கதவை நெருங்கிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அப்படியே அசைவற்று நின்று போனார். தான் காண்பது என்ன? இது கனவா அல்லது உண்மைதானா?

பகல் வெளிச்சத்தில் தெரியும் காட்சி எப்படிக் கனவாக இருக்க முடியும்? ஆனால், நம்ப முடியாத ஒரு காட்சியைக் கண்டால் அதை உண்மையென்று எப்படி நம்புவது?

திகைப்படைந்த மனத்துடன், வியப்பு சுருதி மீட்டும் விழிகளுடன், அசையும் தன்மையை இழந்துவிட்ட உடலுடன் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அப்படியே ஒரு சிலை போல் நின்றுவிட்டார்!

# 9

"கடவுளே! நான் காண்பது என்ன?"-குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தன்னை மறந்தவராக உரத்த குரலில் கேட்டார்.

சமையலறையின் வடக்குப்புற வாசல்படியில் அமர்ந்து நாணிக்குட்டி பாட்டுக்குப் பாடிக்கொண்டிருந்தாள் - அதுவும் ஆண் குரலில்! இதயத்தைக் கவரும் ஸ்வரத்தில், தாளம் தவறாமல் வீணை மீட்டியபடி பாடிக் கொண்டிருந்தாள்!

இவள் 'சங்கீதத்தின் பக்கமே போனதில்லை. சங்கீதமே படிக்காதவள் ராகம், தாளம் பிசகாமல் பாடுவதைவிட வேறு என்ன அதிசயம் இருக்க முடியும்?- குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி யோசனையில் ஆழ்ந்தார்.

இவளது தங்கை லக்ஷ்மிக்குட்டி நன்றாகப் பாடுவாள். திருவாதிரை ஆட்டம் ஆடுவாள். திருவாதிரைப் பாட்டுகளையும், கதகளிப்பதப் பிரயோகங்களையும் அவள் இனிமையாகப் பாடியதுண்டு. கிள்ளைமொழியை நினைவூட்டும் குரல் அவளுடையது. ஆனால், நாணிக்குட்டிக்கு சங்கீதத்தில் ஸ்நானப்பிராப்திகூடக் கிடையாது. அது மட்டுமா, நாணி இதுவரை பாட்டுப் பாடியே தான் கேட்டதில்லை. சிவராத்திரி சமயங்களில் இங்கு நடைபெறும் திருவாதிரைக் கொண்டாட்டங்களில் நாணியும் கலந்து கொள்வதுண்டு. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில்கூட நாணி இதுவரை பாட்டுப் பாடியதில்லையே!

தன்னைப் பார்த்தபிறகும் பார்க்காத மாதிரி உட்கார்ந்திருக் கிறாள். தான் முன்னால் வந்து நிற்பதைத் தெரிந்து கொண்ட பிறகும் பார்க்காத மாதிரியே ஒரு பாகவதரின் தோரணையில்



தொடையில் தாளம் தட்டிப் பாடுகிறாள். நடுநடுவே தன்னை ஏறிட்டுப் பார்த்து இளக்காரமாகச் சிரிக்கவும் செய்கிறாள்.

அவளுக்குத் தன்மீதுருந்த மரியாதை எங்கே போனது? தனக்கு முன்பாக பயபக்தியுடன் பவ்வியமாக நடந்து கொள்கிற நாணிக்குட்டிதானா இவள்?

"அடியே பாகவதரே! பொழுது விடிந்த நேரத்தில் பாட்டுக்கச்சேரி நடத்திட்டிருந்தா சமையற்கட்டு வேலை நடக்குமா?"- குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி குரலை உயர்த்திக் கேட்டார் என்றாலும் அதனால் எந்தவிதப் பாதிப்பும் அடையாத மாதிரியே நாணிக்குட்டி பாட்டுக்குப் பாடிக் கொண்டிருந்தாள்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்கு வந்த கோபம் கொஞ்ச நஞ்சமல்ல. அவர் அவளது அருகே சென்று "எழுந்திருடி முண்டம்... காலையில் சதிர்க்கச்சேரி வச்சு உட்கார்ந்திருக்கிற"- என்றபடி வலது கையை ஓங்கவும் செய்தார்.

பாட்டை நிறுத்திய நாணிக்குட்டி, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியை கடுமையாக உற்றுப் பார்த்தாள். அவளது கண்கள் அளவுக்கு அதிகமாகச் சிவந்திருந்தன.

மிகவும் அமைதியான இயல்புடைய அவளுக்குக் கோபமும் வந்திருக்கிறது.

"என்னடி, கண்ணை உருட்டுற? உனக்கென்ன பைத்தியமா?" கோபத்துடன் அவர் திட்டினார்.

சமையலறை வாசற்படியிலிருந்து நிதானமாக எழுந்த நாணிக்குட்டி, குஞ்ஞுகுட்டித்தங்கச்சியின் கண்களை உற்றுப் பார்த்தபடி கோபக் குரலில் கேட்டாள்: "நீ யாருடி என்கிட்டச் சண்டை போட? நான் யாருன்னு உனக்குத் தெரியுமா?"

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வாய்விட்டுச் சிரித்தார். "உன்னைத் தெரியாதேடி அம்மா! நீ யாருன்னோ, உன் அப்பாதான் குமாரசார்னோ எனக்குத் தெரியாதுதான். ஒப்புக்கிறேன்."

"அப்படின்னா எனக்குத் தொல்லை தராம இடத்தைவிட்டுக் கிளம்பு!"- நாணிக்குட்டி கட்டளையிடும் தொனியில் கூறினாள்.

ஒரு விஷயத்தை குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பிரத்தியேகமாகக் கவனிக்கத் தவறவில்லை. ஓர் ஆடவனின் குரலில், அதே தோரணையில் அவள் பேசிக் கொண்டிருந்தாள். அதில் ஏதோ விபரீதம் இருப்பதாக அவருக்குத் தோன்றியது.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி ஒன்றும் புரியாமல் திகைத்து நின்றபோது நாணிக்குட்டி அங்கிருந்து நேராகத் தென்புறத் தளத்திற்குச் சென்று சப்ரமஞ்சக் கட்டிலில் ஏறிப் படுத்துக் கொண்டாள்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தலையைப் புண்ணாக்கிக் கொண்டு யோசித்தார். இதையெல்லாம் நாணிக்குட்டி வேண்டுமென்றே செய்யவில்லை என்பது புரிந்தது. அடக்க ஒடுக்கமாக நடந்து கொள்ளும் இயல்புள்ள இவளுக்கு மனோவியல் ரீதியாக ஏதோ நேர்ந்துள்ளது. இல்லாவிட்டால் ஏதோ ஒரு துர்த்தேவதை இவளைப் பிடித்துள்ளது என்பது உறுதி.

மாந்திரீக ஸித்தி பெறுவதற்கான முயற்சியில் தன் மகன் ஈடுபட்டுள்ள சமயத்தில் அதைத் தடை செய்யும் பொருட்டு ஏதோ ஒரு பிசாசு நடத்தும் லீலையாக இது ஏன் இருக்கக்கூடாது? எப்படிப்பட்ட குரலில் வேண்டுமானாலும் பேசவும், எந்த ராகத்திலும் பாடவும், எந்த வாத்தியக் கருவியை மீட்டவும் வல்லமை வாய்ந்த எத்தனையோ துர்த்தேவதைகள் இருக்கின்றன என்று கேள்விப்பட்டிருந்தார். அப்படிப்பட்ட எத்தனையோ ரக்ஷஸுகளை தன் சகோதரன் பப்பு விரட்டி ஓட்டியிருக்கிறான். இருந்தாலும் இந்த வீட்டுப் படியேறி இதுவரையில் எந்தத் துர்த்தேவதையும் நுழைந்ததாக நினைவில்லை.

'குமாரனை அழைக்கலாமா?'-அவர் ஒரு கணம் யோசித்தார். பிறகு மனத்தை மாற்றிக் கொண்டார். 'வேண்டாம், அவன் பக்திபூர்வமாக மந்திரங்களைக் கற்றுக்கொள்வதில் ஈடுபட்டிருக்கிறான். இந்தச் சமயத்தில் அவனைத் தொல்லைப் படுத்த வேண்டாம். அதுவுமின்றி நிலவறையில் கருடபகவான் எழுந்தருளியுள்ள நேரம் இது!



"சகோதரீ"- என்ற குரல் கேட்டதுபோல் தோன்றவே குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி லேசாகத் திடுக்கிட்டார். ஆமாம். இறந்து போன சகோதரன் பப்புவின் குரல்தான் கேட்டது.

"சகோதரீ! தைரியத்தை இழக்காம நாணிக்குட்டியின் உடல்ல குடியிருக்கும் பீடையை விரட்டு. என் பிரம்பைக் கையில் எடுத்துக்கொள். நம் முன்னோர்களைத் தியானித்துச் செயல்படு"- பப்புத்தம்பி சொன்னதுபோலவே குஞ்ஞுக்குட்டிதங்கச்சிக்குத் தோன்றியது.

அதுவரை ஏற்படாத தைரியம் அவரது மனத்திற்குள் பாய்ந்து வந்தது. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி விரைந்து போய் கை கால்களைக் கழுவினார். உடையை வரிந்து கட்டி, நெற்றியில் விபூதியைப் பூசிக் கொண்டார். பூஜையறைக்கு முன்பாகச் சற்று நேரம் தியானத்தில் ஈடுபட்டார்.

"என் கருட பகவானே, குடும்பக் காவலான யக்ஷித்தாயே, பித்ருக்களே... மாமன்மார்களே... மங்குப்பாட்டி... நீங்கள்தான் உதவவேண்டும்" மனமுருகிப் பிரார்த்தனை செய்தார்.

தென்புறத் தளத்தின் மூலையொன்றில் சாய்த்து வைத்திருந்த வெள்ளிப்பூண் போட்ட பிரம்பைக் கையில் எடுத்தபோது குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்குள் புதியதொரு தைரியம் தோன்றியது. மனத்திலிருந்த பயம் விலகியது. தான் ஒரு மந்திரவாதினி என்கிற உணர்வு மனத்தைத் தழுவியது.

சப்ரமஞ்சக்கட்டிலில் நீட்டி நிமிர்ந்து படுத்திருந்த நாணிக்குட்டிக்கு நேராகப் பிரம்பை ஓங்கியபடி குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கேட்டார்: "யார் நீ? மரியாதையா உண்மையைச் சொல்!"

பைத்தியக்காரத்தனமான ஓர் அட்டகாசச் சிரிப்புடன் நாணிக்குட்டி எழுந்தாள். தீப்பொறி பறக்கும் கண்களில் வைராக்கியம் அரங்கேறியது. அலறும் குரலில் அவள் பேசினாள். "உன்னோட இந்தப் பிரம்புக்கெல்லாம் நான் பயப்படமாட்டேன்.

நீ என்னை ஏதாவது செஞ்சா நான் உன்னையும் உன் மகனையும் கொன்னுடுவேன்."

கோபம் தலைக்கேறிவிட்ட குஞ்ஞுக்குட்டிதங்கச்சி அதன் பிறகு எதைப் பற்றியும் யோசிக்கவே இல்லை. பிரம்பால் நாணிக்குட்டியின் உச்சந்தலையில் ஓங்கி அடித்தார். அடிபட்டுத் துடித்த நாணிக்குட்டி தொழுத கைகளுடன் சொன்னாள்: "அந்தப் பிரம்பால நீங்க இனி என்னை அடிக்கக்கூடாது. வேறொரு பிரம்பெடுத்து வேணும்னா அடிங்க!"

"இல்லை. இந்தப் பிரம்பாலதான் உன்னை அடிப்பேன்"- முன்னைவிட அதிகக் கோபத்துடன் அவர் அடிக்கத் தொடங்கினார்.

"ஐயோ! அடிக்கிறதை நிறுத்துங்களேன். நான் எல்லாத்தையும் சொல்லிடுறேன்."

"சரி, அப்படியானால் சொல்"- அடிப்பதை நிறுத்திவிட்டுக் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கோபக் குரலில் கேட்டார்.

"நான் ஒரு கந்தர்வன்!"

"எதுக்காக இங்க வந்தாய்? ஏன் நாணிக்குட்டியின் உடம்பில புகுந்து கொண்டாய்?"

"நாணிக்குட்டிக்குத் தொல்லை கொடுக்கிறதுக்காக நான் வரலை. என் வர்க்கத்தையே அழிப்பதற்காக மந்திர ஸித்தியைப் பெற தீவிரமா பயிற்சியில ஈடுபட்டிருக்கும் உங்க மகனை அழிப்பதற்குத்தான் வந்திருக்கிறேன். அதுக்கு நாணிக்குட்டியை ஒரு கருவியா பயன்படுத்தினேன்."

"அவன் வாசித்துக் கொண்டிருப்பது விஷக்கடிக்கு மாற்றான சிகிச்சையும் கருட மந்திரங்களையும்தானே? அதில கந்தர்வர்களான உங்களுக்குக் கோபம் ஏன்?"

"உங்க மகன் எல்லா மந்திரங்களையும் படிப்பான். எல்லாவித மாந்திரீகப் பிரயோகங்களையும் நடத்துவான். ஒரு காரியம் செய்றீங்களா? கருடசேவை மந்திரங்களை மட்டுமே அவன் படிப்பான்கிறதுக்கு நீங்க உத்திரவாதம் தரமுடியுமா?"



"உத்திரவாதமா? எந்த உத்திரவாதமும் தர முடியாது. அவன் நிலவறையில இருக்கிறான். இப்பவே நான் அவனை கூப்பிடுறேன். அவனுடன் கிருஷ்ணப்பருந்தும் இங்க வரும். கிருஷ்ணப்பருந்து உன்னைக் கொத்திக் குதறுவதற்கு முன்னாடி நீ இங்கிருந்து ஓடிப்போயிடுறது நல்லது" பிரம்பை ஓங்கியபடி குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அலறினார்.

"சரி, தற்சமயம் நான் போறேன். தேவைப்படும்போது நான் மறுபடியும் வருவேன்."

நாணிக்குட்டி பொத்தென்று தரையில் விழுந்தாள். அதே சமயம் வீட்டின் தென்புறத்தில் எதுவோ ஒன்று உடைந்து விழுவது போன்ற பயங்கரச் சத்தம் கேட்டது.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி நாணிக்குட்டியின் முகத்தில் தண்ணீர் தெளித்தார். தூக்கத்திலிருந்து விழிப்பதுபோல் அவள் எழுந்தாள். திகைப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தாள்.

"பயப்படாதே நாணிக்குட்டி. கந்தர்வனை நான் அடித்து விரட்டிட்டேன்."

"கந்தர்வனா, அம்மச்சி என்ன சொல்றீங்க?"

"ஓ... ஒண்ணுமில்லை. அதை விவரமா அப்புறம் சொல்றேன். நீ சமையற்கட்டுக்குப் போ."

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பூண்போட்ட பிரம்பை பக்திபூர்வமாக அதன் பழைய இடத்திலேயே வைத்தார். பரம்பரை பரம்பரையாக மாந்திரீகர்கள் பயன்படுத்திக் கைமாறி வந்துள்ள இந்தப் பிரம்புக்கு வெள்ளியால் பூண் செய்து போட்டவன் தனது சகோதரன் பப்பு. மாந்திரீகனது அடையாளச் சின்னமான இந்தப் பிரம்பு இப்போது தன் மகனுக்குச் சொந்தமானது. மாந்திரீகனைத் தவிர வேறு யாரும் பயன்படுத்தக்கூடாத பிரம்பை, தான் உபயோகிக்க நேர்ந்துவிட்டது. பிரம்பின் மாந்திரீக சக்தியைக் குறித்து மதிப்புத் தோன்றியவுடன் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கூப்பிய கைகளை உயர்த்திப் பிரார்த்தித்தார். "என்னை மன்னிக்கணும்

காரணவர்களே! கந்தர்வனை விரட்டுறதுக்காக நான் இதைப் பயன்படுத்தினேன்."

தெற்குப்புறம் கேட்ட பயங்கர சத்தம் எதனால் என்பதை அறிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கதவைத் திறந்துகொண்டு தென்புற முற்றத்திற்கு வந்தார்.

அவர் கண்ட காட்சி-

தென்புற படிப்புரை (ஒவ்வொரு வீட்டின் தெருவாசற்படியிலும் ஓடுவேய்ந்து வெயில், மழைக்கு ஒதுங்க உள்ளும் புறமும் இடம் ஒதுக்கப்பட்டிருக்கும் பகுதி படிப்புரை எனப்படும்.) நொறுங்கிச் சிதறியிருந்தது!

"கந்தர்வன் போன போக்கில் செய்துவிட்டுப் போன அட்டகாசம்!" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தனக்குத்தானே சொல்லிக் கொண்டார்.

## 10

ஐந்து இரவு - பகல்களை நிலவறைக்குள்ளேயே செலவழித்த பிறகு வீட்டிற்குள் வந்த குமாரன்தம்பியை, குஞ்சுக்குட்டித் தங்கச்சி இறுகக் கட்டியணைத்தார். மகனது நெற்றியில் முத்தமிட்ட பிறகு கேட்டார்: "மந்திரங்களையெல்லாம் படிச்சு முடிச்சுட்டியா மகனே?"

"ஆமாம்... இனி பூஜைகளையும், ஹோமங்களையும் ஆரம்பிக்கணும்மா. ஆராதனா மூர்த்திகளை ஆவாஹம் செஞ்சு பூஜை செய்றதுக்கான யந்திரங்களையும், ஹோமத்திற்குத் தேவையான பொருள்களையும் தயார் பண்ணணும். நான் பட்டியலை எழுதி வைக்கிறேன். மாலை நேரத்திற்குள்ள எல்லாத்தையும் தயார் செய்துவிடணும். தர்ப்பணத்துக்கான தங்கப் பாத்திரங்களும், இரும்பு, மண், மரப் பாத்திரங்களும்



நிலவறையிலே இருக்கு. நாளையதினம் துவிதிய சப்தமியும் வியாழக்கிழமையும் சேர்ந்த சுபதினமாச்சே? நாளைக் காலையிலிருந்தே கர்மங்களைத் தொடங்கட்டுமா? உங்க அபிப்பிராயம் என்னம்மா?"

"உன் விருப்பப்படியே நடக்கட்டும். நீ சீக்கிரமாப் போய் குளிச்சுட்டு வா. நீ எதையாவது சாப்பிட்டு ஐந்து நாளாச்சே?"

அம்மாவின் யோசனைக்கு ஒப்புக்கொண்ட குமாரன்தம்பி முற்றத்தை நோக்கி நடந்தான். மகன் போவதையே கவனித்துக் கொண்டிருந்த தாயின் மனத்தில் வியப்பு அதிகரித்தது.

ஐந்துநாள் உபவாசம் மகனிடம் எந்தவிதமான சோர்வையும் ஏற்படுத்தவில்லை. காலைக் கடன்களைக் கூடக் கழிக்காமல் ஊண் உறக்கத்தைத் தியாகம் செய்து ஒரு யோகியை மாதிரியல்லவா, இடுங்கிய நிலவறைக்குள் ஐந்து இரவு பகல்களைத் தன்மகன் செலவழித்திருக்கிறான்?

தாய்மாமனின் நாற்பத்தியோராவது நாள் சடங்குகளை நடத்திய பிறகு அன்று மாலை நேரத்தில் பரம்பரைக் கொட்டாரத்திற்குப் போன குமாரனுக்கு அதன் பிறகு ஓய்வு ஒழிச்சல் என்பதே இருக்கவில்லை. உணவும் உறக்கமும் கூட தேவைப்படவில்லை.

கொட்டாரத்துக்குப் போன மகன் திரும்பி வருவதை எதிர்பார்த்து நள்ளிரவுவரை தான் தூங்காமல் காத்திருந்தோம். பிறகுதான் அசதியாக இருந்ததால், படுக்கைக்குப் போய் முதுகை நிமிர்த்தினோம். தான் சற்றுக் கண்ணயர்ந்த நேரத்தில் அவன் திரும்பி வந்தான். தன்னைச் சிரமப்படுத்த வேண்டாமென்றுதான் நாணிக்குட்டி எழுப்பவில்லை என்று தோன்றுகிறது. வீட்டிற்குள் நுழைந்தவுடன் நிலவறைக்குள் சென்று 'தபஸ்' அனுஷ்டிப்பான் என்பதைப் பாவம் அவள்தான் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்?

கொட்டாரத்தின் பூஜையறையில் நுழைந்து ஓலைச் சுவடிகளை எடுத்தபோது மகனுக்கு ஏதாவது சோதனைகளைச்

சந்திக்க நேர்ந்திருக்குமோ? பயப்படுத்தக்கூடிய சம்பவங்கள் ஏதாவது நிகழ்ந்திருக்குமோ?

மாந்திரீகனாகப் பதவியேற்ற தன் மகனிடம் அவனுக்கு நேர்ந்த அனுபவங்கள் என்னென்னவென்று விசாரிப்பது உசிதமல்ல. ஒரு மாந்திரீகனுக்குப் பலவித அனுபவங்கள் ஏற்படலாம். பலவிதத் தொல்லைகளும் நேர்ந்திருக்கலாம். ஆனால், அவற்றுக்கு எல்லாம் ஈடுகொடுத்து தகுந்த பதில் நடவடிக்கைகளை மேற்கொள்ள முடிந்தவர்கள்தான் புத்தூர் தறவாட்டின் மாந்திரீகர்கள்.

கொட்டாரத்தின் பூஜையறையில் கருட பகவான் எழுந்தருளுகிறார். பித்ருக்களைத் தவிர, குடும்ப யக்ஷியும் அங்குதான் வசிக்கின்றனர். குடும்ப யக்ஷி தறவாட்டின் பரதேவதையும்கூட. இவையெல்லாம் யாரையும் தொல்லைப் படுத்தக் கூடியவை அல்ல. இருந்தாலும் குமாரனைச் சோதித்துப் பார்க்க வேண்டும் என்ற எண்ணத்தில் யக்ஷித்தாய், தன்னுடைய சுயவடிவத்தில் காட்சியளித்திருப்பாளோ? அதாவது சாத்துமாமா முன் காட்சியளித்தது மாதிரி.

சாத்துமாமா குடும்பயக்ஷியைப் பார்த்த கதையைத் தன்னுடைய தாயார் ஒரு தடவை விவரித்ததை, நடுக்கத்தோடு இப்போதும் நினைத்துப் பார்க்க முடிகிறது...

பெரிய மாமாவின் மரணத்துக்குச் சற்று முன்தான் அவர், சாத்துமாமாவுக்கு மந்திரோபதேசம் செய்தார். பரம்பரையில் அதுவரை தொடர்ந்த வழக்கத்தையொட்டி, பெரிய மாமா இறந்த நாற்பத்தியோராவது நாளன்று மாலை நேரத்தில் சாத்துமாமா கொட்டாரத்துக்குச் சென்று பூஜையறையைத் திறந்தார். கருட பகவானையும், பித்ருக்களையும், முன்னோர்களையும் மனத்தில் பிரார்த்தனை செய்தபடி உடைவாளை எடுத்தார். தியானம் முடிந்து வாளை மறுபடி எடுத்த இடத்தில் வைத்துவிட்டு, ஓலைச் சுவடிகளுடன் திரும்ப முயன்றபோது இருளடைந்த பூஜையறையில் திவ்வியமான ஓர் ஒளி பரவியது. கண்ணைக் கூசச் செய்யும் அந்த ஒளிவளையத்துள் சிக்கிக்கொண்ட சாத்துமாமா ஏகத்துக்குப்



பயந்து போனார். அப்போது அன்புடன் அழைத்த ஒரு பெண் குரல் கேட்டது: "மகனே சாத்து, நீ யக்ஷியத்தாயை மறந்துவிட்டாயா?"-சாத்து மாமாவிற்குச் சட்டென்று விஷயம் புரிந்தது. தான் யக்ஷித்தாயை வழிபட மறந்து போனதற்காகப் பச்சாத்தாபம் அடைந்தார். பிறகு கூப்பிய கைகளை உயர்த்தியபடி குடும்ப யக்ஷியைத் தியானிப்பதற்காக யக்ஷிணி மந்திரத்தைப் பக்தியுடன் ஜபித்தார்.

குடும்ப மாந்திரீகர்களுக்கு மட்டுமல்ல, குடும்பத்திலுள்ள எல்லோருக்கும் மனப்பாடமாக இருந்த மந்திரம் நினைவுக்கு வந்தது.

*ஸுவர்ண்ணபிரபாம் ரத்னபூஷாபிராமாம்*
*ஜபாபுஷ்ப ஸச்சாய வாஸோயுகாட்யாம்*
*சதுர்த்தி க்ஷுதாஸீகணைஸ் ஸேவிதாஹ்ரீம்*
*பஜே ஸர்வஸௌக்ய்யப்ரதாம் யக்ஷிணீம்தாம்.*

எதிரி பற்றிய பயத்திலிருந்து பாதுகாப்புக் கோரவும், ஆபத்திலிருந்து மீளவும் இந்தத் திவ்ய மந்திரம் உதவும் என்பது குடும்பத்தினரின் நம்பிக்கை.

மந்திர ஜபத்தை முடித்துவிட்டுக் கண்களைத் திறந்தபோது சாத்துமாமா யக்ஷித்தாயைப் பார்த்தாராம். சிவப்புப் பட்டுத்துணியினால் மார்புக்கச்சை கட்டி, சர்வாலங்கார பூஷிதையாக, புன்சிரிப்புடன் நின்று கொண்டிருந்தாராம், தங்கச்சிலை மாதிரி உடலழகுள்ள ஓர் அழகி. ஒரே ஒரு நிமிடம் மட்டும் காட்சி தந்த யக்ஷித்தாய் உடனே மறைந்துவிட்டாராம்.

மகா மாந்திரீகனாக விளங்கிய முப்பாட்டன் கேளு நாயரின் ஆராதனைக்குரியதாக இருந்தது இந்த யக்ஷித்தாயென்றும், முப்பாட்டனின் மரணத்தைத் தொடர்ந்து மலபார் பகுதியிலிருந்து புத்தூர் தறவாட்டுக்கு வந்த யக்ஷியை, எப்போதோ பரம்பரையில் வந்த ஒரு மாந்திரீகர் ஆவாஹம் செய்து கொட்டாரத்தின் பூஜையறையில் பதித்ததாகவும் கேள்விப்பட்டதுண்டு.

நாணிக்குட்டியின் உடம்பில் பிரவேசித்திருந்த கந்தர்வனை, தான் விரட்டியடித்த விஷயத்தை குமாரனிடம் சொல்ல வேண்டுமா? மாந்திரீகனான அவன் தெரிந்து கொள்ள வேண்டிய சம்பவமாயிற்றே இது.

குளித்துவிட்டு வந்த குமாரன்தம்பி அழைத்தபோது குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி யோசனைகளிலிருந்து விடுபட்டார்.

மகனுக்கு உணவு பரிமாறும்போது அவர் சொன்னார்: "மகனே! இங்க ஒரு சம்பவம் நடந்தது. நாணிக்குட்டியோட உடம்பில..."

அவர் வார்த்தையை முடிப்பதற்கு முன்பாகவே குமாரன்தம்பி கேட்டான்: "கந்தர்வன் பிரவேசம் பண்ணிட்டான்... இல்லையா?"

"ஆமாம், அது எப்படி உனக்குத் தெரிஞ்சது?" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி வியப்புடன் கேட்டார்.

"தென்புற .படிப்புரை இடிஞ்சு விழுந்து கிடப்பதைப் பார்த்தபோது எனக்கு விஷயம் விளங்கிடுச்சு. இங்க நடந்ததெல்லாம் என் மனசில தெளிவாகத் தெரிஞ்சது அம்மா..." அவன் புன்னகையுடன் பதிலளித்தான்.

உணவுண்டு முடிந்ததும் குமாரன்தம்பி ஒரு பட்டியலை எழுதி அம்மாவிடம் கொடுத்தான். அந்தப் பட்டியலின்படியுள்ள பொருள்களைச் சேகரிப்பதில் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் நாணிக்குட்டியும் தீவிரமானார்கள்.

எதற்காகவோ உட்புறத் தளத்துக்கு வந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி வியப்படைந்தார். சப்ரமஞ்சக் கட்டிலில் படுத்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்த மகன் இதோ எழுந்து பூஜையறை வாசலில் ஒற்றைக் காலில் நின்று கருட சேவையில் ஈடுபட்டிருக்கிறான். நேரம் மதியம்தான் ஆகியிருந்தது. இப்போது இவன் ஜபம் தொடங்கியது என்ன காரணத்துக்காக இருக்கும்?

ஒருவேளை யாருக்காவது விஷக்கடி பட்டிருக்குமோ? அது இவனது மனத்துக்குத் தெரிந்திருக்குமோ? அப்படியானால் அது



வியப்புக்குரிய ஒரு விஷயம்தான். மாந்திரீக ஸித்தி முழுவதுமாகக் கைவந்த பிறகு ஏற்படும் ஒன்று ஞானதிருஷ்டி. அப்படிப்பட்ட ஞானதிருஷ்டி எனும் புலனறிவு தன் மகனுக்கு இவ்வளவு விரைவிலேயே ஸித்தித்துவிட்டதா?

பூஜையறை வாசலையே பார்த்துக் கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி ஆனந்த மிகுதியால் பரவசம் அடைந்தார். அதுவும் திடுமென்று நிகழ்ந்தது. பூஜையறைக்கு முன்புறமாக ஒரு கிருஷ்ணப்பருந்து வட்டமடித்தபடி பறந்து கொண்டிருந்தது. அதை உணர்ந்து கொண்டவனைப் போல் குமாரன்தம்பி உரத்த குரலில் மந்திரத்தை உச்சாடனம் செய்தான். கருடனுடைய சிறகடியோசை மந்திர ஒலிகளுக்குத் தாளம் இசைத்தன!

மகன் இப்போது ஜபித்துக் கொண்டிருந்த கருட மந்திரத்தின் பொருள், ஸம்ஸ்கிருதத்தில் தேர்ச்சி பெற்றிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்குப் புரிந்தது.

'நெருப்பில் கனிந்த தங்கம் போன்ற உடல் ஒளி, ஆபரணங்களாக அணிந்திருக்கும் பாம்புகள், பக்தர்கள் வேண்டிக்கொண்டால் எவ்வளவு கடினமான விஷக்கடித் தொல்லையையும் நீக்கிவிடும் இயல்பு, கைகளில் அபய முத்திரைகள். சிறகடியோசை என்கிற சாமவேதப் பாட்டின் [illegible] போன்றவற்றின் உடைமையாளனான நிர்மலமான [illegible], பறவைகளின் மன்னனான கிருஷ்ணப்பருந்தே! கருட [illegible]னே! உங்களை நான் வணங்குகிறேன்!'

வீட்டின் முற்றப்பகுதியில் ஏதோ சத்தம் கேட்பது போல் தோன்றவே, கிழக்குப்புறக் கதவைத் திறந்தார் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி.

[illegible]ண்டு போயிருந்த ஒரு பெண்குழந்தையை இரண்டு பேர் [illegible] பிடித்தபடி வந்தனர். அவர்களுடன் ஏராளமான ஆண்களும், [illegible]இருந்தனர். எல்லோரும் பரபரப்புடன் தென்பட்டனர்.

"குழந்தையைத் திண்ணையில் படுக்க வையுங்க" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கூறினார்.

குழந்தையைச் சுமந்திருந்திருந்தவர்கள் ஆறுதலுடன் அவளைத் திண்ணையின் குறுக்கே நீளவாக்கில் படுக்க வைத்தனர்.

திறந்துகிடந்த வெளிவாசலின் வழியாக எல்லோரும் பூஜையறையின் வாசலை எட்டிப் பார்த்தனர். இடது உள்ளங்கையில் விபூதியையும், வலது கையில் கிண்டியையும் ஏந்தியபடி ஒற்றைக்காலில் தவம் செய்து கொண்டிருந்தான் குமாரன்தம்பி. நடுமுற்றத்தில் பறந்து கொண்டிருந்தது ஒரு கிருஷ்ணப்பருந்து!

திடுமென்று அது நிகழ்ந்தது. கிருஷ்ணப்பருந்து மேற்புறமாகப் பறந்து மறைந்தது. குமாரன்தம்பி கண்களைத் திறந்தான். நடுமுற்றம் வழியாக கிழக்குப்புறத் திண்ணைக்குப் பாய்ந்து வந்தான்.

பெண்குழந்தையின் இடது கால் பாதத்தின் மேற்புறத்தில் ரத்தம் உறைந்து போயிருந்தது. அந்த இடத்தில் குமாரன்தம்பி விபூதியைத் தேய்த்து அழுத்தினான். பின்பு கிண்டியிலிருந்து கொஞ்சம் தண்ணீரை அந்த இடத்தில் சொரிந்தான். அதே தண்ணீரைக் கொஞ்சம் கையில் பிடித்துக் குழந்தையின் முகத்தில் வலுவாக வீசியடித்துவிட்டுக் கட்டளையிட்டான்; "உம் எழுந்திரு!"

தூக்கத்திலிருந்து விழிப்பதுபோல் அந்தப் பெண் எழுந்து கண்களைக் கசக்கினாள். குழந்தையுடன் வந்தவர்கள் வியப்பில் வாயடைத்துப் போனார்கள்.

"நீங்கதான் எங்களோட கண்கண்ட தெய்வம். மத்தியான வேளையில பள்ளிக்கூடத்திலிருந்து வர்ற வழியில இவளை ஏதோ ஒண்ணு கடிச்சிருக்குது. பாதையிலேயே மயக்கம் போட்டு விழுந்துட்டா. நீங்கதான் எங்க குழந்தையைக் காப்பாற்றித் தந்திருக்கிங்க" - குந்தையின் தந்தை கண்ணீருடன் நன்றி தெரிவித்தார்.

எல்லோரும் விடைபெற்றுப் போனபிறகு குமாரன்தம்பி அம்மாவிடம் சொன்னான்; "நான் சாப்பிட்டு முடித்துப் பட்டியல் எழுதிக் கொண்டிருந்தபோது இந்தக் குழந்தையைக் கருநாகம் தீண்டியிருக்கு. இரண்டு நாழிகைக்குள்ள இங்க கொண்டு வருவாங்கன்னு என் மனசுக்குத் தோன்றியது."



மகனது வார்த்தைகள் அம்மாவின் இதயத்தில் பன்னீர் அபிஷேகம் நடத்தின. மகாமாந்திரீகர்களுக்கு ஸித்திக்கும் ஞானதிருஷ்டி தன் மகனுக்கும் ஸித்தித்திருக்கிறது! குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர்த் துளிகள் பெயர்ந்து விழுந்தன!

# 11

ஹோமத்திற்கும் பூஜைக்கும் தேவையான பொருள்களை எல்லாம் சேகரித்து நிலவறைக்குள் கொண்டுபோய் வைத்தபோது மாலை நேரம் கடந்துவிட்டிருந்தது. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் நாணிக்குட்டியும் சோர்வடைந்திருந்தனர். வெளி வேலைகளைச் செய்த வேலைக்காரர்களுக்குக் கூலி கொடுத்து அனுப்பிய பிறகு, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி நாணிக்குட்டியிடம் சொன்னார்; "நான் இன்னிக்கு சீக்கிரமாக படுத்துக்கப்போறேன், நீயும் ஏதாவது சாப்பிட்டுப் படுத்துக்கோ."

"அம்மச்சி. . .நீங்க நல்லாச் சாப்பிட்டு எத்தனையோ நாளாச்சு? இன்னிக்கும் ராத்திரி எதுவும் சாப்பிடாம படுத்துக்கப் போறீங்களா?" - நாணிக்குட்டி புகார் செய்வது போல் கேட்டாள்.

"குமாரன் மறுபடியும் உபவாசம் ஆரம்பிச்சிருக்கும்போது நான் மட்டும் எப்படிச் சாப்பிடுறது? இனி அவன் நிலவறையிலிருந்து எப்போ வெளியே வரப்போகிறானோ, கடவுளுக்குத்தான் தெரியும். நாளைக் காலையில ஆரம்பிக்கிறதா இருந்த பூஜையை இன்னிக்கே தொடங்கியிருக்கிறான்."

"பூஜை ஆரம்பிச்ச மாதிரித் தெரியுதே அம்மச்சி. மணியடிக்கும் சத்தம் கேக்குது. நீங்க சாமி கும்பிடப் போகலையா?"

நாணிக்குட்டியின் பேச்சைக் கேட்ட குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சிரித்துக்கொண்டார்; "உனக்கு என்ன தெரியும்? மாந்திரீகனின்

பூஜையும், ஹோமமும் ரகசியமானதாச்சே? யாரும் அதைப் பார்க்கக்கூடாது நாணிக்குட்டி. மேற்குப் புறமுள்ள சிற்றறைக்குப் போற கதவை நான் மூடிவிட்டு வந்திருக்கிறேன். பூஜை, ஹோமம் எல்லாத்தையும் முடிச்சுட்டு அவன் வந்து கூப்பிடும்போது கதவைத் திறந்தால் போதும்."

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வடக்குப்புற அறைக்குப் போனார். ஊஞ்சலில் ஏறிப் படுத்தாரே தவிர, அவரால் உறங்க முடியவில்லை. மனத்திற்குள் இரைச்சலை ஏற்படுத்தியபடி கடந்துவந்த சிந்தனைகளின் பிடிக்குள் அகப்பட்ட குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியை நித்திராதேவியும் ஒதுக்கிவிட்டாள். அவர் சிந்தனைகளுடன் நட்புறவு பூண்டார். அந்த நட்பின் பலனாக இருபத்தாறு வருடங்களை வாயு வேகத்தில் கடந்தார். சென்று சேர்ந்த இடம் நாகராஜன் போற்றியின் முன்பாக. அந்த இடத்திலிருந்து இன்று வரையிலான சம்பவங்கள் ஒவ்வொன்றையும் அவர் மனக்கண்ணில் பார்த்தார்.

"ஹோம மண்டபத்துக்கு நாகராஜன் போற்றி வந்திருக்கிறார். அவர், சகோதரியைப் பார்க்கணும்கிறார்" - சமையற்கட்டிலிருந்து தன்னிடம் பப்பு வந்து கூறினான்.

தனக்கு விஷயம் புரிந்தபோதும் புரியாத மாதிரிக் கேட்டோம்: "என்ன சேதி?"

பப்பு பதில் கூறாமல் மௌனமாக நின்றான். தனக்குக் கோபம் ஏற்படும் சமயங்களில் மௌனமாயிருந்து விடுவது அவன் இயல்பு. நாகராஜன் போற்றி வந்திருப்பது எதற்காக என்பது தனக்கு நன்றாகத் தெரியும் என்பது அவனுக்கும் புரியும். அதனால் கோபக்குரலில் வெளிவந்த சகோதரியின் கேள்விக்கு அவன் பதிலளிக்காமல் இருந்தான்.

ஹோமமண்டபத்து ஊழியரான நாகராஜன் போற்றியை, கோயிலுக்குப் போகும் வழியில் எத்தனையோ தடவை பார்த்திருக்கிறோம். ஹோம மண்டப முற்றம் வழியாகத்தான் கோயிலுக்குப் போகும் குறுக்கு வழி இருந்தது.



"எங்க போற குஞ்ஞுக்குட்டி? கோயிலுக்கா?" - சிருங்காரச் சிரிப்புடன் அவர் அடிக்கடி கேட்பதுண்டு. அதற்குப் பதில் சொல்லாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டு போவதுதான் குஞ்ஞுக்குட்டியின் வழக்கம்.

ஒருநாள் குடும்பக் காரியஸ்தரான குமாராசார், பப்புவிடம் சொன்னார்: "ஹோமமண்டபத்து நாகராஜன் திருமேனிக்கு ஓர் ஆசை. நம்ம குஞ்ஞுக்குட்டிக் குழந்தையோடு சம்பந்தம் (திருமணம் செய்து) கொள்ள வேண்டுமாம். உங்ககிட்டக் கேட்டுச் சொல்லும்படி என்கிட்டச் சொல்லியனுப்பினார்."

"சகோதரிகிட்ட கேட்டுச் சொல்கிறேன் குமாராசார்" - பப்பு பதிலளித்தான்.

ஜாதகத்தில் செவ்வாய் தோஷமுள்ள மூத்த சகோதரிக்கு திருமண பாக்கியம் இல்லாததால் நாற்பது வயது கடந்த பின்னும் கன்னியாக வாழ நேர்ந்துள்ள நிலையும், இளைய சகோதரி திருமணம் முடிந்த ஒரு வாரத்திற்குள் விதவையாகித் திரும்பி வந்திருந்த நிகழ்ச்சியும் பப்புவை மிகவும் வேதனைப்படுத்தி யிருந்தன. நாகராஜன் போற்றி, மங்கலாபுரத்தைச் சேர்ந்தவர். துளு பிராமணர். அறுபது வயதுக்குக் குறையாது என்றும், பப்புவுக்குத் தெரியும். ஆனால், பருவம் தவறிக் கொண்டிருக்கும் சகோதரிக்கும் ஒரு நம்பூதிரி சம்பந்தம் அமைவதில் அவருக்கும் விருப்பம் ஏற்படவே செய்தது.

அன்று இரவே தன்னை அழைத்துக் கொண்டுபோய் கிழக்குக் குளக்கரையில் இதைப்பற்றி தனிப்பட்ட முறையில் பேசவும் செய்தான். தான் கோபத்தில் பொங்கி எழுந்து கத்தினோம்: "நடுவயதைத் தாண்டிவிட்ட சகோதரிக்கு ஒரு புருஷனைத் தேடி வைக்க வெட்கமா இல்லையா உனக்கு? போதாக்குறைக்குப் புருஷனை இழந்துட்டு வந்த மகேஸ்வரி வீட்டில இருக்கிறாள்."

"மகேஸ்வரி இன்னுமொரு கல்யாணத்திற்கு ஒப்புக்கொள்ள மாட்டாள்ங்கிறது உங்களுக்குத் தெரியாதா? அது மட்டுமில்லை, எம்ப்ரான் (பிராமணர்களைக் குறிக்கும் மரியாதையான வார்த்தை) கேட்டு அனுப்பி இருக்கிறது குஞ்ஞுக்குட்டி சகோதரியைத்தானே?

செவ்வாய் தோஷம் இருக்கிறதை குமாராசார் எடுத்துச் சொல்லியும் அதெல்லாம் பரவாயில்லைன்னும் சொன்னாராம்."

"அப்படியானால் வெளிப்படையாவே சொல்லிடுறேன். இந்தக் கல்யாணம் எனக்குக் கொஞ்சம்கூடப் பிடிக்கலை. குடும்பத் தலைவன்கிற அதிகாரத்தால இது நடக்கணும்னு நீ தீர்மானிச்சா, உன் சகோதரியின் பிணம்தான் இந்தக் குளத்தில மிதக்கும்."

அன்றைய பேச்சிற்குப் பிறகு பப்பு இதைப் பற்றிப் பேச்செடுத்ததே இல்லை. ஆனால், செய்தியைக் கேள்விப்பட்ட மகேஸ்வரியும் இந்தத் திருமணத்திற்குத் தன்னை வற்புறுத்தினாள். "நானோ விதவை. அக்காவும் இப்படியே இருந்துட்டால் இந்த வீட்டில ஒரு குழந்தையோட பிஞ்சுக்கால்கள் எப்படிப் பதியும்?"

"அப்படியானால் ஒரு காரியம் செய்... அவரை நீ கல்யாணம் செய்து கொள்." - யோசிக்காமல் சட்டென்று வந்து விழுந்தது வார்த்தை. திருமணத்தின்போது அணிந்த புத்தாடையின் புதுமணம் மாறுவதற்கு முன்பே கணவனை இழந்தவள் மகேஸ்வரி. தெய்வபக்தி நிறைந்த அவள், ஒருபோதும் இரண்டாவது கல்யாணத்திற்கு ஒப்புக்கொள்ள மாட்டாள் என்பது தனக்கும் தெரிந்த விஷயம்தான்.

அந்தப் பிரச்சினை அத்துடன் தீர்ந்துவிட்டதாகத்தான் நினைத்தேன். ஆனால், இதோ நாகராஜன் போற்றி நிச்சயம் செய்வதற்குத் தயாராக வந்திருக்கிறார்.

ஒரு போற்றியோ, நம்பூதிரியோ வந்து பெண்ணைப் பார்த்து விரும்பிவிட்டால், மறுத்துப் பேசக்கூடாது என்பது அக்கால ஆசாரமரியாதையாக இருந்தது. பெண்ணைத் தரவில்லை யென்றால் பிராமண சாபம் உண்டாகும். பிராமண சாபம் ஏற்பட்டால் தறவாடு அழிந்துவிடும்!

தன் கோபத்தைப் பார்த்த பப்பு கூறினான்: "போற்றியிடம் நான் திரும்பிப் போகச் சொல்லிடுறேன். ஆனால், சகோதரி ஒரு விஷயத்தைப் புரிஞ்சுக்கணும். என் காலத்திற்குப் பிறகு வாரிசாகத்



தொடர இந்த வீட்டில ஓர் ஆண் சந்ததி இல்லை. மந்திரோபதேசம் தரமுடியாம நான் இழுத்துப் பறிச்சுட்டு சாக வேண்டியிருக்கும்."

"அப்படி ஏதாவது நடந்தால் இந்தப் பரம்பரையின் ஏதாவது ஒரு குடும்பத்தைச் சேர்ந்த ஆண் சந்ததிக்கு நீ மந்திரோபதேசம் செய்யணும். வடக்கு வீட்டில எத்தனையோ ஆண் குழந்தைகள் இருக்காங்க."

"என்னோட ஆசை என் சொந்த மருமகன் ஒருத்தனை எனக்குப் பிறகு வாரிசாக்கணும்கிறதான் சகோதரி. நான் அதிகமா எதையும் சொல்றதுக்கில்லை. சகோதரியை மேற்கொண்டு வற்புறுத்தவும் மாட்டேன்" - பப்புவின் கண்கள் நீரால் நிறைந்தன.

தன் மனத்தில் சலனம் ஏற்பட்டது. தன்னை உயிருக்குச் சமமாக நேசிக்கும் சகோதரனாக இருப்பதால்தானே தன்னிடம் இவ்வளவு தூரம் மன்றாடி வேண்டிக் கொள்கிறான்? தறவாட்டு வழக்கப்படி கல்யாண காரியங்களில் பெண்களிடம் சம்மதம் கேட்பது பழக்கமில்லை. அவன் தன்னைவிட இளையவன்தான் என்றாலும், வீட்டுத்தலைவனும், மாந்திரீகனும்கூட. தன் அனுமதியில்லாமலேயே வாக்குறுதியளிக்க அவனுக்கு உரிமை உள்ளது. ஒரு மகன் (வாரிசு) இல்லையே என்கிற ஆதங்கத்தால், தன் திருமணத்தில் அவன் இவ்வளவு உற்சாகம் காட்டுகிறான்.

பப்புவுடன் கிழக்குப்புறத் திண்ணைக்குப் போனோம். நாகராஜன் போற்றி திண்ணையிலிருந்த சாய்வு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார். குமாராசார் பவ்வியமாக அவர் அருகில் கைகட்டி நின்றிருந்தார்.

"என்ன குஞ்ஞுக்குட்டி, சௌக்கியம்தானே?" - முழுச் சுதந்திரத்துடன் தன் உடம்பைப் பார்வையால் வருடியபடி, ஒருவித அசட்டுச் சிரிப்புடன் நாகராஜன் போற்றி குசலம் விசாரித்தார்.

சகோதரனின் நிழல் மாதிரி - ஒரு பொம்மை போல் நின்று கொண்டிருந்தேன் நான். தொப்பை வயிற்றைக் குலுக்கியபடி கருங்காரக் குரலில் அவர் பேசத் தொடங்கினார். "குஞ்ஞுக்குட்டி

யைக் கல்யாணம் செய்ய நாம் தீர்மானிச்சிருக்கோம். கேட்டுதா?" - என்றபடியே மறுபடியும் ஒரு அட்டகாசச் சிரிப்பு.

தான் அந்த இடத்திலிருந்து வீட்டின் வடக்குப்புற அறைக்கு ஓடினோம். ஊஞ்சல் பலகையில் படுத்தபடி கண்ணீர் விட்ட தன்னை மகேஸ்வரி வந்து தேற்றினாள். அப்பாவும் அம்மாவும் இல்லாத துயரத்தைத் தடுத்து நிறுத்தியது சகோதர ஒற்றுமைதான். மூன்று உடம்புகளுக்கு ஒரே ஆத்மா என்பது போலத்தான் தானும், மகேஸ்வரியும் பப்புவும் வாழ்ந்து வந்தோம். மகேஸ்வரியின் ஆறுதலான வார்த்தைகள் கொதிப்படைந்திருந்த தன் மனத்திற்குப் பனித்துளிகளாயிருந்தன. அவள் என்னை இறுகக் கட்டிப் பிடித்தபோது அவளுடைய இதயம், தன் இதயத் துயரத்தின் பெரும் பங்கை ஏற்று வாங்கிக் கொண்டது போல் தோன்றிற்று.

ஆர்ப்பாட்டம் எதுவும் இன்றி மறுநாள் மாலை நேரத்தில் உறவினர்களின் முன்னிலையில், வீட்டின் கிழக்குத்தளத்தில் ஒரு சரிகைப் புடவையைப் பெற்றுக்கொண்டு தான் நாகராஜன் போற்றியின் மனைவியானோம்.

வயதானவர் என்றாலும் ஒரு விஷயத்தில் அவர் கெட்டிக்காரராக இருந்தார். இரண்டு வருடத்திற்குள் இரண்டு குழந்தைகளைத் தனக்குப் பரிசளித்தார் - குமாரனையும், கமலாக்ஷியையும். மூன்றாவது வருடத்தில் தேவஸ்தான ஹோமமண்டபத்தில் தனது சேவையை முடித்துக் கொண்டு அவர் விடைபெற்றபோது தனக்கு வருத்தமே தோன்றவில்லை. ஒரு தொல்லை ஒழிந்தது என்கிற நிம்மதியே ஏற்பட்டது!

இரண்டு குழந்தைகளைப் பெற்றாலும் மகன் மட்டுமே துணையாக மீதமானான். மகள் கமலாக்ஷி அவளது இருபத்திரண்டாவது வயதில் இந்த உலகத்திலிருந்து விடை பெற்றாள். மூன்று வயதான ஓர் பெண் குழந்தையையும், ஒன்றரை வயதான ஓர் ஆண் குழந்தையையும் தன்னிடம் ஒப்படைத்து விட்டுப் போனாள். அவள் இறந்த ஆறு மாதத்திற்குள் அவளது கணவன் வேறொரு திருமணம் செய்து கொண்டான். சொந்தக் குழந்தைகளைக் கவனித்துக் கொள்ள அவர்களின் தந்தையான அந்த மகாபாவி ஒரு போதும் முயன்றதில்லை.



அந்தக் குழந்தைகள் இருவரையும் (ராஜம்மா, கொச்சுராமன்) சொந்தக் குழந்தைகளைப்போல் பொறுப்பேற்று வளர்ப்பது தங்கை மகேஸ்வரிதான். விதவையான அவளுக்குக் குழந்தைகள் இல்லாத துயரம் அத்துடன் தீர்ந்தது. கிழக்கே ஒரு மைல் தூரத்தில் அவளுடைய பங்குக்கு கிடைத்த சிறிய புத்தூர் வீட்டில் அவர்களை வளர்த்து வரும் மகேஸ்வரி, எப்போதாவது இங்கு வருவதுண்டு. அவளுக்கும் நேரம் கிடைக்க வேண்டாமா?

கமலாக்ஷியின் பங்காகக் கொடுத்துள்ள சொத்துக்களிலிருந்து கிடைக்கும் வருமானமெல்லாம் தனக்குத்தான் கிடைக்கிறது. அதைப் பற்றி மகேஸ்வரி ஒரு வார்த்தை கேட்பதில்லை. கமலாக்ஷியின் குழந்தைகள் பெரியவர்களாகும்போது அவர்களிடமே அதை ஒப்படைத்தால் போதும் என்று கமலாக்ஷி சொல்லியிருந்தாள்.

ராஜம்மாவுக்கு இப்போது வயது ஒன்பது. கொச்சுராமனுக்கு ஏழு. அம்மா இல்லாத கவலை தெரியாமல் அவர்கள் சின்னப் பாட்டியிடம் வளர்கிறார்கள்.

தனக்கு வயதாகிவிட்டது. இனி வாழ்க்கைப் பாடலுக்கு மங்களம் பாடினால் போதும். இறந்து போகிற விஷயத்தில் கொஞ்சம்கூட வருத்தமே கிடையாது. ஆனால், மகனை நினைத்தால் மனம் நிம்மதியற்றுத் தவிக்கிறது. தான் இறந்துபோனால் தனிமைப்பட்டுப்போகும் குமாரனைக் கவனித்துக் கொள்ள வேறு யார் இருக்கிறார்கள்?

குமாரனுக்கு நல்லதொரு குடும்பத்திலிருந்து பெண்ணெடுத்துத் திருமணம் செய்துவைக்க வேண்டுமென்று எத்தனையோ தடவை விரும்பியதுண்டு. பப்புதான் அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. குமாரனையே தனக்குப் பிறகு மாந்திரீக வாரிசாக்க வேண்டுமென்று ஏற்கெனவே அவன் தீர்மானித்திருக்கிறான். ஆனால், ஒரு போதும் அதை வாய்விட்டுச் சொன்னதில்லை. குமாரன் மாந்திரீகப் பதவிக்குத் தகுதியானவன் அல்ல என்பது தன்னுடைய நினைப்பு. அதனால்தான் அவனுக்குத் திருமணம் செய்து வைக்க விரும்பியதும்!

புத்தூர் தறவாட்டின் காரணவர்கள் எல்லோரும் மாந்திரீகர்களாகவும் சாத்வீகர்களாகவும் புகழ் பெற்றிருந்தனர். நித்தியப் பிரம்மச்சரியம் அவர்களுக்கு ஒரு போதையாகவே இருந்தது. குமாரனுடைய நடவடிக்கைகளைக் கவனித்திருந்த தனக்கு அவன் ஒரு பிரம்மச்சாரியாவான் என்று ஒருபோதும் தோன்றவில்லை. ஆனால், தன்னுடைய கணக்குகள் எல்லாமே தலைகிழாக மாறிவிட்டிருக்கின்றன!

எப்படிப்பட்டவரையும் நல்லவனாக்குவதும், கெட்டவனாக்குவதும் சுற்றுப்புறச் சூழ்நிலைகள்தான். மோசமான நடவடிக்கைகள் கொண்டவனான குமாரனை நல்லவனாக மாற்றியதும் சூழ்நிலைதான். அவனது இப்போதைய நடவடிக்கைகளைப் பார்த்தால் அவன் ஒரு புதுப்பிறவி எடுத்துவிட்டான் என்றே தோன்றுகிறது.

மகனது வளர்ச்சியிலும், உயர்விலும் மிகவும் அதிகம் பெருமிதப்படுவது அவனது தாயைத் தவிர வேறு யார்? பெற்ற தாய்க்கன்றி வேறு யாருக்காவது ஒருவனது தாழ்ச்சியிலும் தளர்ச்சியிலும் துயரம் தோன்றுமா?

எட்டு வகையான மணம் கொண்ட திவ்வியமான புகை இந்த அறைக்குள் வருகிறதே. கற்பூரம் மற்றும் சந்தனத்தின் மணம் மூக்கைத் துளைக்கிறதே. மணியோசை தன்னுடைய இதயத்திற்குள் ஒலிப்பது போன்ற ஒரு சுகானுபவம். மந்திர உச்சாடனத்தின் மங்கல த்வனி காதுகளைக் குளுமைப்படுத்துகிறதே!

நிலவறைக்குள் ஹோமாக்னி எரிந்து கொண்டிருக்கிறது போலும். தனது மகன் குமாரன் மந்திரஜபத்தின் மூலமாக ஆராதனைக்குரிய மூர்த்திகளை ஆவாஹம் செய்து கொண்டிருக்கலாம். தர்ப்பணங்களை அர்ப்பணம் செய்து கொண்டிருக்கக் கூடும். அர்ச்சனைகளை நடத்திக் கொண்டிருக்கலாம். மாந்திரீக ஸித்தி அடைவதற்காக கடினமான மகா யாகங்களை நடத்திக் கொண்டிருக்கும் மகன் நிச்சயமாக மகா மாந்திரீகனாகவும் ஸித்தபுருஷனாகவும் ஆவான்.



போதும்... பகவானே இது போதும்! இப்போது திருப்தியாக உள்ளது. இனிமேல் நான் நிம்தியாக உறங்கலாம்!

# 12

ஓர் இரவுக்குள் கருட பூஜையும் கருடப்பிரீதிக்கான ஹோமமும் முடிவடைந்தன.

*'க்ஷிப ஓம் ஸ்வாஹா'* என்கிற திவ்ய மந்திரத்தை ஐந்து லட்சம் தடவை ஜபித்தான். எள்ளைக் கொண்டு ஐந்து லட்சம் தடவை ஹோமிக்கவும் செய்தான்.

பூஜையும் ஹோமமும் முடிவடைந்தபோது குமாரன்தம்பிக்கு என்னவென்று விளக்க முடியாத மன அமைதி ஏற்பட்டது.

கருடன் தன்னுடைய பிரத்தியட்ச தெய்வமாக மாறி இருக்கிறது. மந்திரப் பயிற்சியின்போதே கருடன் தனக்குக் காட்சியருளியிருந்தது. பூஜையும் ஹோமமும் நடைபெற்றபோது கருடனுடைய சிறகடியோசை விடாமல் கேட்டுக்கொண்டிருந்தது. எத்தனையோ தடவை கருடன் எழுந்தருளி, தனது தலைமீது அமர்ந்து அனுக்கிரகம் செய்தது.

வேண்டுமானால் இனிமேல் சற்று ஓய்வெடுக்கலாம். மற்ற மூர்த்திகளை பிரீதிப்படுத்தி ஸித்தி பெறுவதை இன்னொரு சமயத்தில் வைத்துக் கொள்ளலாம். ஆனால், அவற்றையும் இப்போதே நடத்த வேண்டுமென்று மனம் வற்புறுத்துகிறது.

எப்படி இருந்தாலும் ஒரு மாந்திரீகனாக வாழ விதிக்கப்பட்டாகி விட்டது. கருடசேவையுடன் திருப்தி அடைந்து விட்டால், வெறும் விஷக்கடிக்கு சிகிச்சையளிக்கும் ஒரு வைத்தியராக மட்டுமே செயல்பட முடியும்.

அது போதாது! புத்தூர் தறவாட்டில் இதுவரை தோன்றியுள்ள எல்லா மாந்திரீகர்களையும் விட அதிகமான புகழ் பெறவேண்டும். அதுதான் தன்னுடைய லட்சியம். அதைச் சாதிக்க வேண்டுமானால் முக்கியமான எல்லா மூர்த்திகளின் சக்திகளையும் ஆதீனப்படுத்த வேண்டும்.

ஹனுமான் சக்தியே வடிவானவர். ஹனுமான் மந்திரங்களைப் படித்தாகி விட்டது. மந்திர ஸித்தி அடைவதற்கான பூஜை மற்றும் ஹோமங்களை உடனடியாக நடத்தி விடுவதுதான் உத்தமம். ஹோமத் திரவியங்கள் எல்லாம் இங்கேயே உள்ளன. கோலம் வரைந்து பிரதான மந்திரத்தை பத்தாயிரம் முறை ஜபித்து, பால், தயிர், நெய் சேர்த்து பன்னிரண்டாயிரம் தடவை ஹோமம் நடத்தி விட்டால் மாந்திரீக ஸித்தி கைவரப் பெற்று விடலாம்.

பக்தியுடன் அரிசிமாவால் ஹனுமானுக்குரிய சக்கரக் கோலத்தை வரைந்த பிறகு கண்களை மூடிச் சற்று நேரம் தியானம் செய்து ஹனுமானை மனத்தில் வரவழைத்தான். தியான சமயத்தில் அவனது உதடுகள் அசைந்து கொண்டிருந்தன. அந்த உதடுகளிலிருந்து உதிர்ந்து கொண்டிருந்தன தியான மந்திரங்கள்:

*பாலார்க்காயுத தேஜஸாம் த்ரிபுவன*
*ப்ரக்ஷோபகம் ஸுந்தரம்*
*ஸுக்ரீவாதி சமஸ்த வானரகணை:*
*ஸம்ஸேவ்ய பாதாம்புஜம்*
*நாதேனைவ சமஸ்த ராக்ஷஸகணான்*
*ஸந்த்ர ஸயந்தம் பிரபும்*
*ஸ்ரீமத் ராமபதாம்புஜ ஸ்ம்ருதிரதம்*
*த்யாயாமி வாதாத்மஜம்*

(பத்தாயிரக் கணக்கான பாலசூரியர்களின்
சோபையுடனும், மூன்று கண்களோடும், ராட்சதர்களை
கோபம் கொள்ள வைக்கும் வல்லமையுடன், வானர
வடிவத்துடனும், சுற்றி நின்று சேவிக்கும் சுக்ரீவாதி
வானரக் கூட்டங்களோடும், சகல ராட்சதர்களையும்
பயப்படுத்தும் அட்டகாசங்கள் கொண்டவனும், சர்வ



வல்லமை பொருந்தியவனும், ஸ்ரீராம பாதாம்புஜ
நினைவில் லயித்திருப்பவனு மான ஹனுமானை நான்
தியானிக்கிறேன்.)

தொடர்ந்து மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான்: *"ஹௌம் ஹஸ ஃப்ரோம் ஸ்ஃப்ரோம் ஹஸ் ஃப்ரோம் ஹஸௌம் ஹனுமதே நம:"*

மந்திரஜபத்துடன் ஹோமமும் நடந்தது. மிகவும் பயங்கரமான அலறல் ஒன்று கேட்பதாகத் தோன்றியது. பயம் மனத்தைப் புரட்டி விடாதிருக்க மந்திர உச்சாடனத்திலும், ஹோம கர்மத்திலும் முழுக் கவனத்தையும் மையப்படுத்தினான்.

இடி முழக்கமும் தொடர்ந்து மின்னல் ஒன்றும் வெட்டியது. விசையுடன் சுழன்றடிக்கும் சூறாவளி. நிலவறையே குலுங்கியது.

ஹனுமானின் சோதனைகளாகவும் இருக்கக்கூடும். இதனால் எல்லாம் நான் திகைப்படையப் போவதில்லை. ஜபமும், ஹோமமும் முடிவடையும் வரை நான் அசையப்போவதில்லை!

*"ஹௌம் ஹஸ் ஃப்ரோம் ஸ்ஃப்ரோம் ஹஸ் ஃப்ரோம் ஹஸ் ஃப்ரோம் ஹஸௌம் ஹனுமதே நம:"*

மந்திரஜபம் தொடர்ந்தது. ஹோமம் எந்தவிதத் தடையும் இன்றித் தொடர்ந்து முன்னேறியது.

மதியம் தாண்டிய பிறகுதான் முறைப்படியான ஜபமும் ஹோமமும் முடிவடைந்தன.

நிலவறையில் பரிபூரணமான அமைதி நிலவியது. குமாரன் தம்பி கண்களைத் திறந்தான். ஹனுமானது பிரம்மாண்டமான உருவம் ஒரு நிழல் போல் முன்புறம் தெரிந்தது. திடுக்கிட்டு எழுந்த அவன் கைகளைக் கூப்பினான். கதாயுதபாணியாக முன்புறம் நின்று கொண்டிருக்கும் நிழல் உருவம் அசைவதுபோல் அவனுக்குத் தோன்றியது. திடுமென்று இடியோசை முழக்கம் கேட்டது. கண்களை மூடினான். ஒரு நிமிடம் கழித்துக் கண்களைத் திறந்தபோது முன்புறமிருந்த உருவம் மறைந்து விட்டிருந்தது.

தான் தன்யனாகியிருக்கிறோம். திருப்தி தோன்றியது. ஹனுமான் தன்னிடம் பிரீதி கொண்டிருக்கிறார். எப்படிப்பட்ட ஆவி மற்றும் பூதப் பிரேதப் பிசாசுகளையும் அகற்றும் வல்லமை தனக்கு உண்டாகியிருக்க வேண்டும். தனது உடம்பில் இதுவரை இல்லாத ஒரு புதிய பலம் ஏற்பட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது.

இன்றைய பூஜையை இத்துடன் முடித்துக் கொள்ளலாமா? அல்லது தேவியின் கடாக்ஷத்தையும் பெறுவதற்குள்ள யாகத்தை (யஜ்ஞத்தை) ஆரம்பித்து விடலாமா?

"குமாரா, நீ பாக்கியம் செய்தவன். மிகவும் விரைவாக உனக்கு மந்திர ஸித்தி லபித்துக் கொண்டிருக்கிறது. தாரா மந்திர ஜபத்தை உடனே ஆரம்பித்துவிடு. சக்தி ஸ்வரூபினியான தேவியின் அனுக்கிரகமும் உதவியும் உனக்கு அத்தியாவசியமானது"-அசரீரிக் குரல் ஒன்று கட்டளைபோல் முழங்கியது.

பப்புமாமாவின் குரல்தான் அது. அவசியமான சந்தர்ப்பத்தில் அவர் தனக்குத் தேவையான உபதேசத்தைத் தருகிறார்.

தேவி பூஜையையும், ஹோமத்தையும் தள்ளிப் போடுவது என்கிற பேச்சுக்கே இடமில்லை. தனக்குப் பசியோ களைப்போ தெரியவில்லை; புதுவிதமான உற்சாகமும் கிடைத்திருக்கிறது.

அவன் தேவியின் யந்திரக் கோலம் வரைந்தான். பாலிலும் நெய்யிலும் மூழ்க வைத்த செந்தாமரைப் பூக்களை நாலு லட்சம் தடவை ஹோமிக்க வேண்டும். தியானத்திற்குப் பிறகு தாரா மந்திரத்தை நாலு லட்சம் தடவை ஜபிக்க வேண்டும். ஜபத்தையும், ஹோமத்தையும் ஒன்றாகவே நடத்த வேண்டும்.

"ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹூம் ஃபட்"-மந்திர ஜபம் தொடங்கியது. ஹோமமும் ஆரம்பானது. நிலவறை மறுபடியும் யாகசாலையாக மாறிவிட்டது.

'இருந்தாலும் இப்படியொரு பூஜையும் ஹோமமும் எங்காவது நடப்பதுண்டா? ஐந்தாறு நாட்களாக உட்கார்ந்த நிலையில் உட்கார்ந்தபடியே மந்திரங்களைக் கற்றுக் கொண்டான். ஜபங்களையும் ஹோமங்களையும் நிதானமாக-சாவகாசமாகச்



செய்தால் போதாதா? அதிகமானால் அமிர்தமும் விஷம் என்பதுதானே சொல்வழக்கு'-குஞ்ஞுக்குட்டி தங்கச்சி யோசனையில் ஆழ்ந்தார்.

மாலை நேரமானபோது பூஜையறையின் முன்புறம் ஒரு விளக்கை ஏற்றி வைத்துவிட்டு, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தென்புற அறையினுள் போய் நின்று கொண்டார். நிலவறையில் மகனுடைய ஜபமும், ஹோமும் தொடர்ந்து கொண்டிருந்தன.

இனிமேல் எப்போது பூஜாகர்மங்கள் முடிவடையுமோ? எல்லாவித ஸித்திகளையும் ஒரே மூச்சில் பெறுவதுதான் மகனுடைய லட்சியமோ?

மகனுடைய வாழ்க்கையில் எப்படிப்பட்ட ஒரு மாற்றம் நிகழ்ந்துள்ளது?-அதுவும் சற்றும் எதிர்பாராமல்! குடும்பத்தின் மாந்திரீகப் பாரம்பரியத்தைக் கௌரவத்துடன் நிலைநாட்ட அர்ப்பணச் சிந்தையுடன் செயல்பட்டுக் கொண்டிருக்கும் குமாரன், பழைய குமாரனே அல்ல. இப்போது பிரம்மச்சாரியாகவும், தீவிர பக்தனாகவும் மாறியுள்ள குமாரன் முன்பு எப்படிப்பட்ட வனாக இருந்தான்?

இருபத்தைந்து வயதிற்குள் ஓர் இளைஞன் எந்த அளவிற்குச் சீரழிய முடியுமோ, அந்த அளவிற்குச் சீரழிந்து போயிருந்தவன் அவன். அவனைப் பற்றிய செய்திகளை ஒவ்வொன்றாகக் கேள்விப்பட... கேள்விப்பட மனம் கொதிப்படைந்தது; இதயம் நொந்து கொண்டிருந்தது.

பெரியகோயிலின் கிழக்குமாட வீதிலுள்ள காபிக் கடை கோபாலனுடனான நட்புதான் குமாரனுக்கு அதிகமான கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தந்தது. கோபாலனது வீட்டுடன் ஏற்பட்ட நெருங்கிய பழக்கம் குமாரனது இயல்பையே மிகவும் மலிவானதாக்கி விட்டிருந்தது. கோபாலனுடைய மனைவி மீனாக்ஷி குமாரனை வசப்படுத்தியிருந்தாள்.

இந்தச் சந்தர்ப்பத்தில் அதையெல்லாம் நினைக்கக் கூடாது. ஆனால், இதயத்தினுள் மிகமோசமான ஒரு காயத்தை ஏற்படுத்திய

சம்பவம் அது. எத்தனையோ இரவுகளில் அதைக் குறித்து யோசித்தவாறே உறங்காமல் கண்ணீர் சிந்தியதுண்டு. கோயிலில் நெல்குத்தும் மீனாக்ஷியுடன் புத்தூர் குடும்பத்தின் வாரிசு கள்ளத்தொடர்பு வைத்திருக்கிறான் என்பதைவிட மானக்கேடான விஷயம் இந்தக் குடும்பத்திற்கு வேறு என்னவேண்டும்? மீனாக்ஷியை ரத்தப் பசி கொண்ட ஒரு யக்ஷி (மோகினி)யைப் போல் தான் வெறுத்ததும், பயப்பட்டதும் உண்மை!

சிருங்காரியான மீனாக்ஷிக்கு நாற்பது வயதாகியிருந்தாலும் தோற்றத்திலும், நடவடிக்கைகளிலும் அவள் இளமையானவளாகவே தென்பட்டாள். தங்கத்தின் நிறம், ரெட்டை நாடி உடல்வாகு. வெற்றிலை போட்டுச் சிவப்பாக்கியுள்ள உதடுகளும், மையெழுதிய கண்களும், சிந்தூரப் பொட்டு வைத்த நெற்றியும் பெண்களையேகூட பொறாமை கொள்ள வைத்தன. அமிதமாக முன்புறம் உந்தி நிற்கும் மார்புகளை மேல்துணியால் மூடாமல் மனம் மயக்கும் சிரிப்புடன் குலுக்கிக் தளுக்கி நடக்கும் அவளது நடையை பார்த்தால் எப்படிப்பட்ட ஆண்மகனும் சொக்கித்தான் போவான்!

இதுவரை பெண்ணின் மணத்தை நுகராத இளைஞர்கள் அவளுடைய வலையில் நிச்சயம் விழுந்து விடுவார்கள். குதிரிலிருந்து வீட்டாருக்குத் தெரியாமல் நெல் வாரிக் கொடுத்தோ, மரத்திலிருந்து தேங்காய் போட்டுக் கொடுத்தோ மீனாக்ஷியிடம் கூடாத இளைஞர்கள் அந்த ஊரிலேயே மிகவும் குறைவு. அவர்களில் முதலிடம் தன் மகன் குமாரனுக்குத்தான்.

சதா கஞ்சா புகைக்கும் கோபாலன் ராத்திரியாகி விட்டால் சுயநினைவற்று வீட்டின் ஏதாவது ஒரு மூலையில் சுருண்டு விடுவான். கோபாலனுடன் ஏற்பட்ட பழக்கம் காரணமாக குமாரனும் கஞ்சா அடிக்கத் தொடங்கிவிட்டான் என்றும் கேள்விப்பட்டோம். கணவனுடன் சேர்ந்து கஞ்சா அடிப்பது, அவனுடைய மனைவியுடன் படுத்துக் கொள்வது. இவை வெகுநாள் வரை தொடர்ந்தது. மாமாவிடமிருந்து மந்திரோபதேசம் பெறுவதற்கு முந்தைய நாள் வரையிலும் குமாரன் இப்படித்தான் வாழ்ந்தான்.



நாணிக்குட்டியுடனான மகனது உறவும் தன்னைத் தீயாகத் தகிக்க வைத்தது. அவ்வளவு ஏன், இறந்துபோன லக்ஷ்மிக் குட்டியைக்கூட அவன் விட்டு வைத்ததில்லை!

குமாரனுடைய மோசமான நடவடிக்கைகளை பப்புவும் புரிந்து கொண்டிருந்தான். இருந்தும் உறவை நேசித்த பப்பு, தன்னுடைய மருமகனையே வாரிசாகத் தேர்ந்தெடுத்தான்.

பப்புவின் கணக்குப் பொய்த்துவிட்டது என்று சொல்ல முடியாது. ஆபாசமான நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தவன் இதோ மரியாதைக்குரியவனாக மாறியிருக்கிறான். பெண்ணின்பத்தில் அமுந்திப் போயிருந்தவன் பரிசுத்தனாகியிருக்கிறான்!

'தெய்வமே... இனிமேல் பழைய காரியங்களைக் குறித்து யோசிக்க அவனுக்குச் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திவிடாதே! என் மகனிடம் ஏற்பட்டுள்ள அதிசயமான மாற்றத்தில் ஒருபோதும் தவறு நேரும்படிச் செய்யாதே. மாந்திரீகன் தவறிப் போனால் தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியமே மண்மேடாகி விடும். சந்ததிகள் அழிந்து விடுவார்கள். அதைவிட வேறு என்ன வேண்டும்?'

இல்லை! அப்படி எதுவும் நடக்காது. குடும்பப் புண்ணியம் வற்றிவிடவில்லை. பித்ருக்கள் இன்னும் குடும்பத்தைக் கைவிட்டு விடவில்லை.

திடுமென்றுதான் அறையின் மேற்குப்புறக் கதவைத் தட்டும் சத்தம் கேட்டது. சுற்றுப்புறத்தை மறந்துவிட்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி திடுக்கிட்டார். குமாரன்தம்பி அவசர அவசரமாக அறைக்குள் நுழைந்தான்.

"மகனே! மந்திரக் கர்மங்கள் எல்லாம் முடிஞ்சிருச்சா?"

"இல்லம்மா. நான் உடனடியா மகேஸ்வரி சித்தியைப் பார்க்கணும்."

"இந்த நடுராத்திரியிலயா, என்ன விஷயம்?"

"அதையெல்லாம் நான் வந்ததுக்கப்புறமாச் சொல்றேன்."

தென்புறத் தளத்தின் மூலையில் சார்த்தி வைக்கப்பட்டிருந்த பிரம்பைக் கையில் எடுத்துக்கொண்டு, கிழக்குப்புறத் கதவைத் திறந்து வெளிப்புறமாகப் பாய்ந்த குமாரன்தம்பியின் மனத்தில் இருப்பது என்ன என்பதை அறிய முடியாமல் குஞ்ஞுக்குட்டி தங்கச்சி திகைப்பில் ஆழ்ந்து அப்படியே அசைவற்று நின்றுபோனார்!

# 13

"சித்தி கதவைத் திறங்க. . ."-முன்புற வாசற்கதவை வேகமாகத் தட்டிக்கொண்டு குரல் கொடுத்தான் குமாரன்.

இந்த நடுராத்திரியில் இப்படிக் கூப்பிடுவது யாராக இருக்கும்? பழக்கப்பட்ட குரல்தான். மகேஸ்வரித்தங்கச்சி படுக்கை அறையிலிருந்து எழுந்து முன்புறத் தளத்திற்கு வந்தார். படுத்திருந்த குழந்தைகளும் வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்து அவரைப் பின் தொடர்ந்தனர்.

"யாரது?"-வாசல் கதவைத் திறப்பதற்கு முன்பாக மகேஸ்வரித் தங்கச்சி திகைப்புடன் கேட்டார்.

"நான்தான் சித்தி, குமாரன்."

மகேஸ்வரிததங்கக்சி உடனே கதவைத் திறந்தார். உள்ளே வந்த குமாரன்தம்பி படபடப்பான குரலில் கூறினான்: "சித்தி குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு உடனே என் கூட தறவாட்டுக்குப் புறப்படுங்க."

"என்ன ஆச்சு குமாரா?"-திகைப்பு விலகாத குரலில் அவர் திருப்பிக் கேட்டார்.

"அதையெல்லாம் அங்க போன பிறகு சொல்றேன். சீக்கிரம் புறப்படுங்க."



"அக்காவுக்கு உடம்பு சரியில்லையா? மகனே என்கிட்ட மனந்திறந்து உண்மையைச் சொல்லக் கூடாதா? தகுந்த காரணம் இல்லாம இந்த நேரத்தில என்னைக் கூட்டிட்டுப் போக நீ வரமாட்டேன்னு எனக்குத் தெரியும்"- மகேஸ்வரித் தங்கச்சி அழுதுவிடும் நிலைக்கு வந்து விட்டார்.

"சித்தி, நீங்க எவ்வளவு பிடிவாதம் பிடிச்சாலும் விஷயம் என்னன்னு நான் சொல்லமாட்டேன். மேற்கொண்டு என்னை வற்புறுத்தாதீங்க."

மகேஸ்வரித்தங்கச்சியும் குழந்தைகளும் அவசர அவசரமாக உடை மாற்றினர். குமாரன்தம்பியுடன் வீட்டிலிருந்து புறப்பட்டனர்.

"கதவைப் பூட்டலையா சித்தி?" குமாரன்தம்பி ஞாபகப்படுத்தினான்.

"பரபரப்புல அதை மறந்துட்டேன்". வீட்டிற்குள் நுழைந்து சாவியை எடுத்து வந்து கதவைப் பூட்டினார்.

முன்னால் மந்திரப்பிரம்பைப் பிடித்தபடி குமாரன்தம்பி நடக்க, பின்னால் ராஜம்மாவும் கொச்சு ராமனும், கடைசியாக மகேஸ்வரித் தங்கச்சியும் நடந்தனர்.

மார்கழி மாதமாக இருந்ததால் நல்ல நிலா வெளிச்சம் இருந்தது. எல்லோரும் அமைதியாக மேற்குப்புறமாக நடந்து கொண்டிருந்தனர்.

மகேஸ்வரித்தங்கச்சியின் மனத்தில் காரணமில்லாத பயம் [illegible]பிடித்தது. இதயத் துடிப்புகள் கட்டுக்கடங்காத நிலையை [illegible]ந்தது.

'எவ்வளவு சீக்கிரம் முடியுமோ, அவ்வளவு சீக்கிரமாக [illegible]ட்டை அடைந்தால் நல்லது' என்று அவர் நினைத்தார். [illegible]தரியை ஆபத்தான ஏதோ ஒரு நோய் பீடித்திருக்குமோ? [illegible] மனம் வேதனைப்படும் என்பதால் அதைப் பற்றி குமாரன்தம்பி [illegible]மல் இருக்கிறானோ?'

[illegible]ம்பரையின் தங்களது கிளையில் எஞ்சியிருப்பது தானும் [illegible]ரியும், குமாரனும், அப்பா-அம்மா இல்லாத இரண்டு

குழந்தைகளும்தான். மற்ற கிளையைச் சார்ந்த உறுப்பினர்கள் எவருக்கும் தங்களை அவ்வளவாகப் பிடிப்பதில்லை. சாத்துமாமாவோடு அவர்களுக்கு ஏற்பட்ட பகையால் அவர்கள் இப்போதும் ஒட்டுறவில்லாமல் நடந்து கொள்கிறார்கள்.

சாத்துமாமா தறவாட்டின் காரணவராக இருந்த காலத்தில்தான், தறவாடு பாகம் பிரிக்கப்பட்டது. சொந்த சகோதரிகளுக்கும், அவர்களுடைய குழந்தைகளுக்கும் சொத்தில் அதிகமான பங்கை ஒதுக்கி வைத்ததாக ஆட்சேபம் உயர்ந்தது. அவரது மரணத்திற்கு முன்பு பப்பு அண்ணனுக்கு மந்திரோபதேசம் நல்கியபோது அவர்களுடைய வைராக்கியம் மேலும் அதிகரித்தது.

இப்போதோ. . . மற்ற கிளைகளில் உள்ள ஆண்களை எல்லாம் புறக்கணித்துவிட்டு பப்பு அண்ணன் சொந்தச் சகோதரியின் மகனான குமாரனுக்கு மந்திரோபதேசம் தந்திருக்கிறார். பப்பு அண்ணனின் மரண சமயத்தில் தங்களது உறவைக் காட்டிக் கொள்வதற்காக எல்லோரும் வந்திருந்தார்களே தவிர, மரணாந்திரச் சடங்குகளில் யாரும் பங்கெடுத்துக் கொள்ளவோ, ஒத்துழைக்கவோ இல்லை.

"என் பித்ருக்களே! என் சகோதரிக்கு ஆபத்து எதுவும் ஏற்பட அனுமதிக்காதீர்கள்"- விசும்பியபடியே சற்று உரத்த குரலில் வேண்டிக்கொண்டார்.

சித்தியின் வார்த்தைகளைக் கேட்ட குமாரன்தம்பி, திரும்பி நின்று அவருக்கு ஆறுதல் கூறினான்: "அம்மாவுக்கு எந்த நோயும் நொடியுமில்லை. நீங்க பயப்படாம வாங்க."

புத்தூர் வீட்டின் கிழக்குப்புற முற்றத்தில் அவர்களை எதிர்பார்த்துக் காத்திருந்தார் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி. அருகிலேயே லாந்தர் விளக்குடன் நாணிக்குட்டியும் நின்றிருந்தாள்.

மகனுடன் தங்கையையும் பேரக்குழந்தைகளையும் பார்த்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்கு வியப்புத் தோன்றியது. 'சித்தியைப் பார்த்துவிட்டு வருகிறேன்' என்று புறப்பட்டுப் போனவன் அவளையும், பேரக்குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு வந்திருக்கிறான்-அதுவும் நள்ளிரவு நேரத்தில்!



அக்காவைப் பார்த்தவுடன் மகேஸ்வரித்தங்கச்சியின் மனத்தில் நிம்மதி தளிர்விட்டது. நல்லவேளையாக தான் பயந்ததுபோல எதுவும் நடக்கவில்லை!

"என்னக்கா, என்ன விஷயம்?"-ஆவலுடன் கேட்டார் மகேஸ்வரி.

"மகேஸ்வரி, எனக்கு எதுவுமே தெரியாது. சாப்பாடு, தூக்கம் இல்லாம இரண்டு நாட்களாக நிலவறைக்குள்ள ஹோமம் செஞ்சுட்டிருந்தவன் சாயந்திரமானதும் திடுதிப்புன்னு எழுந்து வந்தான். பிறகு பிரம்பை எடுத்துக்கொண்டு ஒரே பாய்ச்சல்தான். மகேஸ்வரி சித்தியைப் பார்க்கணும்கிறதைத் தவிர எதையும் அவன் பேசலை."

"எல்லோரும் உள்ள போங்க. இதோ வந்து விடுறேன்"- குமாரன்தம்பி அவர்களிடம் கூறினான்.

குமாரன்தம்பி கிழக்குக் குளத்திற்குச் சென்று மூழ்கிக் குளித்தான். ஈர உடையுடன் வீட்டிற்கு வந்தவன், பூஜையறைக்கு முன்பாக நின்று வழக்கம் போல் தியானம் செய்யத் தொடங்கினான்.

சமையலறை வாசலிலிருந்து நாணிக்குட்டியும், கிழக்குப் புறத்திலிருந்து மற்றவர்களும் குமாரன்தம்பியின் நடவடிக்கைகளை கண்ணிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தனர்.

'சமீப காலம் வரையில் தான்தோன்றியாகவும், ஆபாசமான நடவடிக்கைகளுடனும் திரிந்து கொண்டிருந்த குமாரன்தம்பியா, பூஜையறை வாசலில் நின்று ஒரு தேர்ந்த யோகியைப் போல் தியானம் செய்கிறான்?' மகேஸ்வரித்தங்கச்சி யோசனையில் ஆழ்ந்தார். இவன் பக்தி மார்க்கத்திற்குத் திரும்புவான் என்றோ, ஒரு மாந்திரீகனாக ஜொலிப்பான் என்றோ தான் ஒரு போதும் நினைத்ததே இல்லை.

'இந்தத் துரோகி செத்துப் போனால்கூடத் தேவலை என்று தோன்றுகிறது மகேஸ்வரி! இவ்வளவு மோசமான ஒரு தத்தாரிப் பிள்ளையைப் பெற நான் என்ன மகாபாவம் செய்தேனோ? நல்ல

குடும்பத்தில் ஒரு நாயும் வந்து பிறக்கும் என்று சொல்வது எவ்வளவு சரியான வார்த்தை!' ஒரு முறை அக்கா கண்ணீர்விட்டு முறையிட்டது ஞாபகத்திற்கு வந்தது.

அன்றைக்கு தான் சகோதரியிடம் கூறிய பதில்: 'அக்கா, கவலைப்படாதீங்க. அவனுக்கு இப்போ கண்டகச் சனி தசாகாலம். அது மாறும்போது அவனோட கெட்டகுணமெல்லாம் விலகிடும்."

அக்காளிடம் ஆறுதலுக்காக அப்படிக் கூறினாலும், குமாரன் தம்பி நல்லவனாக மாறக்கூடும் என்கிற நம்பிக்கை தனக்கும் இல்லாமல்தானிருந்தது.

குமாரன்தம்பியின் மோசமான நடவடிக்கைகளைத் தன்னால் தாங்கிக்கொள்ள முடியாமல்போனதால்தான் ஒரு வருடத்திற்கு முன்பு இந்தக் குழந்தைகளுடன் கிழக்குப்புறத் வீட்டிற்குக் குடிபோக நேர்ந்தது. தன் பங்கிற்குக் கிடைத்துள்ள வீட்டில் ஆள் நடமாட்டமி ல்லாமல் போனால் வீணாகி அழிந்துவிடும் என்கிற காரணத்தை நியாயத்தைச் சொல்லித்தான் இடம் பெயர்ந்தோம். உண்மையைச் சொன்னால் குமாரன் மீது தனக்குத் தோன்றி யிருந்த வெறுப்புதான் இந்த வீட்டிலிருந்து வெளியேறுவதற்கான காரணம்.

அப்போது மேற்குப்புறமிருக்கும் சிற்றறையில் குமாரன்தம்பி படுத்துக் கொள்வது வழக்கம். தெற்குப்புற அறையின் சப்ரமஞ்சக் கட்டிலில் பப்பு அண்ணன், தானும் அக்காவும் குழந்தைகளுடன் வடக்குபுற அறையிலும், நாணிக்குட்டி சமையலறை தாழ்வாரத்திலும் படுத்துக் கொள்வது வழக்கம்.

நள்ளிரவாகும்போது குமாரன் வடக்குப்புறத் திண்ணைக்கு வந்து சமையலறைக் கதவைத் தட்டுவான். நாணிக்குட்டி எழுந்து கதவைத் திறந்து வெளியே வருவாள்.

சத்தம் எழுப்பாமல் நாணிக்குட்டி கதவைத் திறக்கும் அதிசய வித்தை வெகுநாள் கழித்துதான் தெரியவந்தது. சமையலறை வேலைகளை முடித்துவிட்டு, இரவில் நேரம் கழித்து படுக்கப் போகும் நாணிக்குட்டி, வடக்குப்புறக் கதவை வெறுமனே சாத்தி வைப்பாள். ஏற்கெனவே யாராவது தாழ்போட்டிருந்தால், அதை திறந்தும் வைத்து விடுவாள்.



நாணிக்குட்டியின் தங்கை லக்ஷ்மிக்குட்டியுடனும் குமாரனுக்குத் தொடர்பிருந்தது. ஒரு தடவை அந்த அசிங்கத்தையும் இந்தக் கண்களால் நேரடியாகப் பார்க்க நேர்ந்தது!

வீட்டு வேலைக்காரிகளுடன் இந்தக் குடும்பத்தைச் சேர்ந்த ஒருவன் தொடர்பு வைத்துக் கொள்வதென்பதே புதிய விஷயம். தறவாட்டின் தலையில் சேற்றுத் தண்ணீரால் அபிஷேகம் நடத்திய குமாரனை, தான் எந்த அளவிற்கு முடியுமோ அந்த அளவிற்கு வெறுத்தோம்.

பப்பு அண்ணனிடமிருந்து மந்திரோபதேசம் பெற்றது முதல் குமாரன் ஒட்டுமொத்தமாக மாறிவிட்டிருக்கிறான். தேவை யில்லாமல் வீட்டைவிட்டு வெளியே போவதில்லை என்றும், எப்போதும் பூஜை, மந்திர கர்மானுஷ்டானங்கள் என்றே பொழுதைக் கழிப்பதாகவும் தெரிய வந்தபோது அதற்காக மிகவும் மகிழ்ச்சியடைந்ததும் தான்தான்!

அதுதான் பார்த்துக்கொண்டிருக்கிறோமே! எவ்வளவு நேரமாக அவன் பூஜையறை வாசலருகே தியானத்தில் ஈடுபட்டிருக்கிறான்! பரம பக்தனும், மகா மாந்திரீகனுமாக மாறத் தனக்குத் தகுதி உள்ளது என்பதை நிரூபித்துக் கொண்டிருக்கிறான். மாந்திரமறிந்துதான் பப்பு அண்ணன் பிச்சை போட்டிருக்கிறார்.'

தியானத்திலிருந்து விடுபட்ட குமாரன்தம்பி தென்புற அறையின் பக்கமாகப் போனான். மேற்குப்புற அறையில் நுழைவதற்கு முன் எல்லாரும் கேட்கட்டும் என்பதற்காக உரத்த குரலில் கூறினான்: "நான் நிலவறைக்குப் போகிறேன். சித்தியும் குழந்தைகளும் இன்று இங்கேயே தங்கியிருக்கட்டும்."

"குமாரா!" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் குரல் கோபத்துடன் ஒலித்தது.

"என்னம்மா?"

மகனுக்கு அருகே வந்த அவர் குரலை மேலும் உயர்த்தியபடி கேட்டார்: "நீ மாந்திரீகனாகி விட்டேங்குற ஆணவத்தோட இருக்கிறயா? மகேஸ்வரியையும் குழந்தைகளையும் எதற்காக

இங்கே கூட்டிட்டு வந்திருக்கிற? ஒரு காரியமுமில்லாம வெள்ளிக்கிழமையும் அதுவுமா ராத்திரியில அவளை இங்கே கூட்டிட்டு வந்ததால அவ திகைச்சுப் போயிருக்கிறா!"

"திகைச்சுப் போயிருக்கிறது தவறான விஷயமில்லையா என்ன? சினையான பசு இப்பவோ அப்பவோன்னு ஈனும் நிலையில இருக்கு. கதவுகளைக்கூட சரியா மூடியிருக்கிறோமா இல்லையான்னுகூடப் பார்க்காம பரபரப்பில ஓடிவந்திருக்கேன். எந்தக் காரணமும் இல்லாம எங்களை நீ இந்த நடுராத்திரியில இங்க கொண்டு வந்திருக்கமாட்ட. அந்தக் காரணத்தைச் சொல் குமாரா!" மகேஸ்வரித்தங்கச்சி அவளருகே வந்து வற்புறுத்தினார்.

"அம்மாவும் சித்தியும் உடனேயே அதற்கான காரணத்தைத் தெரிஞ்சுக்கணும் இல்லையா?"- குமாரன்தம்பி புன்னகைத்தபடி கேட்டான்.

"ஆமாம்... எங்களுக்குத் தெரிஞ்சே ஆகணும்." மகேஸ்வரித்தங்கச்சி திடமான குரலில் கூறினார்.

"அப்படின்னா கேட்டுக்கங்க. இன்னும் கொஞ்ச நேரத்திற்குள்ள ஒரு ரக்ஷஸ் சித்தியின் வீட்டிற்கு வரப்போகுது சித்தியையும் குழந்தைகளையும் கொல்றதுக்காக வருது பூஜையின்போது தேவி இதை என் மனத்திற்குக் காட்டித் தந்திருக்கார். உடனே நான் புறப்பட்டு வந்தேன்."

"குமாரா!" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் மகேஸ்வரித் தங்கச்சியும் ஏககாலத்தில் குரல் கொடுத்தார்கள்.

அக்கா, தங்கையைக் கட்டிப் பிடித்தார். பயந்து நடுங்கின குழந்தைகள் இருவரும் ஓடிவந்து பாட்டிமார்களைச் சரணடைந்தனர். சமையலறை வாசற்புறமிருந்து நாணிக்குட்டியின் விசும்பல் சத்தம் உயர்வது கேட்டது.

எல்லோரும் திகைப்பில் ஆழ்ந்து எதுவும் விளங்காமல் விழித்தபடி நின்றுகொண்டிருந்தபோது குமாரன்தம்பி அவசர அவசரமாக நிலவறைக்குள் நுழைந்தான்.

வீட்டுச்சூழ்நிலை மயான அமைதியில் மூழ்கிக் குளித்தது

# 14

நிலவிளக்குகளில் எல்லாம் எண்ணெய் ஊற்றினான். திரிகளில் தீபம் ஏற்றினான். தேவியின் யந்திரக் கோலத்தில் விழிகளைப் பதித்தான்.

தேவியின் அனுக்கிரக பலத்தினால் ஏற்கெனவே பூஜை செய்து கொண்டிருந்தபோது ரக்ஷஸின் தாக்குதலைக் குறித்த முன்னறிவிப்புக் கிட்டியது. இன்று நள்ளிரவு தாண்டும்போது ரக்ஷஸ் மகேஸ்வரி சித்தியின் வீட்டை அடையுமென்றும், அவரையும் குழந்தைகளையும் கொல்வதுதான் ரக்ஷஸின் நோக்கம் என்பதையும் தன் மனத்துக்கு காட்டித் தந்தது பராசக்தி ஸ்வரூபமான தேவிதான்.

"என்னுடைய தேவி, மகாமாயே! இதோ நான் உன்னைத் தியானிக்கிறேன். என் மந்திரங்களை ஏற்றுக் கொள்.

*ஸ்வேதாம்பராம் ஸாரத சந்திரகாந்தீம்*
*ஸத்பூஷணாம் சந்த்ரகலாவதம்ஸாம்*
*கர்த்ரீம் கபாலான்வித பாணிபத்மாம்*
*தாராம்த்ரிநேத்ரம் ப்ரபஜேகிலர்த்யைய*
*ஓம், ஹ்ரீம், ஸ்ரீம், ஹூம், ஃபட்"*

குமாரன்தம்பி மந்திரங்களை உருப்போட்டுக் கொண்டே இருந்தான். அத்துடன் செந்தாமரைப் பூவிதழ்களையும் [illegible]மித்துக் கொண்டிருந்தான்.

மனத்தில் தேவியின் வடிவம் தெளிவடையத் தொடங்கியது. அத்துடன் மந்திர உச்சாடனத்திற்கும் ஹோமத்திற்கும் வேகம் அதிகரித்தது.

மனத்தின் கருவறையில் புன்னகைத்தபடி நின்று கொண்டிருந்தார் பக்தப்பிரியையான ஈஸ்வரி. சாக்ஷாத் துர்க்கா!

"ஜகன்மாதாவே! ரக்ஷஸின் நடவடிக்கைகளை என் மனக்கண் களுக்குக் காட்டித் தாருங்கள்"- ஒரு நிமிட நேரம் மந்திர ஜபத்தை நிறுத்திவிட்டு, அவன் பிரார்த்தித்தான்.

அருகிலிருந்த வெள்ளித் தட்டிலிருந்து கோரோசனையை எடுத்து நெற்றியில் தீற்றிக் கொண்டான். நிர்மால்ய புஷ்பக் குவியலிலிருந்து, சில பூவிதழ்களைக் கையில் எடுத்து தலைமுடியில் செருகிக்கொண்டான்.

"பிரபஞ்ச மாதாவான ஸ்ரீலளிதே, துர்கா, நாராயணீ, மகேஸ்வரி...' நான் இதோ மீண்டும் உன்னைத் துதிக்கிறேன்:

*ஸர்வஸ்வரூபே ஸர்வேச சக்தி ஸமன்விதே*
*பயேப்யஸ்த்ராஹினோ தேவி துர்க்கே நமோஸ்துதே*
*ஸர்வமங்கள மங்கல்யே சிவே சர்வார்த்த ஸாதிகே*
*சரண்யே த்யம்பகே கௌரி நாராயணீ நமோஸ்துதே*
*ஸர்வபாதா வி நிர்ம்முக்தோ தனதின்ய ஸுனாத்வித:*
*மனுஷ்யோமத் ப்ரஸாதேன பவிஷ்யதின ஸம்சய*
*ஸரணாகத தீனார்த்த பரித்ராண பராயணே*
*ஸர்வஸ்யார்த்தி ஹரே தேவி நாராயணீ நமோஸ்துதே*
*ஓம், ஹ்ரீம் ஸ்ரீம், ஹூம், ஃபட்"*

மனத்தின் முற்றப்பகுதியில் கருமையான ஒரு நிழல் தென்படுகிறது. நிழல் ஏதோ ஓர் மிருகத்தின் வடிவமாக மாறுகிறது. ஒரு பூனையின் வடிவம்-உற்றுப்பார்க்கும் கரும்பூனை.

கரும்பூனை கிழக்குப் புறமாக நடக்கிறது. வயல் வரப்பின் ஊடாக நடந்து, மகேஸ்வரி சித்தி குடியிருக்கும் கொச்சு (சிறிய) புத்தூர் வீட்டை நோக்கிப் போனது.

சட்டென்று பூனையின் நிழலும் அதன் செயல்களும் மனத்திலிருந்து மறைந்தது. மீண்டும் மந்திர ஜபத்தைத் தொடங்கினான்.



அதோ... மறுபடியும் ஒரு நிழல் மனக்கண்களுக்கு முன்பாகத் தெரிகிறது.

உற்றுப் பார்த்தான். நிழல் ஒரு வயதான மனிதனின் உருவத்துக்கு மாறியது. உச்சிக்குடுமி வைத்துத் தளர்ந்த உடம்புடனான பெரியவர். அவர் இந்த வீட்டின் மேற்குப் புறமாக வந்து நிற்கிறார்.

குமாரன்தம்பி கைகளைக் கூப்பி உயர்த்தி மன்னிப்புக் கோரும் குரலில் தேவியிடம் விண்ணப்பித்தான். "தேவி, ரக்ஷஸின் மாறுவேட நடவடிக்கையை எனக்குக் காட்டினீர்கள். ஒற்றனைப் போல் ஒரு பெரியவர் இந்த வீட்டின் பின்புறம் ஒளிந்திருப்பதையும் காட்டினீர்கள். நான் அவரைப் பிடித்துக் கொண்டு வந்து உங்கள் முன்னால் நிறுத்துகிறேன். அதற்காகச் சற்று நேரம் பூஜையை நிறுத்தி வைக்க எனக்கு அனுமதி அளியுங்கள்."

அவன் சத்தம் எழுப்பாமல் எழுந்து சிற்றறைக்கு வந்தான். மேற்குப்புற வாசல் கதவின் மறுபுறம் காலடியோசை கேட்டது. கண்ணிமைப்பதற்குள் சட்டென்று கதவை இழுத்துத் திறந்தான்.

ஒருவர் வடக்குப் புறமாக ஓடுவது நிலவொளியில் தெரிந்தது. ஓடுபவர் வயதானவர் மட்டுமின்றி அரைநிர்வாணமாகவும் தென்பட்டார். எவ்வளவோ முயன்றும் அவரால் மெதுவாகத்தான் ஓட முடிந்தது.

கதவின் இடைவெளி வழியாக நிலவறையில் நடைபெற்றுக் கொண்டிருந்த ரகசிய கர்மங்களையெல்லாம் கவனித்த பிறகு அந்தப் பெரியவர் ஓடிக்கொண்டிருந்தார். ஒருபோதும் எதிர்பாராத சாகசச் செயல்!

தனக்கு எதிரிகள் தோன்றியிருக்கிறார்கள் என்பதல்லவா அதற்கு அர்த்தம்? ஒருவேளை தாவதொரு மாந்திரீகனின் ஒற்றனாக இருப்பானோ?

ஒவ்வொரு காலகட்டத்திலும் புத்தூர் தறவாட்டில் உருவாகும் மாந்திரீகனை வெல்லுகிற அளவுக்கு வேறு மாந்திரீகர் எவரும் இந்த நாட்டிலேயே ஏற்பட்டதில்லை. இங்குள்ளது போன்ற

கிடைப்பதற்கு அருமையான ஓலைச்சுவடிகள் வேறெங்கும் இருக்காது. பப்புமாமாவை மற்ற மாந்திரீகர்கள்கூட மிகவும் பயத்துடனும், கௌரவத்துடனுமே நடத்தினர்.

தான் பலவீனமான ஒரு மந்திரவாதி என்ற நினைப்பில் புத்திகெட்டுப் போன ஏதோ ஒரு மாந்திரீகன் ஒருவேளை தன்னுடன் மோத முற்படுகிறானோ?

கோபம் கொண்ட குமாரன்தம்பி பெரியவர் ஓடிய வழியிலேயே ஓடினான். மின்னல் வேக ஓட்டம்.

பெருங்குளத்தின் கிழக்குப்புறச் சாலையில் பெரியவர் அவனது கையில் அகப்பட்டார். பெரியவரைக் கீழ்ப்படுத்த அதிகச் சிரமம் ஏற்படவில்லை. பெரியவர் சோர்ந்துபோன நாயைப் போல மூச்சிரைத்தார். இரண்டு கைகளாலும் தனது முகத்தை மூடிக்கொண்டிருந்தார்.

பெரியவரின் பிடரியில் வலதுகையைப் போட்டு தன்னோடு அணைத்துப் பிடித்தபடி குமாரன்தம்பி இழுத்துவந்தான். நிலவறைக்குள் பெரியவரை வீசி எறிந்தான் என்றே சொல்லலாம்.

தரையில் விழுந்தபோதும் பெரியவர் தன் முகத்தை இரு கைகளாலும் பொத்திக் கொண்டிருந்தார்.

குமாரன்தம்பி பெரியவரின் கைகளைப் பிடித்து விலக்கினான். எரிந்து கொண்டிருந்த நிலவிளக்குகள் மற்றும் ஹோமாக்னியின் வெளிச்சத்தில் அவன் அந்த பெரியவரின் முகத்தைப் பார்த்துத் திடுக்கிட்டான். நின்ற இடத்திலிருந்து ஓரடி பின்வாங்கவும் செய்தான். அந்தப் பெரியவர் வேறு யாருமல்ல-குமாராசார்!

மனநிலை பாதிக்கப்பட்டதைத் தொடர்ந்து இந்த வீட்டின் காரியஸ்தர் பதவியிலிருந்து விலக்கி அனுப்பப்பட்ட, இன்றும் இந்த வீட்டிற்குச் சொந்தமான இடத்தில் வீடுகட்டி, இந்த வீட்டின் உதவியால் உயிர் பிழைத்துக் கொண்டிருக்கும் குமாராசார்!

சாத்துமாமாவின் காலத்திலிருந்து இந்த வீட்டின் உப்பையும் சோற்றையும் தின்றுவரும் வேலைக்காரர்.



இந்த வீட்டுச் சமையற்காரியான நாணிக்குட்டியின் தகப்பனார்! இறந்துபோன லக்ஷ்மிக்குட்டியின் தந்தை.

மனநிலை சரியில்லாதால் சுயநினைவின்றி இங்கு வந்து ஒளிந்து வேவு பார்த்ததாகக் கூற முடியாது. அப்படியென்றால் தான் கதவைத் திறந்தபோது ஓடிப் போயிருக்க வேண்டிய அவசியம் இல்லை. அவரது வீடு இருப்பதோ கிழக்குப் புறத்தில்.

அவரைக் கையும்களவுமாகப் பிடித்த நிமிடத்திலிருந்து முகத்தை மூடியபடி இருந்தார். மனநிலை பாதிக்கப் பட்டவருக்கு குற்றஉணர்வு தோன்றும் என்ற பேச்சுக்கே இடமில்லை.

குமாரன்தம்பி தாங்க முடியாத கோபத்துடன் குமாராசாரின் உச்சிக்குடுமியைப் பிடித்து மேற்புறமாக உயர்த்தினான். பெரியவரின் முகத்தில் பயமும் திகிலும் ஏகமாகப் பரவியிருந்தது.

"நன்றி கெட்ட நாயே! மரியாதையா உண்மையைச் சொல்லலைன்னா நான் உன்னைத் துண்டு துண்டா வெட்டி ஹோமிடுவேன். இந்த நடுராத்திரியில எதற்காக நீ இங்க வந்த?" குமாரன்தம்பி அலறினான்.

"தம்புரானே, மன்னிக்கணும். நான் தப்புப் பண்ணிட்டேன்." பெரியவர் இரக்கத்துக்குரிய குரலில் திக்கித்திணறிப் பேசினார்.

"உன்னை இங்க அனுப்பினது யார்? உயிர் வேணும்னா உண்மையைச் சொல்" - கழுத்தைக் கையால் கௌவிப் பிடித்தபடி சுற்றறைக்குப் பெரியவரைத் தள்ளிக் கொண்டு வந்த குமாரன் தம்பி கேட்டான்.

பதில் பேசாமல் இருந்த கிழவரிடம் குமாரன்தம்பி உரத்த குரலில் உத்தரவிட்டான்: "சொல்லுடா நாயே!"

"சூரக்காட்டு இல்லத்துத் திருமேனி" - கழுத்தின் பிடியை இறுக்கியபோது கிழவர் முணுமுணுத்தார்.

"சூரக்காட்டு துர்மந்திரப் பிரயோகம் செய்யும் ராமன் நம்பூரியா?"

"ஆமாம்..."

"எதுக்காக உன்னை அனுப்பியிருக்கிறார்?" கழுத்துப் பிடியை விட்டபடி கேட்டான்.

"இங்க பூஜை நடக்குதா, வேற என்னென்னவெல்லாம் செய்றீங்க? இங்கு யாராவது விசேஷமா வந்திருக்கிறார்களாங் கிறதையெல்லாம் கண்காணிக்கச் சொல்லியிருந்தார்."

"எத்தனை நாளாக நீ பட்டேரிக்கு ஒற்றுவேலை செஞ்சுட்டிருக்கிற?"

"மன்னிக்கணும் தம்புரான். நீங்க பப்புத்தம்பிகிட்டருந்து மந்திரோபதேசம் பெற்ற நாள்லேருந்து!"

"உனக்கு என்கிட்ட இவ்வளவு வைராக்கியம் ஏற்பட என்ன காரணம்?"

கேள்வியைக் கேட்ட குமாராசார் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். பிறகு தழுதழுத்த குரலில் பேசத் தொடங்கினார்: "என் மகள் லக்ஷ்மிக்குட்டி இறந்து போனதும் நான் சூரக்காட்டு திருமேனியிடம் போய் பிரஸ்னம் (ஒருவகை சோழி ஜோதிடம்) பார்த்தேன். உங்களாலதான் அவளைப் பாம்பு கடிச்சதுன்னு பிரஸ்னம் தெரியப்படுத்துச்சு. இந்தக் குடும்பத்தின் மந்திரவாதியை எப்போதானாலும் அழிச்சே தீருறதுன்னு கங்கணம் கட்டியிருப்பவர் அந்தத் திருமேனி. அதனால, நானும் அவரோட சேர்ந்து கொண்டேன்."

"சரி, மகேஸ்வரி சித்தியின் வீட்டிற்கு ரக்ஷஸை ஏவியிருக்கிறதும் பட்டேரிதானா?"

"ஆமாம். முன்னொரு தடவை ஒரு கந்தர்வனை ஆவேசப்படுத்தி இங்க ஏவிவிட்டதும் அவர்தான்" - குமாராசார் தயங்கித் தயங்கிக் கூறினார்.

"அதனால பிரச்சனை எதுவுமில்லை. உன் மகளோட உடம்பிலதான் கந்தர்வன் புகுந்து கொண்டான்!"

"மன்னிச்சிடுங்க. நான் தெரியாம... இந்தக் குடும்பத்துக்கு நன்றி இல்லாதவனா துரோகம் பண்ணிட்டேன்."



"உன்னை மன்னிக்க வேண்டியதுதான்!" குமாரன்தம்பி குமாராசாரை நிலவறையின் ஒரு மூலைக்குத் தள்ளிக் கொண்டு போனான்.

"தற்சமயம் நீ இங்கேயே கிட. உனக்குத் துணையா ஐந்து தலை நாகம் இருக்கு."

கிழவரை நிலவறையின் மூலைக்குத் தள்ளிவிட்ட பிறகு குமாரன்தம்பிக்கு குற்றஉணர்வு தோன்றியது. ஹோமம் நடைபெறும் பவித்ரமான நிலவறைக்குள் தீயவனும், நீசனுமான இந்த கிழவனைக் கொண்டு வந்ததே தவறு.

"தேவி, என்னை மன்னிச்சிடுங்க. கருடதேவா மன்னியுங்க. நாளைக் காலையில புண்ணியாகம் தெளிச்சு அடியேன் இந்த இடத்தைச் சுத்தம் செஞ்சுடுறேன்" - கூப்பிய கைகளுடன் குமாரன்தம்பி வேண்டிக் கொண்டான்.

தியான நிலையிலேயே சற்று நேரம் மூழ்கி நின்ற அவன் நிலவிளக்குகள் எல்லாவற்றையும் அணைத்தான். ஹோம குண்டத்தில் தண்ணீரை எடுத்து ஊற்றினான். தீப்பந்தங்களையும் அணைத்தான்.

நிலவறையின் கதவை மூடிவிட்டு குமாரன்தம்பி வெளியே வந்தான்.

தென்புறஅறை வழியாக வீட்டிற்குள் நுழையப்போன குமாரன்தம்பி திரும்பியபோது, திகைப்படைந்து - பரிதவிப்புடன் மூச்சை அடக்கி நின்றிருக்கும் அம்மாவையும், சித்தியையும் கவனித்தான்.

# 15

சிற்றறையின் மேற்குப்புறக் கதவைத் திறந்து, தான் வெளியேறியது முதல் குமாராசாரை நிலவறைக்குள் தள்ளிவிட்டுக் கதவை மூடியது வரையிலான சம்பவங்களை அம்மாவும் சித்தியும் கவனித்திருப்பார்கள் என்பது குமாரன்தம்பிக்கு விளங்கியது.

"யாரும் தூங்கலையா?" தென்புற அறையை நோக்கி நடந்த குமாரன்தம்பி சுவாரஸ்யமில்லாமல் கேட்டான்.

"குழந்தைகள் இரண்டு பேரும் தூங்கியாச்சு. எங்களால் எப்படி குமாரா தூங்க முடியும்?" - மகேஸ்வரித்தங்கச்சி தனது தவிப்பை வெளிப்படுத்தினார்.

தலைதாழ்த்தி நடுமுற்றத்தில் நின்று கொண்டிருந்தாள் நாணிக்குட்டி. குமாரன்தம்பிக்கு அவளிடம் இரக்கம் தோன்றியது.

"குமாரா!"- குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அதிகாரக் குரலில் அழைத்தார்.

"என்னம்மா?"

"குமாராசாரைத் தண்டிச்சது போதாதா? அவரைத் திறந்துவிடு!"

"மன்னிச்சிடுங்கம்மா. பொழுது விடிஞ்சா அவரை விட்டு விடுறேன். இப்போ விடுவிச்சா இங்க நடந்ததை எல்லாம் பட்டேரியிடம் தெரிவிப்பார். பட்டேரி ரக்ஷஸை ஆவேசத்தோட கிழக்கு வீட்டிற்கு அனுப்பி இருக்கிறாரில்லையா? சித்தியும் குழந்தைகளும் இங்க வந்திருக்குற சேதி பட்டேரிக்குத் தெரிஞ்சிருக்காது."

"நாணிக்குட்டியை நினைச்சா வருத்தமா இருக்குது" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி துயரம் தோய்ந்த குரலில் கூறினார்.

நடுமுற்றத்தில் நின்றிருந்த நாணிக்குட்டி விம்மி அழுதபடி சமையலறைப் பக்கமாக நடந்தாள். போகும்போது அவள் சொன்னாள்: "உப்பைத்தின்னவன் தண்ணி குடிக்கணும் அம்மச்சி நன்றி கெட்ட இந்தக் கிழவனை என்னோட அப்பான்னு சொல்றதே வெட்கக் கேடு!"

ஏதோ யோசனையில் ஆழ்ந்த குமாரன்தம்பி தாழ்ந்த குரலில் பேசினான்; "பட்டேரி அனுப்பின ரக்ஷஸ் இப்போ மகேஸ்வரி சித்தியையும் குழந்தைகளையும் காணாமக் கோபத்தோட வீட்டையே துவம்சம் பண்ணிட்டிருக்கு."



"ஐயோ... பசுமாடு அங்க இருக்கே. நிறைசினையா இருக்கிற மாட்டை ரக்ஷஸ் ஏதாவது தொல்லைப்படுத்துமா குமாரா?" - மகேஸ்வரி தங்கச்சி அழத்தொடங்கினார்.

பிரம்பைக் கையில் எடுத்துக்கொண்டு பூஜையறை வாசற்படியை அடைந்த குமாரன்தம்பி தியானத்தில் மூழ்கினான். எரிந்து கொண்டிருந்த நிலவிளக்கின் முன்னால் பிரம்பை வைத்த பிறகு கூப்பிய கைகளுடன் ஒற்றைக்காலில் நின்று கருடசேவையில் ஈடுபட்டான்.

கூப்பிய கைகளுடன் தெற்குத் தளத்தில் நின்று கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும், மகேஸ்வரித் தங்கச்சியும் மனம் நொந்தவர்களாக மௌனமாக கருடபகவானை பிரார்த்தனை செய்தனர்.

சமையலறை வராந்தாவிலிருந்த நாணிக்குட்டியும் ஈஸ்வர சிந்தனையில் கவனம் செலுத்தினாள்.

குழந்தைகள் இருவரும் கிழக்குப்புறத் தளத்தில் படுத்து தூங்கி விட்டனர்.

சற்றுநேர கருடசேவைக்குப் பிறகு குமாரன்தம்பி தென்புறத் தளத்தை நோக்கிக் கூறினான்: "ரக்ஷஸ் தொழுவத்துக்குள்ள நுழைஞ்சிருக்கு. ஆனால், பசுவைத் தொல்லைப்படுத்தவிடாம கருடபகவான் கவனிச்சுப்பார்."

'அந்த ரக்ஷஸை ஆவாஹம் செய்து இங்கு கொண்டுவர முயற்சி செய்தால் என்ன?' குமாரன்தம்பி யோசித்தான். தேவியை தாரா மந்திரத்தின் மூலம் பிரீதிப்படுத்தினால் தன் பிரயோகம் வெற்றி பெறும்.

மாய உருவில் தப்பிக்கும் வல்லமை உள்ளவர்கள் ரக்ஷஸ்கள். இந்த நிலையில் தன் முயற்சி வெற்றி பெறுமா?

பட்டேரியின் தேவையறிந்து அவருடைய ஆராதனா மூர்த்திதான் ரக்ஷஸை விட்டுக் கொடுத்திருக்கும். கரும்பூனையின் உடம்பிலிருந்து ரக்ஷஸ் தானாக மறைய முடியாது.

வடயக்ஷிணியோ, தூமாவதியோ பட்டேரியின் இஷ்ட தேவதையாக இருக்கும். மோசமான மந்திரப் பிரயோகங்கள்தானே அவரது தொழிலே!

யக்ஷிகள், பூதப் பிரேதப் பிசாசுகள் மற்றும் ரக்ஷஸுகளையும் கட்டுப்படுத்த துர்க்கா தேவியைத் தவிர வேறு யாரால் முடியும்? தேவிக்கு இரண்டு மாறுபட்ட குணங்கள் அல்லவா உள்ளன? ஒன்று குரூரம், மற்றது சாந்தம். சம்ஹாரம் செய்யும் காளியும், சாந்த சொரூபியான ஹைமவதியும் துர்க்கா தேவியின் இரண்டுவித வடிவங்களல்லவா?

தேவியை மனத்தில் தியானித்துக் கொண்டு பட்டேரி ஏவிய ரக்ஷஸை ஆவாஹம் செய்ய குமாரன்தம்பி மந்திரஜபம் தொடங்கினான்.

நாழிகைகள் கடந்தன. அவனது மந்திரப் பிரயோகத்தைப் பக்திபூர்வமாகக் கவனித்தபடி அசைவற்று நின்று கொண்டிருந்தனர் மூன்று பெண்களும்.

முழு உடம்பையும் ஆவேசத்தால் உதறிக் கொண்டு குமாரன் தம்பி விளக்கின் முன்னாலிருந்த பிரம்பைக் கையில் எடுத்தான். பிரம்பின் நுனியால் நடுமுற்றத்தின் மையப் பகுதியில் ஒரு வட்டம் வரைந்தான். பிறகு தென்புறமாக நகர்ந்து முற்றத்தையே கவனித்தான்.

அவனுடைய ஆவேசம் கலந்த நடவடிக்கைகளையும், மாந்திரீகக் கர்மங்களையும் கவனித்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும், அவரது தங்கையும் திகைத்துப்போயினர். நாணிக்குட்டி உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரை நடுங்கத் தொடங்கினாள்.

மேற்புறமிருந்து நடுமுற்றத்தில் எதுவோ ஒன்று வந்து விழுந்தது. அது விழுந்த சத்தத்தைக் கேட்டு குமாரன்தம்பியைத் தவிர மற்றவர்கள் அதிர்ந்தனர்.

மாந்திரீகன் வரைந்திருந்த வட்டப்பரப்பிற்குள் வந்து விழுந்தது என்னவென்று அறிவதற்காகக் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும், மகேஸ்வரித் தங்கச்சியும் நடுமுற்றத்திற்கு வந்தனர்.



வந்தவர்கள் இருவரும் ஏககாலத்தில் ஒரே குரலில் அலறினர்: "ஐயோ, கரும்பூனை!" சமையலறை அருகே நின்றிருந்த நாணிக்குட்டி சுயநினைவை இழந்து தரையில் விழுந்தாள். குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் அவரது தங்கையும் உயிருள்ள பிணங்கள்போல் ஆகிவிட்டிருந்தனர்.

பிரம்புடன் குமாரன்தம்பி நடுமுற்றத்துக்கு வந்தான். பிரம்பின் நுனியால் அவன் பூனையின் உடலைத் தட்டினான். அது அசையாமல் கிடந்தது!

"ஓகோ! நீ மாயமா மறைஞ்சுட்டியா, அல்லது பூனையோட நீயும் தொலைஞ்சுட்டியா?" - அவன் கேலிக் குரலில் கேட்டான்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் மகேஸ்வரித் தங்கச்சியும் ஒரு விதமாகத் தென்புறத் தளத்திற்கு வந்து சேர்ந்தனர்.

"மகனே! இனிமேலாவது குமாராசாரை விட்டுவிடு. இல்லேன்னா அங்கேயும் ஒரு பிணத்தைப் பார்க்க நேரலாம்" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி நெஞ்சம் நிறைந்த பயத்துடன் கூறினார்.

குமாரன்தம்பி ஒரு சிறிய கைவிளக்கை ஏற்றினான். அதை எடுத்துக்கொண்டு நிலவறைக்குச் சென்றான். அங்கு அவன் கண்ட காட்சி. . .

பயந்து நடுங்கியபடி நிலவறையின் ஒரு மூலையில் உட்கார்ந்திருந்தார் குமாராசார். அவருக்கு அருகிலேயே படம் உயர்த்தி நின்றிருந்தது ஐந்துதலை நாகம்!

"கூடாது" - குமாரன்தம்பி குரலெழுப்பினான். பாம்பு தலையைத் தாழ்த்தியபடி மற்றொரு மூலையை நோக்கி ஊர்ந்தது.

"எழுந்து போ!" - அவன் குமாராசாரிடம் உத்தரவிட்டான்.

தள்ளாடியபடி பெரியவர் நிலவறையிலிருந்து வெளியேறினார்.

சிற்றறையின் மேற்குப்புறக் கதவைத் திறந்துவிட்ட குமாரன்தம்பி கட்டளையிட்டான்: "இதுதான வந்தவழி? இந்த

வழியிலேயே வெளியேறு. இப்பவே பட்டேரியிடம் போய்ச் சொல். கரும்பூனையின் உடம்பை நான் நாளைக்காலையில் கொடுத்து அனுப்புவதாக அவர் அதைக் குழம்பு வைச்சுச் சாப்பிடட்டும்."

கதவை மூடியபிறகு வீட்டிற்குள் வந்த குமாரன்தம்பியிடம் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி திகைப்பும் வியப்பும் கலந்த குரலில் கூறினார்: "மகனே! பூனையோட உடலைக் காணோம்!"

நடுமுற்றத்தைக் கவனித்த குமாரன் ஒரு கணம் திடுக்கிட்டான். தன் கவனக் குறைவுக்காகத் தன்மீதே கோபம் தோன்றியது.

பூனை அசையாமல் படுத்திருந்ததால் அது இறந்து போயிருக்க வேண்டும் என்று நினைத்தான். இல்லாவிட்டால் ரக்ஷஸை மட்டும் ஆவாஹம் செய்து விலக்கியிருக்கலாம்.

ரக்ஷஸின் நிலைமையை ஊகித்து அறிந்த பட்டேரி மறுமந்திரப் பிரயோகம் செய்து அதை ஆவாஹம்செய்து கொண்டு போயிருப்பார். புத்தூர் தறவாட்டு மாந்திரீகனைத் தோல்வியடைய செய்து விட்டதாக பட்டேரி தற்சமயம் மகிழ்ச்சி அடையட்டும்.

"துர்மந்திரவாதியான சூரக்காட்டுப் பட்டேரி... உனக்குத் தெரிஞ்சிருக்கிறதைவிடப் பத்து மடங்கு மந்திரப் பிரயோகங்கள் கொண்ட அற்புதமான ஓலைச்சுவடிகள் என்கிட்ட இருக்கு. இன்னும் எவ்வளவோ காலம் இருக்குது. நம்ம பலாபலத்தைச் சோதித்துப் பார்த்துடலாம்." - குமாரன்தம்பி சவாலை ஏற்றுக் கொள்வது போல் பேசிக் கொண்டான்.

குமாரன்தம்பியின் முகபாவங்கள் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியைப் பயம் கொள்ள வைத்தன. ஜோதிடத்தையும், துர்மந்திரவாதத்தையும் தொழிலாக ஏற்றுக் கொண்ட பட்டத்திரியை எதிர்க்க வேண்டுமானால், தன் மகன் துர்மந்திரவாதங்களையும் செய்ய வேண்டி வரலாம்.

வசியப் பிரயோகங்களையோ, மாரண கர்மங்களையோ, உச்சாடனக் கிரியைகளையோ இந்த வீட்டு மாந்திரீகர்கள்



நடத்தியிருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், அப்படிப்பட்ட எல்லாவிதப் பிரயோகங்களையும் அவர்கள் கற்று வைத்திருந்தனர்.

குமாரன் துர்மந்திரவாதியாக மாற நேர்ந்தால், குடும்பத்தின் நல்ல பெயர் அழிந்துவிடும். பரிசுத்தமான மாந்திரீகப் பாரம்பரியம் களங்கமடைந்து விடும். இவை எல்லாவற்றையும்விட அவனுடைய கடைசிக்காலம் பரிதாபத்திற்குரியதாக இருக்கும்.

"என் செல்வமகனே, பட்டேரிகிட்ட உனக்கு இருக்கிற கோபத்தால, பிடிவாதத்தால துர்மந்திரங்கள் எதையும் நீ செய்யக்கூடாது" தாய் மகனிடம் விண்ணப்பிக்கும் குரலில் கூறினார்.

குமாரன்தம்பி பதில் எதுவும் சொல்லவில்லை. எதிராளியாக அரங்கத்திற்குள் அறிமுகமாகிவிட்ட, மறைவான தாக்குதல்களைத் தொடங்கியுள்ள சூரக்காட்டு ராமன் பட்டத்திரி என்கிற பட்டேரியை மண்ணைக் கௌவச் செய்யும்படியான மந்திரப் பிரயோகங்களை எப்படி நடத்துவது என்பது பற்றிய சிந்தனையில் ஆழ்ந்து போயிருந்தது குமாரன்தம்பியின் உள்ளம்.

எங்கிருந்தோ ஆந்தையொன்று அலறியது. அது ஒரு மோசமான சகுனம் என்பதை அறிந்து குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி தன் வலது கரத்தை மார்பில் வைத்து அழுத்தினார். அவருடைய இதயத்துக்குள் சூளையொன்று கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருந்தது.

# 16

சூரக்காட்டு இல்லத்தின் யக்ஷிக்காவு. (மரம் செடி கொடிகள் நிறைந்த ஒரு சிறியகாடு. மோகினியைப் பிரதிஷ்டை செய்துள்ள காவு) துர்த்தேவதைகள் மற்றும் பூதப்பிரேதப் பிசாசுகளின்

குடியிருப்புப் பகுதியாக விளங்கும் அந்தக் காவினுள் பிரம்மாண்டமான (வடவிருக்ஷம்) ஆலமரத்தைச் சுற்றிலும் சற்றுத் தூரத்திற்கு வட்டமான திண்ணைபோல் கட்டப்பட்டிருந்தது. அந்த ஆல்தரைதான் ராமன் பட்டத்திரியின் பிரதானமான மந்திரமண்டபம். அதாவது மந்திர யாகசாலை.

வெள்ளிக்கிழமை மதியம் முதல் மாந்திரீகக் கர்மங்களில் ஈடுபட்டுக் காவுக்குள் மந்திர மண்டபத்திலேயே இருந்த பட்டத்திரி, சனிக்கிழமை விடியற்காலையில் மந்திர கர்மங்களை நிறுத்தினார்.

அவரது முகத்தில் குரூரம் வினாடிக்கு வினாடி உயர்ந்து கொண்டிருந்தது. வியர்வையில் நனைந்திருந்த உடல் அதிர ஆரம்பித்தது.

முன்புறத்திலுள்ள ஹோமகுண்டத்தைக் கோபத்துடன் பார்த்து அலறினார்: "உக்கிரப் பிசாசினியான தூமாவதி, நீ ஏவிய ரக்ஷஸை குமாரன்தம்பி கட்டிப்போட்டுட்டானா? இஷ்ட தேவதையான வடயக்ஷணீ, உன்னாலும் அந்தச் சமயத்தில் எதுவும் செய்ய முடியவில்லையா? குமாரனது கவனக்குறைவால் ரக்ஷஸால் அங்கிருந்து தப்பிக்க முடிந்தது. இல்லாவிட்டால் நிலைமை என்னவாகியிருக்கும்?"

அப்போதும் எரிந்துகொண்டிருந்த தீப்பந்தங்கள் ஒவ்வொன்றையும் பிடுங்கித் தூரத்தில் வீசி எறிந்தார்.

கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த ஹோமாக்னியில் தண்ணீரைக் கொட்டினார். ஹோமகுண்டத்திலிருந்து எழும்பிய புகை அந்த இடம் முழுவதிலும் பரவியது.

பெண்ணின் குரலில் ஓர் அலறல்! தொடர்ந்து பெண் குரலொன்று வாய்விட்டு உரத்துச் சிரிக்கும் சத்தம்!

"போதும், நீங்கள் இப்போது போகலாம். மேலும் அதிகமான சக்தியைச் சேகரித்துக் கொண்டு வாருங்கள். அதற்குப் பிறகு உங்களை அழைத்துக் கொள்கிறேன்" - அவர் கோபக் குரலில் கத்தினார்.



பத்மாசனமிட்டு அமர்ந்திருந்த ராமன் பட்டத்திரி வலதுகையை தலையில் வைத்து அழுத்தியபடி கண்களை மூடினார். அவர் மனோராஜ்யத்திற்குள் மூழ்கிவிட்டார்.

வெள்ளிக்கிழமையும் அமாவாசையும் சேர்ந்த தினமான நேற்று அவர் மந்திரகர்மங்களைத் தொடங்கியதுகூட திட்டமிட்டுத்தான். தூமாவதிக்குப் பிரியமான நாள் அமாவாசை. வடயக்ஷிணிக்குப் பிரியமான நாள் வெள்ளிக்கிழமை!

புத்தூர் வீட்டின் மாந்திரீகனுக்கு எதிராக துர்மந்திரப் பிரயோகம் நடத்துவது இது இரண்டாவது முறை. முதல் முயற்சி போலவே இதுவும் தோல்வியிலேயே முடிந்திருக்கிறது!

முதல் முறையாக இந்தக் கர்மங்களைத் தொடங்கியதும் ஒரு வெள்ளிக்கிழமையன்றுதான். அன்று பிரத்தியட்சப்படுத்தியது வடயக்ஷிணியை மட்டும்தான். ஒரு பகலும் ஓர் இரவும் தொடர்ந்து நடத்திய ஹோம கர்மங்களுக்குப் பிறகு வடயக்ஷிணி வெளிப்பட்டது.

குமாரன்தம்பி மாந்திரீகஸித்தி பெறுவதற்கு முன்பே அவனையும், அவனுடைய குடும்பத்தையும் அழிப்பது அவரது லட்சியம். அதற்காகத்தான் வடயக்ஷிணியின் உதவியால் கந்தர்வனை, புத்தூர் தறவாட்டிற்கு ஏவியதும். ஆனால், நடந்ததோ?

குமாரன் நிலவறைக்குள் கருடசேவை நடத்தும்போதுதான் கந்தர்வன் அங்கு வந்து சேர்ந்தான். கருடன் அங்கு எழுந்தருளியிருப்பதைப் புரிந்து கொண்ட கந்தர்வன் முதலில் சற்றுப் பதற்றமடையவே செய்தான். அவன் முதலில் கண்டது நாணிக்குட்டியைத்தான். எனவே அவளது உடம்பில் புகுந்து கொண்டான்.

இருந்தும் மாந்திரீகனாக இல்லாத குஞ்ஞுக்குட்டியிடமிருந்து அடிபட்டு, சக்திவாய்ந்த கந்தர்வன் தோல்வியடைந்து திரும்பினான். அது அந்த மாந்திரீகப் பிரம்பின் வல்லமை!

குமாரனது சித்தியையும் அவனது மருமக்களையும் ஒரு வழி செய்துவிட்டால் அவன் பயந்து விடுவான் என்றும் அத்துடன்

அவனுடைய மனோதைரியம் அழிந்து விடுமென்றும் நினைத்துத்தான் மறுமுறை தூமாவதியின் உதவியால் ரக்ஷஸை ஏவினோம்.

தான் ரக்ஷஸை ஏவும் தகவலை குமாரன் ஏற்கெனவே தெரிந்து கொண்டிருக்கிறான். ஆரம்பத்திலேயே அவனுக்கு ஞானதிருஷ்டி ஸித்தித்து இருக்கிறது. நாசமாகிப்போனவன் ஜகதீஸ்வரியான துர்க்காவை, வசிகரித்திருக்கிறான்!

அவன் தேவியை வசப்படுத்தி விடக்கூடும் என்பது ஏற்கெனவே தனக்கிருந்த சந்தேகம்தான். அதை உறுதிப்படுத்திக் கொள்வதற்குத்தான் குமாராசாரை வேவுபார்க்க அனுப்பினோம். விவரம் போதாத கிழவன் அகப்பட்டு, ஆபத்திலும் சிக்கிக் கொண்டான். எல்லாமே சிக்கலாகி நாசமாகிவிட்டது!

அகப்பட்ட கிழவன் குமாரன்தம்பியிடம் எல்லா ரகசியங்களையும் உளறிக் கொட்டியிருப்பான் என்பதில் சந்தேகம் இல்லை. இருக்கட்டுமே... இதற்கெல்லாம் தான் கொஞ்சம் கூடப் பயப்படப்போவதில்லை.

இவ்வளவெல்லாம் இருந்தாலும் குமாரனுக்கு நேர்ந்த ஒரு சிறு தவறால் அல்லவா ரக்ஷஸ் மாயமாகத் தப்பிக்க முடிந்தது? ரக்ஷஸை பந்தன வளையத்திற்குள் வரவழைத்துவிட்ட பிறகு ஐந்நூற்றியொரு வினாடிகளுக்குள் அதை ஆவாஹம் செய்து எங்காவது ஸ்தாபிதம் செய்யவோ, ஹோமிக்கவோ வேண்டும் என்பதை அவன் ஞாபகத்தில் வைத்திருக்கவில்லை. அந்த வரையில் நமக்கு அதிர்ஷ்டமிருந்திருக்கிறது!

ஒருவேளை தன்னுடைய கணக்குகள் எல்லாம் தவறுகிறதா?

புத்தூர் தறவாட்டின் மாந்திரீக வல்லமையைச் சுத்தமாக அழித்து ஒழிப்பதுதான் தன்னை நிலைநிறுத்திக் கொள்ளவும், சூரக்காட்டு இல்லத்தின் எதிர்காலத்துக்கும் நல்லது.

புத்தூர் மாந்திரீகர்கள் கருடசேவையின் மூலம் விஷக்கடிக்குச் சிகிச்சையளிப்பதில் தனக்கு எந்தவிதமான ஆட்சேபனையும் கிடையாது. ஆனால், துர்த்தேவதைகளைத் தனது விரல் நுனியில்



நிறுத்தி வைத்திருக்கும் ஜகதீஸ்வரியை ஆதீனப் படுத்தியிருப்பது தனக்கு அழிவையே ஏற்படுத்தும். துர்த்தேவதைகளை மட்டுமே உபாசனை செய்துவரும் பாரம்பரியமான தனது இல்லத்திற்கும் அது ஆபத்தை விளைவிக்கும்.

பப்புத்தம்பிக்கு எதிராகத் தன் தந்தையார் கம்பீரமான முறையில் நடத்திய துர்மந்திரவாதம் - மாரண, ஸ்தம்பன மந்திரங்கள் பலனற்றுப் போயிருக்கின்றன.

புத்தூர் தறவாட்டின் மாந்திரீக வல்லமையை ஒட்டு மொத்தமாக அழிப்பது என்பது அப்பாவின் நிறைவேறாத ஒரு லட்சியமாகவே இருக்கிறது. கந்தர்வனை அந்த வீட்டிற்குள் நுழையும் படியாவது தன்னால் செய்ய முடிந்தது. அப்பாவால் அதுவும் முடியாமலிருந்தது.

மந்திரோபதேசம் செய்து அனுக்கிரகித்தபோது அப்பா சொல்லியிருந்தார்: "ஜோதிடத்திலும் மாந்திரீகத்திலும் நீ கெட்டிக்காரனாக வேண்டும். புத்தூர் தறவாட்டு மாந்திரீகர்கள் எந்தக் காலத்திலும் நம்மை மிரட்டிக் கொண்டிருப்பவர்கள். கருடப் பிரீதியும், தேவியின் கடாட்சத்தையும் வைத்துக்கொண்டு நமது ஆராதனைக்கு உரிய மூர்த்திகளான வடயக்ஷிணியையும் தூமாவதியையும் செயலிழக்கச் செய்ய அவர்களால் முடியும். அப்படி ஒரு நிலைமை ஏற்பட்டால், நாம் நமது வழக்கமான மாரண-ஸ்தம்பன-வசியக் கர்மங்களையோ, உச்சாடனப் பிரயோகங்களையோ நடத்த முடியாது. எனவே அந்தப் பரம்பரையை அழிப்பதுதான் உன்னுடைய லட்சியமாக இருக்கவேண்டும்!"

ஒரு காலத்தில் இந்தப் பிராந்தியத்தின் ஒரே மாந்திரீகக் குடும்பமாக இருந்தது சூரக்காட்டு இல்லம். மலபார் பகுதியிலிருந்து மூன்றோ, நான்கோ தலைமுறைகளுக்கு முன்பாக இங்கு வந்து குடியேறியவர்கள் புத்தூர் தறவாட்டினர். சகலவிதமான மாந்திரீக வித்தைகள் மற்றும் தந்திரப் பிரயோகங்களுக்கான ஏட்டுச்சுவடிகள் அவர்களிடம் இருப்பதாகத் தெரிகிறது.

புத்தூர் மாந்திரீகர்கள் உருவான பிறகு தங்களுடைய சூரக்காட்டு இல்லத்தின் மாந்திரீகப் பெருமை ஒளி குன்றத் தொடங்கியது.

நல்ல வேளையாகத் துர்மந்திரவாதக் கர்மங்களைச் செய்ய புத்தூர் வீட்டு மாந்திரீகர்கள் தயாராக இல்லை. அது ஆறுதல் தரக் கூடிய விஷயம்தான். அதனால் பிரச்சனை தீரவில்லையே! துர்மந்திரவாதங்களின் பலனாக மனிதர்களுக்கு ஏற்படும் தொல்லைகளை அகற்ற, அவர்கள் மாற்று மந்திரங்கள் செய்வதல்லவா தங்களை அலைக்கழிக்கும் ஒரு விஷயம்.

யக்ஷிணி மற்றும் பிசாசினிகளின் அனுக்கிரகத்துடன் நடத்தும் துர்மந்திரவாதங்கள் பலிக்காமல் போனால், அதனால் நஷ்டம் தங்களுக்குத்தான். பாதிக்கப்பட்டவர்களிடம் பணம் எதுவும் வாங்காமல் மாந்திரீக முறையிலேயே அவர்களுக்கு உதவி புரிய பப்புத்தம்பி தொடங்கிய பிறகுதான் இந்த இல்லத்துக்கு வந்து கொண்டிருந்த கூட்டம் படிப்படியாகக் குறையத் தொடங்கியது.

ஒரு துர்மந்திரவாதப் பிரயோகத்திற்கு குறைந்தபட்சம் நூறு பணமாவது கிடைக்கும். பணம் எதுவும் வாங்காமல் நூல் சரடோ, தாயத்தையோ ஜபித்துத் தந்து அந்த உபாதையை நீக்கும் புத்தூர் தறவாட்டின் சாந்தி கர்மங்கள் சூரக்காட்டு இல்லத்தின் பொருளாதாரப் பாதுகாப்பையே தகர்த்துவிட்டது. இப்போதும் தகர்த்துக் கொண்டிருக்கிறது.சமீபகாலமாகத் துர்மந்திரவாதம் செய்ய வேண்டும் என்று யாரும் தங்களிடம் வருவதில்லை. முன்னர் தொடர்பு கொண்டிருந்தவர்கள்கூட இப்போது வருவது, புகார்களுடன்தான். எதிரிகளை அழிக்கும் வல்லமை மனிதர்களுக்கு இல்லை என்கிற நிலை ஏற்பட்டால், நாட்டின் நிலை என்ன ஆவது? மந்திரவாதத்தையே தொழிலாக ஏற்றுக்கொண்டுள்ள வர்களின் எதிர்காலம் என்ன ஆவது?

தலைமுறை தலைமுறையாகத் தொடர்ந்துவரும் தங்களது கர்மஸித்தி அழிந்து போய்விட்டால் இல்லத்தின் எதிர்காலமே இருண்டுவிடும். இப்போதே பொருளாதார நெருக்கடிகள் அதிகம்.



இல்லை... இரண்டு தடவை தோல்வியடைந்துவிட்டதால் இந்த முயற்சிலிருந்து பின்வாங்கப் போவதில்லை.

அடுத்த முறை இதே மந்திரமண்டபத்தில் வடயக்ஷிணியையும், தூமாவதியையும் ஒன்றாகப் பிரத்தியட்சப்படச் செய்வோம். அன்று நடத்தப்போவது மிகவும் கடுமையான பூஜையாக இருக்கும். உக்கிரமான ஹோமமாக இருக்கும். உண்மையிலேயே மஹாஹோமமம்தான்.

இஷ்ட தேவதைகளை அதிகபட்ச அளவுக்குப் பிரீதிப்படுத்துவதற்காக வடயக்ஷிணி மந்திரத்தையும், தூமாவதி மந்திரத்தையும் ஐந்தரை லட்சம் தடவை ஜபிப்போம்.

சந்தனமண்டபம் அமைத்து நெய்விளக்கு ஏற்றி, மந்திர ஜபத்துடன் விடியலில் மலரும் வெள்ளை அலரிப்பூவை ஆயிரம் தடவை ஹோமிக்கும்போது வடயக்ஷிணி தனக்கு முன்பாக ஆனந்த நடனமாடும். மகிழ்ச்சியில், தன்னிடம் சுரதப் பிரார்த்தனை நடத்தும். வடயக்ஷிணியின் விருப்பத்தை நிறைவேற்றி விட்டால் அதன் பிறகு தன்னுடைய கட்டளை எதுவாக இருப்பினும் நிறைவேற்றி வைப்பாள். அவளே அதற்கான சமயத்தைக் கண்டறிந்து, குமாரனை ஒரு வழி செய்து விடுவாள்!

தீப்பந்த வெளிச்ச வட்டத்திற்குள் ஹோமகுண்டம் அமைத்து, கடுகு எண்ணெயில் ஊறவைத்த கருங்காலி மரத்துண்டுகளால் பத்தாயிரம் தடவை ஹோமித்தால் தூமாவதி வழக்கத்தைவிட அதிகமான வல்லமையுடன் செயல்படுவாள்.

வடயக்ஷிணியையும் தூமாவதியையும் அருகருகே நிற்க வைத்துக்கொண்டு மாந்திரீகனான தன்னுடைய நெற்றியைத் தானே வெட்டிக்கொண்டு அதிலிருந்து ஒழுகும் ரத்தத்தை அவளுக்கு நிவேத்யமாக அர்ப்பணித்தால், உக்கிரமான அந்த ரூபிணிகள் வெறி பிடித்து ஆடுவார்கள். அவற்றின் சிங்கிடிகளான (எடுபிடிகளான) ராக்ஷஸுகளையும், பூதப்பிரேதப் பிசாசுகளையும் அழைத்துக் கொண்டு அவை குமாரனை குத்திக் குதறக் கிளம்பிவிடும்.

குமாரனுக்கு தேவியின் பிரீதி கிடைத்தாலும் அவனும் ஒரு மனிதன்தான். அவனுக்கும் பலவீனமான நேரம் உண்டு. அந்தச்

சமயத்தில் அவன் தேவியை மறந்துவிடலாம். சமயம் பார்த்துக் காத்திருக்கும் யக்ஷிணியும் தூமாவதியும் அந்த நேரத்தில் அவனுக்கு ஆபத்தை ஏற்படுத்தும்.

"புத்தூர் தறவாட்டின் மகாமாந்திரீகனான குமாரா, நீ உன் அற்ப மாந்திரீக ஸித்தியில் மகிழ்ந்து கர்வப்படாதே! உன்னுடைய தேவி எல்லா நேரத்திலும் உன்னைக் காப்பாற்றுவாளென்று நினைக்காதே! உன்னுடைய கருடன் எப்போதும் உனக்குத் துணையாக இருக்குமென்றும் கருதாதே!

உன்னுடைய ஹனுமான் சேவை! பேய் மடையா... அந்தக் குரங்கை விரட்டியடிக்கும் வல்லமை பொருந்தியது, பிசாசினிகளின் மகாராணியான தூமாவதி. வானரப் பிரமுகனைத் தோல்வியடையச் செய்யும் சக்தி யக்ஷிகளின் மகாராணியான வடயக்ஷிணிக்கும் உண்டு.

சூரக்காட்டு இல்லத்து ஜோதிடனும் தாந்திரீகனுமான ராமன் பட்டத்திரியின் முன்னால் புத்தூர் மாந்திரீகனும் விஷக்கடி வைத்தியனுமான குமாரன்தம்பி தோல்வியடைந்து தலைக்குப்புற விழுவதைக் காட்டித் தருகிறேன்!"

'வெற்றி நிச்சயம்!' - என்கிற சிந்தனை பட்டத்திரியை மகிழ்ச்சிக் கடலில் தள்ளியது.

மனோராஜ்யத்தில் மூழ்கி மயங்கிய பட்டத்திரி, தன்னையறியாமலே சிரித்தார். வாய்விட்டு உரத்த குரலில் சிரித்தார்.

உரத்த குரலிலான அந்தச் சிரிப்பு யக்ஷிக்காவையே அலைக்கழித்தது!

# 17

விடியற்காலையில் தன் வீட்டிற்குப் புறப்பட்ட மகேஸ்வரித் தங்கச்சியிடம் குமாரன்தம்பி கூறினான். "வீட்டுக்குப் போன பிறகு



நீங்க பயப்பட்டால்...? நானே உங்களைக் கொண்டு போய்விடுறேன். அப்படியே நேற்று இரவு ரக்ஷஸ் வந்து போனதன் அடையாளம் ஏதாவது தெரியுதான்னும் பார்த்துடுறேன்."

"எனக்கு அந்த மாதிரிப் பயமெதுவும் கிடையாது குமாரா... வந்தாலும் நீ உடனே திரும்பிப் போற. அதற்குப் பிறகும் நாங்க அங்க குடியிருக்க வேண்டாமா? எதுக்காக உனக்கு வீண் சிரமம்? வேண்டாம்... நானும் குழந்தைகளும் போறோம்" - அவர் புறப்படத் தயாரானார்.

"அவசரப்படாதீங்க சித்தி. நிலவறையில விடியற்காலை பூஜையை நடத்திட்டு நானும் வர்றேன். நீங்களும், குழந்தைகளும் கட்டிக்கொள்ள மூணு சரடுகளை மந்திரிச்சுத் தர்றேன்."

குமாரன்தம்பியின் இந்த யோசனை மகேஸ்வரி தங்கச்சிக்கு நியாயமானதாகவே தோன்றியது. தறவாட்டு மாந்திரீகன் மந்திரித்துத் தரும் கறுப்புக் கயிற்றை இடுப்பில் கட்டிக்கொண்டால் எந்தவிதமான பயமும் ஏற்படாது என்பது அனுபவ சத்தியம். மந்திரச்சரடு உடம்பில் உள்ளவரையில் எந்தத் துர்த்தேவதையும் அந்த உடம்பைத் தொட முடியாது.

இதற்கு முன்னுதாரணமாகச் சொந்த அனுபவம் ஒன்று நினைவில் எழுந்தது. அன்று அவருக்குப் பத்து அல்லது பன்னிரண்டு வயது இருக்கலாம். ஒரு நாள் வழக்கம் போல் மெக்குக் குளத்தில் குளித்துக் கொண்டிருந்தார்.

பயங்கரமான ஓர் அலறலைக் கேட்டுத் திடுக்கிட்டதும் பயந்து அலறியதும் ஒரே சமயத்தில் நிகழ்ந்தன. யாரோ தன் கழுத்தைக் கௌவிப் பிடித்திருப்பதாகத் தோன்றியது.

அந்த அலறலைக் கேட்டு அம்மாவும் குஞ்ஞுக்குட்டி அக்காவும் ஓடிவந்தார்கள். சுயநினைவை இழந்து நீரில் விழுந்திருந்த தன்னை அவர்கள் கரையேற்றினர்.

மறுநாளும் தொடர்ந்து அதே அனுபவம் ஏற்பட்டவுடன் பப்பு அண்ணன் ஒரு கறுப்புக் கயிற்றை மந்திரித்துத் தந்தார். கயிற்றை

இடுப்பில் கட்டிக் கொண்டோம். அதன்பிறகு குளத்தில் மட்டுமல்ல, வேறு எந்த ஓரிடத்திலும் பயம் என்பதே தோன்றியதில்லை.

ஊரிலிருந்த கர்ப்பிணிப் பெண்களும் குழந்தைகளும் பயத்தொல்லையை நீக்க இந்த வீட்டு மாந்திரீகனைத்தான் அணுகுவார்கள். மந்திரித்த கயிறையும், மந்திரத்தகடையும், தாயத்தையும் பெற்றுச் செல்வார்கள்.

கயிறை ஜபித்து வாங்க வேண்டியவர்கள் கறுப்புக் கயிறையும், தாயத்து வேண்டுபவர்கள் தங்கம் அல்லது வெள்ளியில் செய்த தாயத்தின் உருளையையும் கொண்டுவந்து கொடுத்தால் போதும். செய்யும் மாந்திரீகக் கர்மங்களுக்கு எந்தவிதமான பிரதிபலனையும் - கூலியையும் வாங்குவதில்லை என்பது புத்தூர் தறவாட்டு மாந்திரீகனின் சிறப்பு என்றே கூறலாம். யாராவது மாந்திரீகனுக்குத் தட்சிணை தர வேண்டும் என்று விரும்பும் பட்சத்தில், ஒரே ஒரு வெற்றிலையையும் பாக்கையும் பெற்றுக் கொள்வார்கள்.

ஆயிரக்கணக்கான ஆட்களையல்லவா பயத்தின் நீராளிப் (ஆக்டோபஸ்) பிடியிலிருந்து பப்பு அண்ணன் காப்பாற்றியிருக்கிறார். துர்மந்திரவாதத்தின் பிடியில் அகப்பட்ட பல பேரையும் அதேபோல் காப்பாற்றியிருக்கிறார். அவர் விலக்கித் தந்திருக்கிற யக்ஷி மற்றும் பிரேத உபாதைகள் எண்ணிக்கையில் அடங்குமா?

மந்திரஸித்தியைப் பொறுத்தவரை பப்பு அண்ணனைவிட அதிகமான அனுக்கிரகம் பெற்றிருப்பவன் குமாரன். அவனுக்கு எவ்வளவு விரைவில் மந்திரஸித்தி கைவந்திருக்கிறது!

ரக்ஷஸின் தாக்குதல் ஏற்படப் போவதை ஞானதிருஷ்டியின் மூலமாக அவனால் தெரிந்துகொள்ள முடிந்திருக்கிறது. அதனால், தானும் இரண்டு பிஞ்சுக்குழந்தைகளும் அதிலிருந்து தப்பிக்க முடிந்தது! இல்லாவிட்டால் இந்த நேரத்திற்குள் கொச்சு புத்தூர் வீட்டின் வடக்குப்புற அறையில் மூன்று அனாதைப் பிணங்களல்லவா விழுந்திருக்கும்?

வரவிருக்கும் எப்படிப்பட்ட முக்கியமான சம்பவத்தையும் முன்கூட்டியே தெரிந்துகொள்ளும் ஸித்தி விசேஷம்தான் இந்தத்



தறவாட்டு மாந்திரீகனை, மற்ற மாந்திரீகர்களிலிருந்து வேறுபடுத்தி வைத்திருக்கிறது.

"எல்லாம் குடும்பத்தின் புண்ணிய பலம். பித்ருக்களின் கருணையால்... பகவதியின் அருளால்... கருட பகவானின் கிருபையால்!" - மகேஸ்வரி தங்கச்சி தனக்குத்தானே பேசிக் கொள்வது போல் சொன்னார். அவருடைய இதயம் கடவுள் பக்தியில் ஆழ்ந்திருந்தது.

குமாரன்தம்பி நிலவறையை அடைந்தான். பிரபாத (விடியல்கால) பூஜையைத் தொடங்கியிருந்தான். நிலவறை முழுவதும் புண்ணியாகம் செய்த பிறகு பூஜையைத் தொடங்கினான்.

வழக்கத்தையொட்டி கருட பூஜை முதலில் நடைபெற்றது. தொடர்ந்து லலிதாசகஸ்ரநாமம் சொன்னான். பிறகு ஹனுமான் மந்திரங்களை உருப்போட்டுக் கடைசியாக பாலையும், பழத்தையும் நைவேத்தியம் செய்தான்.

கறுப்புக் கயிற்றின் மூன்று துண்டுகளை ஒரு சிறிய வெள்ளித் தட்டின் மீது வைத்து அதன் மீது விபூதியையும் கிருஷ்ணதுளசிப் பூக்களையும், தெற்றிப் பூக்களையும் தூவினான்.

இப்போது மனத்தில் நிறைந்திருப்பது சக்தியே வடிவமான ஸ்ரீஹனுமான்தான். ராக்ஷஸ ராஜாவன ராவணனை மண்டியிடச் செய்த வானர சிரோன்மணி - ஸ்ரீராம பக்தனான ஆஞ்சனேயர் - விஸ்வகர்மா தங்கத்தால் நிர்மாணித்ததும், ராவண ராஜதானியில் ஜொலித்ததுமான இலங்கை நகரைச் சாம்பலாக்கிய சீதாபக்தன். சஞ்சீவி மூலிகையுள்ள மருத்வா மலையைப் பெயர்த்து எடுத்து அம்மானை ஆடிய மாருதி!

பக்திப் போதையில் லயித்திருந்த மாந்திரீகனின் உதடுகள் அசைந்தன:

*ராமச்சந்த்ர க்ருஷி: காயத்ரீச்சந்த:*
*கபீஸ்வரோ தேவதா*
*ஹ்ரஸ் ஃப்ரோம் ஸ்ஃப்ரோம் ஹ்ரூம்ஸௌ*
*ஹ்ரஸ் ஃப்ரோம் ஹ்ஸௌம்*
*ஹனுமதே நம:*

திவ்வியமான இந்த மந்திரத்தை பத்தாயிரம் தடவைக்கு மேல் உருப்போட்டான். நிலவறை குலுங்கிய மாதிரியும் அதி பயங்கரமான அலறல் கேட்டதாகவும் தோன்றியபோது மாந்திரீகன் கண்களைத் திறந்தான். ஹனுமான் வெளிப்பட்டு அருள் பாலிப்பதாக அவனுக்குத் தோன்றியது.

கறுப்புக் கயிறுகளை ஒவ்வொன்றாக எடுத்து ஆங்காங்கே முடிச்சுகளைப் போட்டான். பிறகு மௌனமாகக் கயிறுகளைக் கையில் எடுத்த வீட்டிற்குள் வந்தான். மௌனமாகவே மூன்று பேரிடமும் கயிறுகளை வழங்கினான்.

வார்த்தையெழுப்பாமல் கயிறுகளைக் கட்டிக் கொள்ளுமாறு அவர்களிடம் சைகை மூலமாகத் தெரிவித்தான்.

மகேஸ்வரித்தங்கச்சியும் குழந்தைகளும் வடக்குப்புற அறைக்குப் போனார்கள். ராஜம்மா, கொச்சுராமன் இருவருக்கும் அரைஞாண் கயிறுகளாகக் கறுப்புக்கயிற்றைக் கட்டிய பிறகு அவர்களை வெளியே அனுப்பிவிட்டு மகேஸ்வரிதங்கச்சி பக்தி பூர்வமாகத் தன் இடுப்பிலும் கயிறைக் கட்டிக் கொண்டார்.

காலைப் பலகாரத்தை முடித்துக்கொண்டு மகேஸ்வரி தங்கச்சியும், குழந்தைகளும் விடைபெற்றுப் புறப்பட்டனர்.

"நானும் வர்றேன் சித்தி" - என்றபடி மந்திரப்பிரம்பைக் கையில் எடுத்துக்கொண்ட குமாரன்தம்பி அவர்களைத் தொடர்ந்தான்.

கொச்சுபுத்தூர் வீட்டின் மேற்குப்புற முற்றத்தை அடைந்த போதே குமாரன்தம்பியின் கண்கள் கிழக்குப்புறமிருந்த தொழுவத்தின் மேல் பதிந்தன.

"சித்தி, அங்க பார்த்தீங்களா? தொழுவத்திற்கு மேல உட்கார்ந்திருக்கிறது யாருன்னு பாருங்க!"

"பார்த்தேன் குமாரா!" - கைகளைக் கூப்பித் தொழுதபடி அவர் பதிலளித்தார்.

தொழுவத்தின் மேற்பகுதியில் அமர்ந்து ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது கிருஷ்ணப்பருந்து.



"க்ஷிப ஓம் ஸ்வாஹா" - குமரன்தம்பி கண்களை மூடி மந்திரத்தை உருப்போட்டான்.

நிமிடங்கள் சில உதிர்ந்தன. கிருஷ்ணப்பருந்து மறைந்தது. இருப்பினும் கண்களை மூடிய நிலையிலேயே மந்திர உச்சரிப்பைத் தொடர்ந்து கொண்டிருந்தன குமாரன்தம்பியின் உதடுகள்.

மகேஸ்வரிதங்கச்சி தொழுவத்திற்குள் நுழைந்தார். "தங்கமே கார்த்திகா! நீ ரொம்பவும் பயந்துட்டியா?" பசுவின் முகத்தை வருடியபடி அன்புடன் கேட்டார்.

கார்த்திகாவிடமிருந்து தீனமான ஒரு குரல் உயர்ந்தது. மகேஸ்வரியின் கண்களில் நீர் நிறைந்தது.

பசுவிற்கு முன்பாக வைக்கோலை வாரிப் போட்டுவிட்டு வெளியேறினார்.

கண்களைத் திறந்த குமாரன்தம்பி புன்சிரிப்புடன் கூறினான்: "நேத்து ராத்திரி இங்க கடுமையான ஒரு போராட்டமே நடந்திருக்குது சித்தி."

"என்ன போராட்டம் குமாரா?"

"ரக்ஷஸ் வீடு பூராவும் தேடியிருக்கு. யாரையும் காணாத கோபத்தில மாட்டுத் தொழுவத்திற்கு வந்திருக்கு. தொழுவத்திற்குள்ள நுழைஞ்சதும் கருடபகவான் சிறகுகளால ரக்ஷஸை அடிக்கத் தொடங்கினார். ரக்ஷஸ் முற்றப்பகுதிக்கு ஓடிவந்தது. கருடனும் தொடர்ந்தது. பிறகு ஒரே போராட்டம்தான். தோல்வியை ஒப்புக்கொண்ட ரக்ஷஸை ஆவாஹம் செய்து நடு முற்றத்தில (மந்திரத்தால்) கட்டிப்போட்டேன்."

"அப்படியும் கருடன் போகலையே குமாரா?"

"நாம வர்ற வரைக்கும் கருடன் இங்க காவல் இருந்திருக்கு சித்தி. இனிமேல் பயப்பட எதுவுமில்லை. நீங்களும் குழந்தைகளும் இடுப்பிலிருந்து கயிறைத் தொலைச்சுடாம பத்திரமாப் பார்த்துக் கிட்டாப் போதும்."

மகேஸ்வரிதங்கச்சி வாசல் கதவைத் திறந்தார். ஆனால், உள்ளே நுழையத் தயங்கி நின்றுவிட்ட அவர் பயப்படுகிறார் என்று குமாரன்தம்பிக்குத் தோன்றியது.

"முதல்ல நான் போகிறேன் சித்தி."

குமாரன்தம்பி வீட்டிற்குள் நுழைந்தான். பின்னால் அவர்களும் நுழைந்தனர்.

வீட்டின் எல்லா அறைகளுக்குள்ளும் நுழைந்து பார்த்துவிட்டு குமாரன்தம்பி கூறினான்: "ரக்ஷஸ் எந்தவிதமான அட்டகாசமும் செய்யாமப் போயிருக்குது. பயப்பட எதுவுமில்லை."

பூஜையறை வாசலில் நின்று, கருட தியானத்தையும், ஹனுமான் தியானத்தையும், தேவி ஜபத்தையும் நடத்தியபிறகு குமாரன்தம்பி விடைபெற்று வெளியே வந்தான்.

தேவி மந்திரங்களை உருப்போட்டபடி அந்த வீட்டை மூன்று முறை வலம்வந்த பிறகு மேற்குப்புறமாக நடக்கத் தொடங்கினான்.

மேற்குப்புறமுள்ள சாலை நெல்வயல்களின் வரப்புடன் முடிவடைகிறது. வயலில் இறங்கித் தென்புறமுள்ள அகலமான வரப்பினூடாக சற்றுத் தூரம் நடந்த பிறகு, அங்கிருந்து மேற்குப் புறத்திலுள்ள வரப்பின் வழியாக நடந்து புத்தூர் வீட்டின் கிழக்குப் புறத்தை அடைய வேண்டும்.

சாலை முடியும் இடத்தை அடைந்ததும் குமாரன்தம்பி வடக்குத் திசையைப் பார்த்தபடி சற்று நேரம் நின்றான்.

தென்புறமாக நடப்பதற்குப் பதில் வடபுறமாக நடந்தான். எதையோ தீர்மானித்துவிட்ட முகபாவத்துடன் மாந்திரீகப் பிரம்பை வலது தோளில் வைத்துக் கொண்டு, வடக்குப்புறமாக நடந்த குமாரன்தம்பியின் மனம் தேவியிடம் அர்ப்பணமாகியிருந்தது.

நெல்வயல் முடிவடையும் இடத்தில் இடதுபுறமாகத் திரும்பி வரப்பில் பயணத்தைத் தொடர்ந்தான். அந்த வரப்பு முடிவடைந்தது ஒரு சர்ப்பக்காவின் (பாம்புக் கோயிலின்) முன்புறம்.



"யக்ஷிக்காவு" - அவன் மந்திரித்தான். அங்கு நின்றபடி வடக்கில் பார்த்தான். யக்ஷிக்காவு மையம் கொண்டிருந்த விசால மான நிலப்பரப்பின் வடபுற மூலையில் தெரிந்த பழைய எட்டுக்கட்டு வீட்டின் மீது அவனுடைய கண்கள் பதிந்தன.

"சூரக்காட்டு இல்லம்!" - அவன் முணுமுணுத்தான்.

சூரக்காட்டு இல்லத்தைச் சேர்ந்த மாந்திரீகன் ரகசியமான மந்திரகர்மங்களை நடத்துவது, இல்லத்திற்குச் சொந்தமான இந்த சர்ப்பக்காவில்தான் என்று கேள்விப்பட்டிருந்தான். இதற்குள் பெரிய ஆலமரம் ஒன்று இருக்கிறதென்றும், விசாலமான அதன் அடிப்புறத்திண்ணைக்கு யக்ஷித்தரை என்று பெயர் என்பதும் அவனுக்குத் தெரியும்.

சர்ப்பக்காவிற்குள் நுழைந்து ஒரு தடவை அதைச் சுற்றிப் பார்த்துவிட வேண்டும் என்ற தீர்மானத்துடன் வந்தான். ஆனால், இந்த இடத்திற்கு வந்த பிறகு ஏனோ ஒருவிதத் தயக்கம் தோன்றியது.

சர்ப்பக்காவிற்குள் பாம்புகள் இருக்கலாம். அதற்குத் தான் பயப்பட வேண்டியதில்லை. எந்த ஒரு பாம்பும் தன்னைக் கடிக்காது.

துர்மந்திரங்களின் பிறப்பிடமான யக்ஷித் தரைக்குப் போனால் துர்த்தேவதைகளின் தொல்லை ஏற்படும் என்கிற பயமும் கிடையாது. மந்திரப் பிரம்பு தன் கையிலேயே உள்ளது. ஜகதீஸ்வரி தன் இதயத்தில் குடியிருக்கிறாள். இருப்பினும் உள்ளே நுழைய ஏனோ தயக்கம் தோன்றுகிறது. ஆள் நடமாட்டமில்லாத சுற்றுப்புறம். காவின் மரக்கிளைகளில் அமர்ந்திருந்த பறவைகள் எழுப்பும் குரல்கள் மட்டும் அவ்வப்போது கேட்டன.

"ஏன் தயங்குறீங்க? தாராளமா உள்ள வரலாமே" - அன்பு வழியும் கிள்ளைக் குரல் அழைப்பு. இதை எதிர்பாராத அவன் திடுக்கிட்டான். சர்ப்பக்காவின் உட்புறத்திலிருந்து பெண் குரல் ஒன்று கேட்டது. இளம்பெண்ணின் குரல்... அது யாராக இருக்கும்?

யாரானால் என்ன? மாந்திரீகன் பயப்படக்கூடாதே! அழைப்பை ஏற்றுக்கொள்ளாதிருப்பது கோழைத்தனம். காவிற்குள்

நுழைய வேண்டியதுதான. என்ன இருந்தாலும் அதற்கு முன்பாகப் பேசிய நபர் யாரென்று தெரிந்து கொண்டால் நல்லது அல்லவா?

"யாரது?" - அவன் உரத்த குரலில் கேட்டான்.

"வாசல்ல இருந்ததுட்டேவா ஆளைப் பார்க்க நினைக்கிறது? உள்ளே வர பயமா இருக்கா என்ன?"

"யாருக்கு... எனக்கா?" - குமாரன்தம்பி பிரம்பை இறுகப் பற்றிக் கொண்டு எதிர்க்கேள்வி கேட்டான்.

காவிற்குள் நுழைந்தான். ஒரு பெண்ணின் ரகசியக் குரலாலான தெளிவான சிரிப்புக் கேட்டது. ஆனால், உருவம் தெரியவில்லை.

"குமாரா!" - பழக்கமான குரல். ஊன்றிக் கவனித்தான்.

"குமாரா! நீ செய்வது எப்படிப்பட்ட ஒரு சாகசம்? பட்டேரியின் துர்மந்திரவாத மையத்திற்கு எதற்காக வந்தாய்? எப்படியிருப்பினும் உள்ளே வந்து விட்டாய். தேவியை மனமுருகி ஜபித்துக் கொள். நீ வடயக்ஷிணியின் வளையத்திற்குள் அகப்பட்டிருக்கிறாய்!"

பப்புமாமாவின் உபதேசம்! குமாரனின் உடல் சிலிர்த்தது. தேவியை மனத்தில் தியானித்தபடி யக்ஷிக்காவின் மந்திர மண்டபத்தை நோக்கி முன்னேறினான்!

# 18

பிரம்மாண்டமான ஓர் ஆலமரத்தின் முன்னால் வந்ததும் குமாரன்தம்பி நின்றான்.

ஆலமரத்தடித் திண்ணையில் குவிக்கப்பட்டிருந்த பொருள்களைப் பார்த்து மலைத்தான். கடுமையான துர்மந்திரப் பிரயோகம் நடத்தியதற்கான அடையாளங்கள்!



ஹோமகுண்டத்தின் நெருப்பு அப்போதும் முழுவதுமாக அணைந்திருக்கவில்லை. ஹோமகுண்டத்துக்குச் சுற்றும் இளநீர்த்துண்டுகள்,தர்ப்பை, மஞ்சள், சிவப்புப் பூக்கள், நெற்பொரிச் சிதறல்கள் போன்றவை கிடந்தன. பெரும்பாலும் முக்கால்வாசி எரிந்த தீப்பந்தங்கள்.

சித்தியையும் குழந்தைகளையும் கொன்று, தன்னைப் பயப்படுத்துவதற்காக, ரக்ஷஸை ஏவ, துர்த்தேவதைகளை ஆவாஹம் செய்வதற்கு பட்டேரி நடத்திய மந்திரப் பிரயோகங்களின் மீதப் பொருள்கள் - எச்சங்கள்! குமாரன்தம்பிக்கு அடக்க முடியாத கோபம் ஏற்பட்டது.

யக்ஷித்தரையில் சட்டென்று ஒரு சிருங்காரச் சிரிப்பு உயர்ந்தது. தொடர்ந்து ஏக்கம் தொனிக்கும் ஒரு கேள்வியும் பிறந்தது: "ஏன் அங்கயே நின்னுட்டீங்க? பக்கத்தில வாங்க!"

"அரூபியான நீ வடயக்ஷிணிதானே? என்னைப் பயப்படுத்துறது உன் நோக்கமா?" குமாரன் கேட்டான்.

"நானா அரூபி. இந்தப் பக்கம் கவனிங்க. அந்தப் பிரம்பை வீசி எறிஞ்சுட்டு இங்க வாங்க!"

இப்போது குமாரன்தம்பியால் அந்தப் பெண் உருவத்தை நன்றாகப் பார்க்க முடிந்தது. யக்ஷித்தரையின் மையப் பகுதியில் - ஆலமரத்தின் அடிப்பகுதியில் சாய்ந்து நின்று கொண்டு அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள் அந்த சுரசுந்தரி.

வடயக்ஷிணி பேரழகி என்பது தெரிந்த செய்திதான். நேராகப் பார்ப்பது இதுதான் முதல் தடவை. அப்படியானால் லக்ஷ்மிக் குட்டியின் மரணாந்திரப் பிறவியான யக்ஷியும் அழகாகத்தான் இருக்க வேண்டும். அவளை சரியாகக் கவனித்ததில்லை.

தங்கம் போன்ற அந்த உடலின் அழகான வடிவமைப்பு தன் இதயத்தில் சலனத்தை ஏற்படுத்துகிறது. வெற்றிலை போட்டுச் சிவப்பேறியிருந்த உதடுகளில் மலர்ந்திருக்கும் சிரிப்புக்கு என்ன ஒரு வசீகரம்! அவிழ்ந்து கிடக்கும் தலைமுடி தரையைத் தொட்டுக் கொண்டிருக்கிறது!

பெண்ணின் பிறந்தமேனி வடிவத்திற்கு இவ்வளவு அழகா? வடயக்ஷிணியின் பாம்பு போன்ற அழகை ரசித்த அவன் மற்ற எல்லாவற்றையும் மறந்து போயிருந்தான்.

"என்ன, என்னை உங்களுக்குப் பிடிச்சிருக்கா? வாங்க. இப்படி இந்த இடத்துக்கு வாங்க. நாம ஒண்ணாப் படுத்துக்கலாம்" இரண்டு கைகளையும் நீட்டி அழைப்பு விடுத்தாள்.

சுயநினைவை இழந்தவன் மாதிரி அவன் ஆல்தரையின் மீது ஏற முயன்றான்.

"கூடாது!" - யாரோ அதட்டும் குரலில் கட்டளையிடுவதுபோல் தோன்றவே கால்களைச் சட்டென்று பின்னுக்கு இழுத்தான். உடனேயே சுற்றுப்புறச்சூழல் புத்தியில் உறைத்தது. தன்னுள் இருக்கும் குரங்கு மனிதன், தன்னுள்ளே இருக்கும் மாந்திரீகனைச் சற்று நேரம் தடுத்து நிறுத்தி விட்டிருக்கிறான். மனத்தில் விருந்தாளியாக வந்த உன்மத்த போதையை சுயநினைவு அடித்து விரட்டியது இப்போதுதான்.

வடவிருட்சத்தின் முன்னால், வடயக்ஷிணியின் வளையத்திற்குள் நின்று கொண்டிருக்கிறோம். யோசித்துக் கொண்டே யிருப்பது ஆபத்தை வரவழைக்கலாம். மந்திரப் பிரம்பு கையிலிருந்து நழுவாததால் தான் யக்ஷிணியின் பிடியில் அகப்படாதிருக்கிறோம். எப்படிப்பட்ட யக்ஷிணியையும் சொற்படி நடக்கச் செய்யும் வல்லமை பொருந்திய ஜகதீஸ்வரியை - துர்க்கா பகவதியை - புவனேஸ்வரியை - ஸ்ரீலலிதாவை - பிரத்தியட்ச தேவதையான நாராயணியைத் தியானிக்க வேண்டியதுதான்.

மந்திரப்பிரம்பை இருகைகளாலும் இறுக்கிப்பிடித்து தேவி தியானத்தை ஆரம்பித்த குமாரன்தம்பி, பயங்கரமான அலறலைக் கேட்டுத் துரதிர்ஷ்டவசமாகக் கண்களைத் திறந்தான்.

அங்கு அவன் கண்ட காட்சி -

பேரழகியான ஒருத்தி நின்றிருந்த இடத்தில் பைசாசிகமான ஒரு பெண்ணுருவம் அலறியபடி ஆடிக்கொண்டிருந்தது. பயங்கரமான பெண் உருவம்! பிளந்த வாய்ப்பகுதியிலிருந்து



முன்புறமாக நீண்டு தொங்கியது ரத்த வண்ணம் கொண்ட நாக்கு. அருவருப்பை ஏற்படுத்தும் கோரைப் பற்கள். பயததை அதிகரிக்கச் செய்யும் வட்டமான கண்கள். கூர்மையான மூக்கு. பலாப்பழங்களைப் போன்ற பெரிய ஸ்தனங்கள். அவிழ்ந்து கண்டபடி கலைந்து கிடக்கும் தேங்காய் நார் போன்ற தலை முடி. தொப்பை விழுந்த வயிற்றுப் பகுதி. உயரம் குறைந்த கால்கள். முழு நிர்வாண நிலையில் தென்படும் ஒரு தூர்த்தேவதை. நிர்வாணத்திற்கு மனத்தைப் புரட்டும், குமட்டும் விகாரத் தன்மை உள்ளது என்பதை நிரூபிக்கும் நிதரிசனம்.

சில சந்தர்ப்பங்களில் கட்டுடல் கொண்ட பேரழகியாகத் தோன்றியும் மற்றும் சில சந்தர்ப்பங்களில் விகாரவடிவம் கொண்ட ராக்ஷஸியாகவும் வெளிப்படும் துர்த்தேவதைதான் யக்ஷி என்பது அவன் நினைவுக்கு வந்தது.

உடனேயே கண்களை மூடிக்கொண்ட அவன் தேவி ஸ்தோத்திரத்தை உரத்த குரலில் உருப்போடத் தொடங்கினான்:

*விஸ்வவியாபகவாரி மத்ஸவிலஸ -*
*ச்சேதாம்புஜன்மஸ்திதாம்*
*கர்த்ரீம்கள்ககபாலநீலநளினை -*
*ராஜத்கராம் நீலபாம்,*
*காஞ்சீகுண்டலஹாரகங்கணலஸத் -*
*கேயூர மஞ்ஜீரதா -*
*மாதைப்ன்னாக வரைர் விப்ரஷிதனும்*
*சாரக்த நேத்ர த்ரயாம்;*
*பிங்கோக்ரை கஜடாம் லஸத்ஸ்யரசநாம்*
*தம்ஷ்ட்ரா கராளனனாம்*
*சர்மத்வைபிவரம் கடௌநிததீம்*
*ஸ்வேதாஸ்தி பட்டாளிகாம்*
*அக்ஷோப்யேன விராஜமானசிரஸம்*
*ஸ்மரோ ன்னாம் போருஹம்*
*தாராம் சாவக்ருதாஸனாம் த்ருடகுசா -*
*மம்பாம் த்ரீலோக்யா ஸ்மரேத்:*

*ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹௌம் ஃபட்*
*ஹ்ரீம் ஸ்ரீம் ஹௌம் ஃபட்*
*ஹ்ரீம் ஸ்ரீம் ஹௌம்*

தாரா ஸ்துதியையும், மந்திரஜபத்தையும் நீண்ட நேரம் நடத்திய பிறகு கண்களைத் திறந்தான்.

முற்றிலுமாகச் சாந்தமடைந்திருந்தது சுற்றுப்புறம். யக்ஷித் தரை சூனியமாக இருந்தது.

வடயக்ஷிணி எங்கு போய் மறைந்தது? அவன் யோசித்தான். சர்வேஸ்வரியான பகவதியின் சாந்நித்தியத்தைப் பார்த்துப் பயந்து அவள், வடவிருக்ஷத்தின் மீதுள்ள தன் இருப்பிடத்திற்குச் சென்றிருக்கலாம்.

பட்டேரியின் ஆராதனா மூர்த்தி வடயக்ஷிணி என்பது இப்போது புரிந்தது. தன்னுடைய இஷ்ட தேவதையான தேவியின் முன்பாக வடயக்ஷிணி செயல்பட முடியாதென்பதும் தெளிவாகி உள்ளது. இனி வீட்டிற்குப் புறப்படலாம். வந்த வழியே திரும்பத் தொடங்கினான்.

பத்துத் தப்படிகள் எடுத்து வைத்திருப்பான். அதற்குள் அவனுக்குச் சுற்றும் தீப்புகை உயர்ந்து சூழ்ந்தது. எங்கும் அடர்த்தியான புகை. புகைப்படலத்திற்குள் சிக்கிக் கொண்டபோது மூச்சுத் திணறியது.

இது எந்தத் துர்த்தேவதையின் வேலை! தூமாவதியா? வார்த்தாளியா? சின்னமஸ்தாவா? எவருடைய வருகையின் அடையாளம் இது!

விரைவிலேயே புகை தணிந்து மறையத் தொடங்கியது. அவனுக்கு முன்பாக ஒரு பெண்ணின் உருவம் வெளிப்பட்டது. தீப்பொறி பறக்கும் கண்கள். குரூரமும், தளர்ச்சியும் நிறைந்த முகத்தின் சதைப்பகுதிகள் அசைந்தன. கரிக்கட்டை நிறமுள்ள கனமற்ற உடலிலிருந்து அப்போதும் புகை வெளிப்பட்டுக் கொண்டிருந்தது.

புகையாகத் தொடங்கி ஒரு பெண்ணுருவில் பேய்க் கோலமாக வெளிப்பட்டிருக்கும் இது எந்தப் பிசாசினி?



"முன்னாலிருந்து விலகி நில்" - அவன் கட்டளையிட்டான்.

"எனக்குப் பசிக்கிறது. உன்னை நான் எரித்துச் சாம்பலாக்கிவிடுவேன். நான் தூமாவதி!" அலறியபடி அவள் பாய்ந்து அவனை நெருங்க முயன்றாள்.

தைரியத்தைக் கொஞ்சமும் இழக்காமல் முதலில் தேவியையும் பிறகு ஹனுமானையும் தியானித்தவன் தன்னைச் சுற்றிப் பிரம்பினால் ஒரு வட்டம் வரைந்துவிட்டுக் கூறினான்: "உனக்குச் சக்தியிருந்தால் என் அருகில் வா பார்க்கலாம்."

"நீ எதற்காக என் தாவளத்துக்கு வந்தாய்?" அலறியபடி தூமாவதி கேட்டாள்.

"பட்டேரியைச் சார்ந்தவர்களையெல்லாம் ஒரு தடவை பார்க்க வேண்டுமென்று தோன்றியது."

"சரி... அப்படியானால் நீ இங்கிருந்து திரும்பிப்போகப் போவதில்லை. எவ்வளவு நேரம் நீ அந்த வட்டத்திற்குள்ளேயே நின்றுகொண்டிருப்பாய் என்று பார்த்து விடுகிறேன்!"

"வட்டம் வரைந்தது தற்சமயப் பாதுகாப்புக்காகத்தான். நான் மந்திரஜபத்தை ஆரம்பித்துவிட்டால் நீ ஓடிப் போய் விடுவாய். நானும் என் பாட்டுக்குப் போய்விடுவேன். அதையும் பார்க்கிறாயா?"

குமாரன்தம்பி கண்களை மூடி ஹனுமான் மந்திரங்களை ஜபிக்கத் தொடங்கினான். தன் உடல் பெரியதாகிக் கொண்டிருப்பதாகவும் பலம் அதிகரிப்பதாகவும் அவனுக்குப் புலப்பட்டது.

ஒரு தடவை முன்புறமாகக் குதிக்க வேண்டுமென்று தோன்றியது. சட்டென்று துள்ளிக் குதித்தான். அதே தூரத்துக்கு அதே விரைவில் தூமாவதியும் பின்புறம் பாய்ந்தாள்.

அவன் மீண்டும் குதித்தான். அதே அளவு தூரம். தூமாவதியும் விரைவாகப் பின்வாங்கினாள்.

"ஓகோ உனக்கு என்னைவிட்டுப் போவதாக உத்தேசம் இல்லையா? உன்னை விரட்டியடிக்க முடியுமா என்று நானும்

பார்க்கிறேன்" -முன்னறிவிப்பு தந்த பிறகு அவன் தேவியை ஸ்துதி செய்தான். மந்திரங்களை ஜபிக்கத் தொடங்கினான்.

"ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் ஹூம் ஃபட்"

தொடர்ந்து பக்திபூர்வமாக இதே மந்திரத்தை உருவிட்டுக் கொண்டிருந்தான்.

இரக்கத்துக்குரிய ஓர் அலறல் உயர்வதைக் கேட்ட பிறகும் குமாரன்தம்பி மந்திரஜபத்தை நிறுத்தவில்லை. கண்களைத் திறக்கவும் இல்லை.

பயந்து அலறிய தூமாவதி புகையாக மாறினாள். அந்தப் புகையும் சட்டென்று மறைந்தது.

தியானத்திலிருந்து விடுபட்ட குமாரன்தம்பி கண்களைத் திறந்தான். எல்லாமே அமைதியாகிவிட்டிருந்தன.

அவன் மீண்டும் நடக்கத் தொடங்கினான். சர்ப்பக்காவிலிருந்து வயல் வரப்பிற்குள் காலெடுத்து வைப்பதற்கு முன்பாக 'இன்னும் வேறு எந்தெந்த துர்த்தேவதைகளைச் சந்திக்க வேண்டியிருக்குமோ?' - என்று நினைத்தபடி நடந்தான்.

வரப்பு மீது காலை எடுத்து வைத்தபோது பின்னாலிருந்து குரல் கேட்டது. அவன் திரும்பிப் பார்த்தான். கொடூரம் நிறைந்த முகத்துடன் உயரம் குறைவான ர ாமன் பட்டத்திரி நின்று கொண்டிருந்தார். துர்மந்திரவாதியும் தீயவனுமான ராமன் பட்டத்திரி!

"புத்தூர் மந்திரீகனுக்கு இப்படியொரு கண்ணாமூச்சு விளையாட்டு தேவைதானா. நீ எதுக்காக இங்க வந்த?"

மௌனமாக நின்று கொண்டிருந்த குமாரன்தம்பியையே ஊன்றிக் கவனித்த பட்டத்திரி தொடர்ந்தார்: "கருட மந்திரங்களும், தேவி மந்திரங்களும் பலிக்காமல் போகும் ஒரு காலகட்டமும் வரும் என்பது உன் நினைவில் இருக்கட்டும். எச்சரிக்கையோடு இருப்பதுதான் உனக்கும் நல்லது."



"நீங்க என்னைப் பயப்படுத்துறீங்களா?" - குமாரன்தம்பி குரலை உயர்த்திக் கேட்டான்.

"உன்னைப் பயப்படுத்துறது மட்டுமில்ல என்னோட லட்சியம். உன்னோட மாந்திரீக ஸித்திகளையும், உன் தறவாட்டு மாந்திரீகப் பாரம்பரியத்தையும் அழிப்பேன். கருட சேவையைத் தவிர வேறு எந்தவிதமான மந்திரகர்மங்களையும் செய்ய மாட்டேன் என்று நீ உறுதியளித்தால், உன்னை சும்மா விட்டுவிடுகிறேன்."

"கருடபகவானையும் தேவியையும் ஹனுமானையும் நான் சேவிப்பேன். உன்னுடைய துர்த்தேவதைகள் மொத்தப் பேரையும் பந்தனம் செய்வேன். உன்னைப் பைத்தியக்காரனாக்குவேன். இது என் பித்ருக்களின் மீது ஆணை!" - வலது கையிலிருந்த மந்திரப்பிரம்பை உயர்த்தியபடி குமாரன்தம்பி சபதம் செய்தான்.

ராமன் பட்டத்திரி உரத்த குரலில் வாய்விட்டுச் சிரித்தார். உடல் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.

அவரை வெறுப்புடன் பார்த்துவிட்டு குமாரன்தம்பி வயல் வரப்பின்மீது வேகமாக நடந்தான். அவனுடைய இதயத்தில் பழிவாங்கும் உணர்வு நுரைத்துப் பொங்கியது.

புதியதொரு சக்தி, புதியதோர் ஆவேசம், இதுவரை தோன்றாத புத்துணர்வு. அவனது நடையின் வேகம் அதிகரித்தது.

வீட்டின் கிழக்குப்புற முற்றத்தில் அவனை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தார் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி. அவருடைய முகத்தில் தெரிந்த சோகத்தைக் கண்ட குமாரன்தம்பி கேட்டான்: "என்னம்மா?"

"உனக்காகத்தான் காத்திருக்கிறேன் குமாரா... நாம குமாராசாரின் வீட்டுக்குப் போகணும். நாணிக்குட்டி அங்க போயிருக்கிறா."

"ஏன், என்ன விஷயம்?"

"குமாராசார் இறந்துட்டார். இரண்டு நாழிகைக்கு முன்னால தான்" - குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் கண்கள் நீரால் நிறைந்தன.

"வஞ்சகத்தோட முடிவு!" குமாரன்தம்பி ஒரு பெருமூச்சுடன் சொன்னான்.

# 19

குமாரசாரின் உடல் தகனம் முடிந்தபோது நேரம் நள்ளிரவைத் தாண்டிவிட்டது. கணவனை இழந்த நோயாளி மனைவியான கார்த்தியாயினியும், தந்தையைப் பிரிந்த நாணிக்குட்டியும் அப்போதும் உரத்த குரலில் கதறியழுது கொண்டிருந்தனர்.

ஆறுதல் கூறி தாயையும் மகளையும் சமாதானப்படுத்திய பிறகு குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி, குமாரன்தம்பியுடன் புத்தூர் வீட்டிற்குத் திரும்பினார்.

"சீக்கிரமா குளிச்சிட்டு வந்து விளக்கேத்து குமாரா" - வீட்டிற்கு வந்ததும் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி மகனிடம் கூறினார்.

கிழக்குக் குளத்தில் மூழ்கிக் குளித்துவந்த குமாரன்தம்பி பூஜையறை வாயிற்படியில் விளக்கேற்றினான்.

அன்றைய சந்தியாவந்தனம் தடைப்பட்டுப் போனதில் அவனுக்கு வருத்தம் தோன்றியது. மாலை நேரத்தில் கொட்டாரத்திலும் விளக்கேற்ற முடியாமற் போனது. சமாதிமாடங்களுக்கு முன்பாகத் தீபமேற்றுவது இன்று முதல் முறையாகத் தடைப்பட்டிருக்கிறது. இந்த நேரத்திற்கு மேல் அங்கு சென்று அந்தச் சடங்குகளைத் தொடர்வதிலும் அர்த்தமில்லை.

மொத்தத்தில் இன்று அமங்கலமான ஒரு நாள். காலையில் சித்தியுடன் கொச்சு புத்தூர் வீட்டிற்குச் சென்று திரும்பி வரும்போது, சூரக்காட்டு இல்லத்திற்குச் சொந்தமான காவிற்குச் செல்ல வேண்டுமென்று தோன்றியதே தன் போதாத வேளையால்தான்.



பட்டேரியின் மாந்திரீக ரகசியங்களைப் புரிந்துகொள்ளவும் யக்ஷிக்காவு என்ற பெயரில் அழைக்கப்படுகிற சர்ப்பக்காவில் உள்ள மந்திர மண்டபத்தை நேரடியாகப் பார்க்கவும் ஆசை தோன்றியது. எதிராளியின் கோட்டைக்குள் நுழைய வேண்டுமென்கிற சாகச உணர்வு மனத்தில் மேலெழும்பியிருந்தது.

அதனால் வடயக்ஷிணி மற்றும் தூமாவதியுடன் மோத நேர்ந்தது. பட்டேரியுடன் விவாதம் செய்ய நேர்ந்தது. அவரது பகையுணர்வு இப்போது பல மடங்கு உயர்ந்திருக்கும்!

மாலை நேரத்தில் நடத்த வேண்டிய கருடத் தியானமும் தடைப்பட்டது. ஒவ்வொரு நாளும் குறைந்த பட்சம் இரண்டு தடவையாவது கருட மந்திரங்களை ஜபிக்க வேண்டுமென்பது தவறவிடக்கூடாத அனுஷ்டானம். அதை இப்போது வேண்டுமானாலும் செய்யலாம். ஆனால், மனத்தில் ஏதோ ஒரு நிம்மதியின்மை. தியானத்தில் ஈடுபடுவதற்குரிய மனநிலையில் இப்போது தான் இல்லை.

"என்ன குமாரா, இன்னிக்கு இனிமேல் ஜபமெல்லாம் கிடையாதா?" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கேட்டார்.

குற்றவுணர்வுக்கு ஆளான, குமாரன்தம்பி நீர் நிறைந்த கிண்டி, இலைத்துண்டில் திருநீறு ஆகியவற்றை எடுத்துக் கொண்டு பூஜையறை வாசலில் கருடத் தியானத்தைத் தொடங்கினான்.

கிணற்றடியில் குளியல் என்கிற சடங்கை மின்னல் வேகத்தில் நடத்திய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வீட்டிற்குள் நுழைந்தபோது பார்த்த காட்சி, மகன் ஒற்றைக்காலில் நின்று தியானம் செய்வதைத்தான். அவர் கிழக்குப்புறத் தளத்தில் இருந்தபடி மகனது தியானத்தை ஆழ்ந்து கவனித்தார்.

குமாரன்தம்பி தியானத்தை முடித்துவிட்டுக் கிழக்குப் புறத் தளத்தைப் பார்த்தான். அம்மா வெறும் தரையில் சுருண்டு படுத்தபடி உறங்கிவிட்டிருந்தார்.

"அம்மா, எழுந்து ஊஞ்சல்ல போய்ப் படுத்துக்கங்களேன்" - அவன் அம்மாவை எழுப்பினான்.

"நீ சாப்பிடலையா குமாரா?" தூக்கக் கலக்கத்துடன் அவர் கேட்டார்.

"ஒண்ணும் வேண்டாம் அம்மா!"

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வடக்குப்புற அறைக்குப் போனார். குமாரன்தம்பி தென்புற அறைக்குப் போனான்.

சப்ரமஞ்சத்தில் நீட்டி நிமிர்ந்து படுத்துக்கொண்ட குமாரன் தம்பியால் உறங்க முடியவில்லை. கண்கள் மூடத் தொடங்கும் போது மனம், சிந்தனைகளுடன் நட்புக் கொள்ளத் தொடங்கியது. நெறிதவறிய மனத்தின் போக்கை எதிர்த்து உறக்கம் கோபம் கொண்டது.

குமாரன்தம்பி தர்மசங்கடத்தில் சிக்கித் தவித்தான். நன்றாக உறங்கி எத்தனையோ நாட்களாகி விட்டன. பெரும்பாலான இரவு களில் தூக்கத்தை இழந்தது மந்திரங்களை மனப்பாடமாக்கவும், மந்திர ஸித்தியடைவதற்கு வேண்டிய கர்மானுஷ்டானங்களுக் காகவும்தான். அதில் உள்ள ஒரே ஒரு ஆறுதல், கடுமையான உழைப்பிற்கேற்ற பலன் கிடைத்திருப்பதுதான்!

முக்கியமான மந்திரங்களை மனப்பாடம் செய்தாகிவிட்டது. ஆராதனா மூர்த்திகள் காட்சியளிக்கவும் செய்கின்றனர். அதனுடைய மற்றொரு நிருபணம்தான் ரக்ஷஸின் வரவை முன்கூட்டியே தெரிந்து கொள்ள முடிந்ததும். ரக்ஷஸை ஆவாஹம் செய்ய முடிந்ததுகூட மந்திரஸித்தியின் பலனால்தானே! ஒரேயொரு சிறு தவறு மூலம் அந்த ரக்ஷஸ்ஸ் மறைந்து போனது. அவ்வளவுதான்!

இன்றைய அனுபவங்கள் தெரிவிப்பது என்னவென்றால், தன் மாந்திரீக ஸித்திகள் நிரந்தரமானவை என்பதைத்தான்.

வடயக்ஷிணியின் இருப்பிடத்திற்கே சென்று, அந்த உக்கிர ரூபினியை அடக்கி நிறுத்த முடிந்தது. தூமாவதி என்கிற பயங்கரத் தேவதையை அடிபணிய வைத்தாகி விட்டது. ராமன் பட்டத்திரி தன்னோடு வன்மத்தை வளர்த்து, பயப்படுத்தினார். இருப்பினும் அவருக்குத் தன்மீது பொறாமை கலந்த மரியாதை தோன்றியிருக்க வேண்டும்.



குமாராசாருடைய மரணம் எதிர்பாராத ஒன்று. நேற்று இரவு அவருக்கு ஏற்பட்ட நரக வேதனைதான் இவ்வளவு சீக்கிரமாக அவரை மரணத்தின் பிடிக்குள் தள்ளிவிட்டிருக்கும்.

குற்றம் கண்டுபிடிக்கப்பட்டதுமே குமாராசார் மனத்தளவில் சோர்ந்து போனார். மனஉளைச்சலுடன் தன்னிடமிருந்து அடி உதையும் பெற நேரிட்டது. வெகு நேரம் இருளடைந்த நிலவறைக்குள் பயத்தின் குரூரமான தாக்குதலுக்கும் ஆளாக வேண்டியிருந்தது. அந்த நிலையிலேயே அவர் நடைப்பிணமாக மாறிவிட்டார். விடிவதற்குச் சற்று முன்பாக வீட்டை அடைந்து படுக்கையில் படுத்த குமாராசார், மதியத்திற்கு முன்பாக பரலோகப் பிராப்தி அடைந்தார்.

இரண்டு வருட காலமாக மனநோயாளி என்ற பெயரில் அலைந்த குமாராசார், சூரக்காட்டுப் பட்டேரியின் கையாளாகப் பணிபுரிந்து கொண்டிருந்த உண்மை இப்போதுதான் வெளியாகி உள்ளது.

தன்னையும் தனது குடும்பத்தையும் அடியோடு தரை மட்டமாக்க நினைக்கும் பட்டேரியின் துர்மந்திரப் பிரயோகங்களுக்கு இதுவரை கூட்டாளியாக இருந்திருக்கிறார், இந்தப் புத்தூர் தறவாட்டின் நெடுநாள் ஊழியராக இருந்த குமாராசார்!

குமாராசாரை குற்றங்கூறிப் பயனில்லை. தனது சொந்த மகளின் அகால மரணத்திற்கு, தெரிந்தோ தெரியாமலோ சூழலை ஏற்படுத்தித் தந்தவனிடம் ஒரு தகப்பனாருக்கு வெறுப்பு ஏற்படுவது இயல்புதான். வெறுப்பு வைராக்கியமாகவும், வைராக்கியம் பகையாகவும் மாறும். பகை என்றான பிறகு, பழி வாங்குவதற்கான சந்தர்ப்பத்தைத் தேடிச் செல்வதும் அதிசயத்துக்குரிய காரியமில்லை.

குமாராசாரின் இளைய மகளான லக்ஷ்மிக்குட்டியிடம் மட்டுமா தான் தவறு செய்தோம்? அவருடைய மூத்த மகளின் வாழ்வைப் பாழாக்கியதும் தானேதான்!

பார்வைக்கு அழகாக உள்ள நாணிக்குட்டிக்கு எத்தனையோ நல்ல வரன்கள் கிடைத்தார்கள். பணமோ, சொத்தோ எதுவும் தேவையில்லையென்று சொல்லிக் கொண்டு பணக்கார வீடுகளிலிருந்துகூட நாணிக்குட்டியைத் திருமணம் செய்யத் தேடி வந்தனர். ஒவ்வொருவரிடமும் ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி அவள் அவர்களையெல்லாம் தவிர்த்துக் கொண்டே வந்தாள். அவளுடைய எதிர்காலம் தன்னிடம் பத்திரமாக ஒப்படைக்கப்பட்டிருப்பதாகக் கனவுகள் கண்டிருந்தாள்.

தன் வாக்குறுதியை நம்பி தன்னிடம் அடைக்கல மாயிருந்தவள் வெள்ளை உள்ளம் கொண்ட நாணிக்குட்டி. தான் ஒரு மாந்திரீகனாகி விடுவோம் என்று அவள் வேடிக்கையாகக்கூட நினைத்திருக்க மாட்டாள். தானும் அப்படி நினைத்ததில்லை! எல்லோரையும் வியப்பிலாழ்த்திவிட்டு, பப்புமாமா தனக்கு மந்திரோபதேசம் செய்தார். இதில் ஏமாற்றப்பட்டவள், அப்பாவியான நாணிக்குட்டி!

புறம்பான வழிகளில் கண்டபடி உளைந்து திரிந்து நெறிகெட்டலைந்த தான் மாந்திரீக வேடமணிந்தபோது, அதுவரை தட்டுப்பட்டிராத நல்ல பாதையொன்று கண் முன்பாகத் தெரிந்தது. அந்த வழியிலேயே வாழ்க்கையைச் செலுத்து என்று மனமும் கட்டளையிட்டது. அனாசாரமாக அலைந்து திரிந்த தான், ஆசாரம் நிறைந்த பர்ணசாலைக்குள் வலது காலெடுத்து நுழைந்தோம்.

மாந்திரீகத் தீக்ஷை பெற்ற வினாடியிலிருந்து பிரம்மச்சரியத்தை இறுகப் பற்றிக்கொண்டோம். கடந்தகால வாழ்க்கை இன்று வெறும் பழங்கதையாகிப் போனது!

கருட பக்தனுக்குப் பெண்தொடர்பு கூடாத ஒன்று. தேவிதாசனுக்கு பிரம்மச்சரியமே ஒரு தவம்தான், ஹனுமான் சேவையின் உயிர்நாடியே நைஷ்டிகப் பிரம்மச்சரியம்தான்.

புத்தூர் தறவாட்டைச் சேர்ந்த மாந்திரீகர்கள் எல்லோரும் நித்திய பிரம்மச்சாரிகளாகவே இருந்துள்ளனர். சாத்வீகர்களாகவும், பரம பக்தர்களாகவுமே விளங்கினர். அவர்களது காலடிச் சுவடுகளைப் பின்பற்ற முயற்சி செய்கிறோம். இருந்தும் சில சந்தர்ப்பங்களில் மனத்தின் உறுதி சில இடங்களில் இளகவே செய்கிறது.



மாந்திரீகனான பிறகும் நாணிக்குட்டியின் முன்பாகப் பலவீனமடையத் தொடங்கினோம். வேறு வழி இல்லாத சூழ்நிலையில், மனம் நொந்து கருட பகவானை அழைத்தோம். நாணிக்குட்டியைத் தண்டிப்பதற்காகப் பாய்ந்து வந்த கிருஷ்ணப் பருந்து தன் மனத்தையும் கட்டுப்படுத்தியது.

மீனாக்ஷியும் சில நேரங்களில் நினைவில் எழுந்தாள். அவளுடனான தொடர்பு இவ்வாறு துண்டிக்கப்படும் என்று ஒருபோதும் நினைத்ததில்லை. ஒரு தடவை அவள் கேட்டாள்:"குமாரன்தம்பி, பப்புத்தம்பித் தம்புரானின் வாரிசு இல்லையா? நாளைக்கு ஒரு மந்திரவாதியாகிட்டால் என்னை விட்டுப் பிரிய வேண்டியிருக்குமே?"

"நானா? இந்த மாதிரியெல்லாம் நடந்துகொள்ளும் எனக்கு பப்புமாமா மந்திரோபதேசம் செய்வாரா? அது ஒரு போதும் நடக்காது!" -உறுதியுடன் பதில்ளித்தோம்.

அவளுடனான நெறிமுறையற்ற உறவு எத்தனையோ வருடங்களாகத் தொடர்ந்து கொண்டிருந்தது! அவளுடைய கணவன் கோபாலனுடன் சேர்ந்து கஞ்சா புகைத்து, அதன் பிறகு அவளுடன் அவளுடைய கட்டிலில் சுகம் பெறுவது! இதுதானே வழக்கமாக இருந்தது!

மந்திரவாதியான பிறகு சுப்ரமண்யசாமி கோயிலுக்கு ஒரு தடவையோ, இரண்டு தடவையோ போயிருக்கிறோம். முன்பெல்லாம் தினமும் கோயிலுக்குப் போவதுண்டு. இப்போது அந்தப் பக்கம் போவதற்கே பயமாக உள்ளது. கோயிலில் நெல்குத்தும் மீனாக்ஷியை நேரில் பார்க்க நேர்ந்தால் தன் மனம் தடம்புரண்டு விடுமோ என்கிற பயம் தன்னைவிட்டு விலகவே இல்லை.

மனக்கட்டுப்பாட்டின் கயிறு அறுந்துபோனால் ஆபத்தாகி விடும். மாந்திரீக ஸித்திகள் கையைவிட்டுப் போய்விடலாம்!

இன்றும் அப்படியொரு ஆபத்து நிகழவிருந்தது. சூரக்காட்டு யக்ஷிக்காவில் வடயக்ஷிணியின மோகினி வடிவத்தை எதிரில் பார்த்தபோது தன்னையே மறந்து விட்டோம். பெண்மையின் அழகில் மனம் பிரமிப்பிலாழ்ந்தது. போதாக்குறைக்கு யக்ஷிணியின் சகசயன வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளும் நிலைக்குத் தான் வழுக்கி விழவும் செய்தோம். நல்லவேளையாக விவேகம் துணைக்கு வந்திருக்காவிட்டால், தான் ஆபத்தின் நிலையற்ற ஆழத்திற்குள் அமிழ்ந்து போயிருப்போம்.

யக்ஷியுடன் உடலுறவு கொண்டால் அது பிரம்மச்சரிய விரதத்தைப் பாதிக்காது என்று வாதிடும் மாந்திரீகர்களும் இருக்கிறார்கள். ஆனால், யக்ஷியுடன் தொடர்பு கொள்ளும் ஒரு மாந்திரீகன் தேவியுடனான பக்தித் தொடர்பைத் துண்டித்துக் கொள்ள வேண்டியதாகி விடும். இறுதியில் அவன் துர்மந்திரவாதியாகி அழியவும் நேரும்.

துர்மந்திரவாதிகளுக்கு பிரம்ச்சரியம் ஒரு பிரச்சினையே அல்ல. சூரக்காட்டு ராமன் பட்டத்திரி திருமணமானவர். சரியான பெண் பித்தரான அவருக்கு அந்தர்ஜனத்தை (வீட்டை விட்டு வெளியேறாத அவரது மனைவி. நம்பூதிரிப் பெண்களை மற்றவர்கள் யாரும் பார்க்கக் கூடாது என்பதால் இந்த முறை பழங்காலத்தில் கடைப்பிடிக்கப்பட்டது.) தவிர நாயர் ஜாதி மனைவியும் உண்டு. இதற்கும் மேலாக வசியப் பிரயோகங்கள் செய்து பெண்களை வளைப்பதும் உண்டு.

துர்த்தேவதைகளை உபாசனை செய்யும் மாந்திரீகன் நேர்மையான வழியில் நடக்க வேண்டும் என்றோ, ஆசாரங்களைக் கைக் கொள்ள வேண்டுமென்றோ கிடையாது. ஆனால், தன் விஷயம் அப்படிப்பட்டதல்ல. தான் ஒரு துர்மந்திவாதியல்ல!

தன்னிடமுள்ள ஏட்டுச்சுவடிகளில் ஐந்தாவதான சுவடி துர்த்தேவதைகளை உபாசிக்கும் மந்திரங்களைக் கொண்டது. அதை வெறுமனே ஒரு தடவை புரட்டியதைத் தவிர மந்திரங் களையோ, அவற்றைப் பிரயோகிக்கும் வழி முறைகளையோ



சிரத்தையுடன் படித்து மனப்பாடம் செய்யவில்லை. அப்படி எந்த ஒரு துர்த்தேவதையையும் மகிழ்ச்சிப்படுத்தி ஸித்தி பெறவும் முயற்சி செய்யவில்லை. தன்னுடைய முன்னோர்களில் எவருமே துர்த்தேவதைகளை உபாசிக்கவோ, துர்மந்திரவாதம் செய்ததோ இல்லை. அப்படிப்பட்ட மந்திரங்களையும், அவற்றைச் செய்யும் முறைகளையும் அவர்களும் தெரிந்து வைத்திருந்தார்கள். அவ்வளவுதான்.

பொழுதுவிடிய நேரம் அதிகம் இருப்பதாகத் தோன்றியது. யோசனைகளின் நெரிசலில் சிக்கி மோதலும் அடியும் பட்டுக் கொண்டிருந்தது நிலையில்லாத மனம்.

வெப்பமடைந்த மனத்தை அமைதியின் கோயிலுக்கு அழைத்துச் செல்ல ஒரே ஒரு வழிதான் இருந்தது-அதுதான் பிரார்த்தனை.

ஆனந்தலஹரி (போதை) எனப்படும் 'சௌந்தரிய லஹரி' மாந்திரீகர்களின் புதையல். மந்திர முக்கியத்துவம் வாய்ந்ததும் கூட. அதனுடைய வரிகள் சிலவற்றை உருப்போட்டால் மனம் நிர்மலமாகி விடும்.

*சிவ: சக்த்யா யுக்தோ*
*யதி பவதி சக்த: ப்ரபவிதும்*
*நசே தேவம் தேவோ நகலு*
*குசல: ஸ்பந்திதுமபி*
*அதஸ்த்வா மாராத்யோம் ஹரிஹர-*
*விரிஞ்சா திபிரபி*
*ப்ரணந்தும் ஸ்தோதும் வாகதமக்ருத*
*புண்ய: பிரபவதி*
... ... ... ...
... ... ... ...

குமாரன்தம்பி சுகமான தூக்கத்தில் ஆழ்ந்தான்.

# 20

புத்தூர் தறவாட்டின் முக்கியமான உறவுக்கிளைதான், அந்த வீட்டையொட்டி வடக்குப்புறத்தில் அமைந்த களீக்கல் வீடு. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் பெரியம்மா மகளான பார்வதி தங்கச்சியும், அவரது குழந்தைகளும் அங்கு வசிக்கிறார்கள்.

பார்வதி தங்கச்சிக்கு நான்கு குழந்தைகள். குமாரன்தம்பியின் வயதொத்த சேகரன்தம்பி, அவனுக்குக் கீழே மூன்று பெண்கள்.

சகோதரிகளைக் கௌரவமான முறையில் திருமணம் செய்து கொடுத்த சேகரன்தம்பி, கல்யாணம் செய்து கொள்ளாமல் காலம் கழிப்பவன். அம்மாவும், சகோதரிகளும் அவர்களுடைய கணவர்களும் குழந்தைகளும் அவனுடைய பாதுகாப்பில் ஒரே குடும்பமாக களீக்கல் வீட்டில் வசிக்கின்றனர். நிர்வாகப் பொறுப்புகளை மாப்பிள்ளைகளிடம் ஒப்படைத்துவிட்டு சேகரன்தம்பி குடும்பத்தலைவன் என்ற முறையில் எல்லாவற்றையும் மேற்பார்வை செய்கிறான்.

சிறுவயதிலிருந்தே தேர்ந்த கடவுள் நம்பிக்கையுடன் வளர்ந்த சேகரன்தம்பியின் வாழ்க்கை லட்சியமே தறவாட்டு மாந்திரீகனாவதுதான். பப்புத்தம்பி சொந்த மருமகனான குமாரன் தம்பிக்கு மந்திரோபதேசம் செய்து வைத்ததுடன் சேகரன்தம்பியின் அந்த விருப்பமும் நிறைவேறாமற்போனது.

இந்த விஷயத்தில் சேகரன்தம்பியைவிட அதிகமாக வருத்தப்பட்டவர் பார்வதி தங்கச்சிதான். பரம்பரை மாந்திரீக என்கிற பதவிக்கு எல்லா வகையிலும் யோக்கியதை நிரூபித்து பெற்ற தன் மகனைப் புறக்கணித்துவிட்டு, சொந்த மருமகன் என்கிற ஒன்றை மட்டும் மனத்தில் கொண்டு எல்லா வகையிலும்



மோசமான நடவடிக்கைகளை உடைய குமாரன்தம்பிக்கு மந்திரோபதேசம் நல்கிய பப்புத்தம்பியின் செயலை இந்தப் பரம்பரைக்குச் செய்த துரோகமாகவே அவர் கருதினார்.

இதையெல்லாம் யாரிடம் முறையிட? மருமகனை மாந்திரீகனாக மாற்றிய அன்றே மாமா இறக்கவில்லையா? குடும்பத்தின் பொதுச்சொத்தான கொட்டாரம் மற்றும் உடைமைகளை, தனது சொந்தச் சகோதரியின் மகன் வசம் ஒப்படைக்க வேண்டும் என்கிற தீர்மானத்தின் விளைவால் பப்புத்தம்பி இப்படி விவேகமற்று நடந்து கொண்டார் என்று பார்வதி தங்கச்சி நம்பினார். அத்துடன் இந்தப் பரம்பரையின் வேறு ஒரு கிளையைச் சேர்ந்த யாரும் 'மாந்திரீகப் பதவி' வகித்து விடக்கூடாது என்கிற கெட்ட எண்ணமும் மற்றொரு காரணம்.

குமாரனுடைய காலத்திற்குப் பிறகு அந்த மாந்திரீகப் பதவியை ஏற்கத் தன் மகனால் முடியும் என்று தோன்றவில்லை. சேகரன் உயிர் வாழ்ந்திருந்தாலும் அது நடக்கப் போவதில்லை. மரணம் நெருங்குகிறது என்று தெரிந்தவுடன், குமாரன் தன்னுடைய மருமகனுக்கு மந்திரோபதேசம் செய்வான். சுருக்கமாகச் சொன்னால் இந்தத் தறவாட்டின் மாந்திரீகப் பதவி புத்தூர் வீட்டைச் சேர்ந்தவர்களுக்கே சாஸனமாகிவிடும். கொட்டாரம் மற்றும் உடைமைகள் ஒரு கிளையின் உறுப்பினர்களுக்கு மட்டுமாக வாரிசுரிமை என்கிற பெயரில் நிலைத்து விடும். அது கூடாது. அப்படி நடக்காதிருக்க இப்போதே அதற்கான வேலைகளில் ஈடுபடவேண்டுமென்று பார்வதிதங்கச்சி தீர்மானித்தார்.

அம்மாவின் இந்த மனநிலை மகனுக்கும் உடன்பாடானதாகவே இருந்தது. மாந்திரீகப் பதவி போய்விட்டது. கொட்டாரம் மற்றும் உடைமைகளின் வருவாய் முழுவதையும் குமாரன்தம்பிக்கே விட்டுக் கொடுப்பதும் முடியாது.

வருடந்தோறும் வாவுபலி என்கிற அமாவாசைக் கர்மங்களைக் கம்பீரமாக நடத்துவதற்கும், பித்ருக்கள் மற்றும் பரதேவதைகளின் இருப்பிடமான கொட்டாரத்தைப் பராமரிப்பதற்கும் இவ்வளவு சொத்துக்களை-ஓர் ஏக்கர் பரப்பிலுள்ள

வீடு மற்றும் இரண்டரை ஏக்கர் நிலத்தையும் பொதுச் சொத்திலிருந்து ஒதுக்கி வைத்திருக்கிறார்கள். பொதுவாக மாந்திரீகனாகப் பதவியேற்பவர் அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தை எடுத்துக் கொள்கிறாரே தவிர, அவற்றைப் பராமரிப்பதில்லை; பராமரிக்கச் செலவழிப்பதுமில்லை.

அமாவாசை பூஜை என்ற பெயரில் கொட்டார முற்றத்தில் சமாதிகளின் முன்னால் சிறிய ஒரு பூஜை நடத்தி, அரிசிமாவு நைவேத்தியம் செய்வதுதான் பப்பு மாமாவின் காலத்தில் நடந்த சடங்குகள். மராமத்து வேலைகள் செய்யாததாலும், மேற்கூரைப் பகுதியைச் சரியாகப் பராமரிக்காததாலும் கொட்டாரம் சிதிலமடையத் தொடங்கியிருக்கிறது. மைய அறையைத் தவிர மற்ற பாகங்களெல்லாம் பெயருக்கு நிற்கின்றன. பூஜையறையைத் திறக்கவே கூடாது என்கிற காரணத்தைச் சொல்லி அதனுடைய நிலையையும் கவலைக்குரியதாக ஆக்கியிருக்கிறார்கள். பலா மரங்களாலான பழைய சுவராக இருப்பதாலும், அதே மரத்தாலான மச்சும் தூண்களும் இருப்பதாலும் பூஜையறை விழாமல் நிற்கிறது.

மாந்திரீகனுடன் இந்த விஷயங்கள் குறித்து மனந்திறந்து பேசவேண்டுமென்று சேகரன் தம்பி தீர்மானித்தான். நியாயமான ஓர் உடன்படிக்கைக்கு குமாரன்தம்பி தயாராக இல்லாவிட்டால், தறவாட்டின் மற்ற எல்லாக் கிளை உறுப்பினர்களுடனும் உறவினர்களுடனும் கலந்துபேசி அடுத்த கட்ட நடவடிக்கை குறித்து தீர்மானிக்க வேண்டியதுதான்.

ஒரு நாள் மதியத்திற்குப் பிறகு பார்வதி தங்கச்சியை அழைத்துக் கொண்டு சேகரன்தம்பி தெற்கு வீட்டிற்கு வந்தான்.

“இங்கே வர்றதுக்கான வழியை நீங்க மறந்துடலை இல்லையா பார்வதி? அம்மாவா இருந்தாலும் சரி பிள்ளைகளானாலும் சரி, இந்த வீட்டுப் படியேறுறதில்லைன்னு இருக்கீங்க!” என்று வந்தவர்களை வரவேற்று கிழக்குப்புறத் தளத்தில் ஓலைப்பாயை விரித்துக் கொண்டு கேட்டார் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி. தென்புற அறையில் படுத்து



ஓய்வெடுத்துக் கொண்டிருந்த குமாரன்தம்பியும் குரல் கேட்டு எழுந்து வந்தான்.

“நாங்க இங்க வந்திருக்கிறது முக்கியமான சில விஷயங்களைப் பத்திப் பேசுறதுக்குத்தான்”-சேகரன்தம்பி பேச்சைத் தொடங்கினான்.

“காரியமில்லாம நீங்க வரமாட்டீங்கன்னு தெரியுமே!” குமாரன்தம்பி தனது முதல் பாணத்தைத் தொடுத்தான்.

“அமாவாசை நெருங்கப் போகுதே.. இந்தத் தடவை பூஜையை எந்த மாதிரி நடத்தப் போறீங்க?”சேகரன்தம்பி விசாரித்தான்.

“வழக்கம்போல் எல்லாச் சடங்குகளும் இருக்கும்”-குமாரன்தம்பி சுவாரசியமில்லாமல் பதிலளித்தான்.

“விளக்கேத்துறதும் அரிசிமாவு நைவேத்யமும்தானே?”

“அதுதான்னா அதுதான்!”

“நீங்க ரெண்டு பேருமாப் பேசி ஏன் கோபப்படணும்? என்னவெல்லாம் செய்யணுமோ அதைப் பார்வதி சொல்லட்டும். தறவாட்டின் பொதுக் காரியமில்லையா? நாமெல்லாம் சேர்ந்து முடிவுபண்ணி அப்படியே நடத்திவிட்டா போகுது”-குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சூழ்நிலையைச் சற்றுக் குளுமைப்படுத்த முயன்றார்

அம்மாவின் குறுக்கீடு குமாரன்தம்பிக்குப் பிடிக்கவில்லை. அவன் தனக்குத்தானே சொல்லிக் கொள்வதுபோல் பேசினான்: “கொட்டாரம் பற்றிய எந்த விஷயத்தையும் யார்கிட்டயும் கலந்து பேச வேண்டிய அவசியம் எனக்குக் கிடையாது. அதையெல்லாம் தறவாட்டு மாந்திரீகனான நானே தீர்மானிச்சுக்கிறேன்.”

“அது கூடாதுன்னு சொல்லத்தான் நாங்க வந்திருக்கிறோம். கொட்டாரச் சொத்துக்களில் எங்களுக்கும் உரிமை இருக்கு. பெரிய ஒரு எட்டுகட்டு வீடே நாசமாப் போயிருக்கு. அங்கங்க சிதைஞ்சு போய் ஒழுகத் தொடங்கி பேருக்குப் பூஜையறையா நிக்குது. சமாதிகளில் கல்லுங்க பெயர்ந்து ஒவ்வொண்ணா உதிர

ஆரம்பிச்சுருச்சு. வருஷந்தோறும் அமாவாசை பூஜைக்கு நூற்றியொரு பிராமணர்களுக்கு விருந்து நடத்தணும்னு பாகம் பிரிச்சபோது பத்திரத்தில எழுதியிருக்கு. ஆனால், அப்படி நடந்து எத்தனையோ வருஷங்களாகுது. காலாகாலத்தில நடக்க வேண்டிய பூஜை நடக்கிறதில்லை: கிழக்குக் கோயிலில் நாக பூஜையோ, வெள்ளையடிப்பதோகூட இல்லாமப் போய் எத்தனையோ வருஷங்களாச்சு. இப்படி பொதுச்சொத்தை எடுத்துச் சொந்த மருமக்களுக்குச் சம்பாதிச்சுக் கொடுக்க இனிமேலும் யாரையும் அனுமதிக்க முடியாது" சேகரன்தம்பி உறுதியுடன் பேசினான்.

"கொட்டாரம் என்கிட்ட இருக்கும்போது அதில கிடைக்குற வருமானத்தை என் மருமக்களுக்குத் தராம, உன்னோட மருமக்களுக்குத் தர முடியுமா என்ன?"-குமாரன்தம்பி கோபத்துடன் கேட்டான்.

"என் மருமக்களுக்கும் சமஉரிமை உள்ளதுதான் கொட்டாரச் சொத்து. அது யாருடைய பித்ரு சொத்தும் கிடையாது. பழைய குடும்ப முன்னோர்கள் சம்பாதிச்சது, குடும்பத்தின் எல்லா உறுப்பினர்களும் அனுபவிப்பதற்காகத்தான்"-பாயிலிருந்து எழுந்து நின்ற சேகரன்தம்பி உரத்த குரலில் வாதிட்டான்.

"நீங்க வீணாச் சண்டைபோட்டுப் பிரியாதீங்க" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தழுதழுத்த குரலில் கூறினார்.

"அவன் சொன்னதைக் கேட்டீங்க இல்லையா அம்மா. இந்த இடமா இருக்கிறதால நான் பொறுத்துப் போறேன்" குமாரன்தம்பி குரலை இழுத்துப்பேசி உறுமிவிட்டு தென்புற அறைக்குப் போனான்.

"வேறு ஏதாவது இடமா இருந்தா நீ என்னை அப்படியே விழுங்கியிருப்பியோ? ஒரு பெரிய்ய... மகாமாந்திரீகன் வந்திருக்கிறார். அம்மா கிளம்புங்க. நாம அடுத்த வழியைப் பாக்க வேண்டியதுதான்!"

சேகரன்தம்பி அவசரமாக வெளியேறினான். பார்வதிதங்கச்சி மௌனமாக மகனைப் பின்தொடர்ந்தார்.



"நீ ஒரு மாந்திரீகன்கிறதை மறந்துட்டயா குமாரா? தறவாட்டு மாந்திரீகன் பொறுமையின் அவதாரமா இருக்கணும்னு பப்பு அடிக்கடி சொல்வான். சேகரன் கோபத்தோட கிளம்பியிருக்கிறான். இனிமேல் இந்தக் குடும்பத்தில் என்னவெல்லாம் நடக்கப் போகுதோ? எனக்கு ஒண்ணும் புரியலையே என்னுடைய பித்ருக்களே!"-குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் கண்கள் நிறைந்து வழிந்தன.

"நீங்க ஏம்மா வீணா கவலைப்படுறீங்க? மாந்திரீகனாக முடியலையேங்கிற ஏமாற்றம் சேகரனுக்கு. அவனைத் திருப்திபடுத்துறதுக்காக கொட்டாரத்தையும் மத்த சொத்துக்களையும் விட்டுக் கொடுக்க முடியுமா? பப்புமாமாமேல கோர்ட்டில் கேஸ் போட்ட வைரமனைப் போற்றியின் மகன்தானே இவன்? வேண்டுமானால் என்மேல இவன் கேஸ் போடட்டும். இல்லேன்னா இந்தத் தறவாட்டைச் சேர்ந்த எல்லோரையும் கூட்டிட்டு கொட்டாரச் சொத்துக்களைக் கைப்பற்ற அணி திரட்டி வரட்டும். நான் பார்த்துக்கிறேன்."-குமாரன்தம்பி உறுதியான குரலில் கூறினான்.

குடும்பச் சொத்தில் பங்கு பெறுவதற்காக, பார்வதி தங்கச்சியின் கணவர், பார்வதி மூலமாக, தறவாட்டுத் தலைவரான, பப்புத்தம்பி மீது விவகாரத்தைக் கிளப்பிய சம்பவம் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் நினைவில் எழுந்தது.

சாதாரணமான நம்பூதிரித் தாம்பத்தியமாக இருக்கவில்லை பார்வதியும் வைரமன இல்லத்து மாதவன் போற்றியும் வாழ்ந்த வாழ்க்கை.

போற்றிக்கு வேறு மனைவி இல்லை. மனைவியும், குழந்தைகளும் அவருக்கு உயிராக இருந்தனர். ஏதோ ஒரு விஷயத்தில் அவர் பப்புவுடன் மோதிக் கொண்டதையொட்டி, பார்வதி மூலமாக வழக்குத் தொடர்ந்தார். களிக்கல் வீட்டில் குடியிருந்து கொண்டு வீட்டையும் இடத்தையும் கைப்பற்றி அதில் வரும் வருமானத்தையும் எடுத்துக்கொள்ளத் தொடங்கினார், வழக்கு ஐந்து வருஷங்கள் நடைபெற்றது. பாகம் பிரிக்க வேண்டுமென்று நீதிமன்றம் உத்தரவிட்டது. அந்தச் சமயத்தில்

போற்றி இறந்து போனார். பார்வதி மற்றும் அவளது குழந்தைகளுக்கு உரிய பங்கைப் பிரித்துக் கொடுத்துப் பிரச்சினையைத் தீர்த்த பப்பு மிகுந்த துயரத்துடன் கூறினார்: "அம்மா இல்லாத பார்வதியை சொந்தச் சகோதரி போலவே நினைச்சு, வைரமணைப் போற்றிக்கு கல்யாணமும் செஞ்சு வைத்தேன். அவள் என்னை கோர்ட்டுல கொண்டுபோய் நிறுத்திட்டாள். இனிமேல் அவளும், அவளது குழந்தைகளும் எனக்கு எதிரிகள்தான்!"

இந்தச் சம்பவம் மட்டும் நடைபெறாமலிருந்தால் பப்பு, சேகரனுக்குத்தான் மந்திரோபதேசம் செய்திருப்பார்.

"இனிமேல் என்னெல்லாம் நடக்கப்போகுதோ? சரித்திரம் திரும்புமா? கொட்டாரச் சொத்துக்களைப் பாகம் பிரிக்க வேணும்னு சேகரன் வழக்குத் தொடுப்பானோ? எனக்கு ஒண்ணுமே புரியலையே என்னுடைய காரணவன்மார்களே!" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் துயரம் வார்த்தைகளாகச் சிதறி விழுந்தன!

# 21

நடுப்பகல் வெயிலின் பளபளப்பு அந்த மண்குடிசை வாசலில் கண்ணாடி காட்டிக் கொண்டிருந்தது. குடிசையின் ஒரு மூலையில் வாடிப்போன வாழைத்தண்டு மாதிரி அசைவற்றுப் படுத்திருந்தாள் சோகத்தில் ஆழ்ந்திருந்த கார்த்தியாயினி. அம்மாவின் அருகிலிருந்து இழந்துபோன கனவுகளைப் பற்றிய மனக்கணக்கில் ஈடுபட்டிருந்தாள் அனாதரவான நாணிக்குட்டி.

அம்மாவிடமிருந்து எழுந்த தீனமான விசும்பல் குரல் ஓர் ஈட்டிமுனையாக மகளது இதயத்தின் மர்மப் பகுதியில் சென்று பாய்ந்தது.



நாணிக்குட்டி திடுக்கிட்டாள. அழுது வீங்கியிருந்த அவளது கண்கள் அம்மாவின் சோர்வடைந்த மேனியின் மீது ஊர்ந்து நெளிந்தது. இதயம் விம்மி வெடித்துவிடும் போல் தோன்றவே அம்மாவின் உடலில் அபயம் தேடினாள்.

தகிக்கும் இரண்டு பெண்மனங்கள் ஒன்றுசேர்ந்து கடந்த கால நினைவுகளின் சேமிப்புக்கிடங்கைத் திறந்தன. அற்ப ஆயுளில் மரணத்துக்கு இரையான தங்கள் அன்பிற்குரியவர்களின் அனாதைப் பிணங்கள் அலறியபடி ஓடி வருகின்றன! அவமானமடைந்த பெண்மையின் பேய்க்கோலம் தலைவிரித்து ஆடுகிறது. பயங்கரமான காட்சி. அம்மாவும் பெண்ணும் ஒன்றாக நடுங்கினர்.

"நாணிக்குட்டி!" - அம்மாவின் கனத்த குரல்.

"அம்மா!" -மகளின் தீனக்குரல்.

அணைப்பில் கட்டுண்டு படுத்திருந்த அம்மாவும் மகளும் தங்களது விசும்பல்களைப் பரஸ்பரம் பரிமாறிக் கொண்டார்கள். அக்கினிப் பெருமூச்சுகளைப் பங்கு வைத்துக் கொண்டனர்.

சோர்வு இருவரையும் வருடியது. அந்த வருடலில் அவர்கள் சற்றுக் கண் மயங்கினர்.

மயக்கத்திலிருந்து அவர்களை விடுவித்தது குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் குரல்தான். "என்ன இப்படிப் படுத்த படுக்கையாகக் கிடக்குறீங்க? கவலைப்பட்டுப் படுத்துக் கிடந்தா செத்துப் போனவர் திரும்பி வரப் போறாரா?"

நாணிக்குட்டி வாரிச்சுருட்டிக்கொண்டு எழுந்தாள். கார்த்தியாயினி கண்களைத் திறந்து வந்திருப்பவரை தீனமாகப் பார்த்துவிட்டு மீண்டும் மயக்கத்தில் ஆழ்ந்தாள்.

"உட்காருங்க அம்மச்சி"-நாணிக்குட்டி பனையோலைத் படுக்கைத் தரையில் விரித்தாள்.

"வேண்டாம் நாணிக்குட்டி... நான் அவசரமாப் போகவேண்டியிருக்கு. சாவுத்தீட்டு முடிஞ்சு குளிச்ச உடனே நீ

வருவேன்னு நினைச்சேன். அப்படியும் நீ வராததால பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்."

பதில் எதுவும் பேசாமல் நாணிக்குட்டி முகம் தாழ்த்தி நின்றாள். என்ன பதிலைச்சொல்வது என்று யோசித்துக் கொண்டிருந்தாள்.

சின்னஞ்சிறு வயதிலிருந்தே தான் வளர்ந்தது புத்தூர் வீட்டில்தான். வெறும் சமையற்காரியாக மட்டுமில்லை, குடும்பத்தில் ஒருவராகவே இருந்தோம். சொந்த வீட்டில் கிடைக்கக்கூடிய எல்லாவித சுதந்திரங்களையும் அங்கும் அனுபவித்தோம். தனக்கு முன் அங்கு சமையற்காரியாக இருந்தவர் தன் தாயார். அந்தக் குடும்பத்தின் காரியஸ்தரின் மனைவி என்ற முறையில் அங்கு அம்மாவிற்கும் எல்லாவிதமான சுதந்திரங்களும் கிடைத்தன. அம்மாவின் காசநோய் முற்றிவிட்டதால், அம்மாவிற்குப் பதிலாக, தான் அங்கு வசிக்க வேண்டியதாகி விட்டது. தன் தங்கை லக்ஷ்மிக்குட்டி அந்த வீட்டின் மற்ற வேலைகளைக் கவனித்துக் கொண்டாள்.

அப்பாவும் அம்மாவும் இரண்டு பெண் குழந்தைகளும் புத்தூர் வீட்டின் கருணையால் எத்தனையோ வருடங்களாக வாழ்க்கை நடத்தியிருக்கிறோம்.

புத்தூர் குடும்பச் சொத்துக்களை பாகப்பிரிவினை செய்தபோது காரியஸ்தருக்கு முப்பது சென்ட் இடம் இலவசமாக வழங்கப்பட்டது. அதுதான் மொத்தத்தில் தங்களிடமுள்ள ஒரே சொத்து. எத்தனையோ வருடங்களுக்கு முன்னால் அப்பா கட்டி வைத்த இந்த மண்குடிசைதான் தங்களது வீடு.

புத்தூர் குடும்பத்தின் நிலப்பகுதிகளை மேற்பார்வையிட்டுக் கவனிப்பதற்காக வருடம் ஒன்றுக்கு நூறு பற (நூறு மரக்கால்) நெல் கூலியாக வழங்கப்பட்டது. காரியஸ்தர் வேலையை அப்பா விட்டுவிட்ட பிறகும் அந்த நெல் கிடைத்துக் கொண்டிருக்கிறது.

"வருஷத்துக்கு ஒரு தடவை கிடைக்குற நூறு பற நெல் நான் பார்க்குற காரியஸ்தர் வேலைக்கான கூலி மட்டுமில்லை, என் சீமந்த புத்திரியான நாணிக்குட்டியின் மானத்தை விக்குறதுக்கான கூலியும் அதில இருக்கு"-ஒரு தடவை அப்பா சொன்ன வார்த்தைகள்!



புத்தூர் தறவாட்டு இளைஞனுக்கும் புத்தூர், காரியஸ்தனின் மூத்த மகளுக்கும் இடையிலான உறவு வெறும் அந்தப்புர ரகசியமாக நின்று விடவில்லை. அந்த விவரத்தை வீட்டாரும் நாட்டோரும் மோப்பம் பிடித்து அறிந்தனர். கடைசியில் அது ஒரு பரஸ்யமான ரகசியமாக மாறியது.

மூத்த மகளை யாராவது ஒருவருக்குத் திருமணம் செய்து கொடுத்து, ஏற்பட்டிருக்கும் கெட்ட பேரை மாற்ற அப்பா எவ்வளவோ முயன்றார். 'தங்கம் வேண்டாம், ரூபாய் வேண்டாம்' என்று கூடக் கல்யாணம் செய்து கொள்ளப் பலர் முன்வந்தனர். ஆனால், ஒரு கல்யாணத்திற்கு தான் ஒப்புக்கொள்ளவில்லை.

"கொச்சுதம்பி (சின்ன எஜமான் குமாரன்தம்பி) ஆண். அவருக்கு இதுல எந்தவிதமான நஷ்டமும் கிடையாது. நீ ஒரு பெண். இதனால ஏதாவது பிரச்சனை ஏற்பட்டால் உன்னைக் கொன்னுட்டு நானும் தற்கொலை பண்ணிப்பேன்."-அப்பா ஒரு தடவை கடுமையாக எச்சரித்தார். தான் அதையும் பொருட்படுத்தவில்லை.

"நாணிக்குட்டி, உனக்கு என் வயித்துல இடம் மட்டும் தான் தரவில்லை. குமாரனோட உனக்குள்ள தொடர்பை நிறுத்திடு பெண்ணே!"-குஞ்னுக்குட்டித்தங்கச்சி அன்புடன் வேண்டுகோள் விடுத்தார். தான் அதற்கும் கீழ்ப்படியவில்லை.

"குமாரன் உன்னைக் கல்யாணம் பண்ணிப்பான்னா நெனைக்கிற? அது ஒருக்காலும் நடக்காது பெண்ணே!" மகேஸ்வரிதங்கச்சி எச்சரித்தார். தான் அதையும் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை.

இவற்றையெல்லாம் எதிர்த்து நிற்கக்கூடிய தைரியம் கிடைத்தது, தன்னுடைய சகலமும் அவனே என்று நினைத்திருந்த இளைஞனுடைய உறுதிமொழியின் அடிப்படையில்தான். "பெரியவரோட காலம் முடியட்டும் நாணிக்குட்டி. உன் கழுத்துல இந்த குமாரன்தம்பி தாலி கட்டுவான். யார் எதிர்த்தாலும், உன்னை இந்தப் புத்தூர் தறவாட்டில குடி வைப்பேன். இது என் பித்ருக்களின் மீது சத்தியம்!"

ஒருமுறை இரு முறையல்ல... எத்தனையோ முறை தனது காதுகளில் குளுமையூட்டிய அழகான வாக்குறுதிகள்! தன் ஆத்மாவிற்குள் அமிர்த அபிஷேகம் நடத்திய உறுதிமொழி. தனது பெண்மைக்குப் பாதுகாப்பை வழங்கிய ரக்ஷா கவசங்கள்!

கடைசியில் நடந்தது என்ன? உறுதிமொழியை மறந்துவிட புத்தூர் தறவாட்டின் குமாரன்தம்பிக்கு எந்தவிதமான சிரமமும் இருக்கவில்லை. வாக்குறுதியை மீறத் தைரியசாலியான இளைஞனுக்கு எந்தவிதமான கூச்சமும் ஏற்படவில்லை. மனம் விரும்பிய காதலிக்கு அளித்திருந்த பாதுகாப்புக் கவசத்தைப் பிடுங்கி, நொறுக்கி வீசியெறிய மாந்திரீகனுக்கு எந்தவிதமான தயக்கமும் ஏற்படவில்லை!

மாந்திரீகனானதுடன் சொந்தத் தவறுகளுக்கெல்லாம் ஒரு நியாயம் கற்பிக்க அவரால் முடிந்தது.

பிரம்மச்சரியம் கடைப்பிடிக்கக் கடமைப்பட்ட மாந்திரீகனுக்கு பெண்தொடர்பு தடை செய்யப்பட்டதாயிற்றே? மாந்திரீகனானதால் அவர் புதியதொரு ஜன்மம் அல்லவா எடுத்திருக்கிறார்! முந்தைய ஜன்மத்தின் உறவுகளுக்கு இனியேது இடம்? புதிய ஜன்மாந்திரத்துடன் பழைய ஜன்மத்துப் பாவங்கள் எல்லாம் இல்லாமலாகிவிடவில்லையா?

இருந்தும் பெண்ணின் இளமனம் பலவீனமான ஒரு நிமிடத்தில் இளகிவிட்டது. எத்தனையோ இரவுகளில் நுகர்ந்த ஆண் வாசனையை மீண்டும் ஒரு தடவை நுகர வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. தொடர்ந்து அடிபணிந்து போயிருந்த உடம்புக்கு, மீண்டும் ஒருமுறை தோல்வியை ஒப்புக் கொள்ளும் ஆசை தோன்றியது. அப்படித்தான் ஒரு நாள் நள்ளிரவில் தயங்கித் தயங்கி, நடுநடுங்கி அந்த மனிதனின் படுக்கையைத் தேடிச் சென்றோம்.

நடந்ததோ? தன் காலடி ஓசையைக் கேட்ட மாத்திரத்திலேயே கோழையாகிவிட்ட மாந்திரீக சிரோமணி கருட சேவையைத் தொடங்கினார். மனக்கட்டுப்பாடு உடலுறவு வேட்கையின் வெப்பத்தில் உருகிப் போய்விடும் என்று பயந்த பிரம்மச்சாரி, உக்கிரமூர்த்தியான கிருஷ்ணப்பருந்தைக் கொண்டு காதலியைச் சித்ரவதை செய்ய வைத்தார்.



ஒரு காலத்தில் அவரது வேட்கை நிறைந்த உதடுகள் பதிந்த தன் உடல்பகுதிகளிலெல்லாம், அவரது இப்போதைய ஆராதனா மூர்த்தியான கிருஷ்ணப்பருந்து தனது அலகுகளைக் குத்தியிறக்கிக் கிழித்தது. உடலில் ஏற்பட்ட காயங்களைவிடத் தன்னை அதிகமாக வேதனைப்பட வைத்தது தன் பெண்மையின் நெஞ்சைப் பிளந்த காயம்தான். அதையும் சகித்துக் கொண்டோம்.

சொந்த அப்பா சித்ரவதை செய்யப்படுவதைப் பார்த்தபோதும் தன்னைத்தானே சபித்துக் கொண்டு மூச்சடக்கி நிற்க முடிந்தது. அப்பா செய்தது நம்பிக்கைத் துரோகம் என்பதும் விளங்கியது. அதற்காக எவ்வளவு கடுமையான தண்டனையையும் அனுபவிக்கட்டும் என்று நினைக்கவும் செய்தோம். ஆனால், பிரச்சனையின் மறுபுறத்தை நினைத்துப் பார்த்தது அப்பா இறந்த பிறகுதான்.

மூத்தமகளின் மானத்தைக் கவர்ந்தெடுத்ததை வேதனையுடன் பொறுத்துக் கொண்ட ஒரு தந்தை, தனது இரண்டாவது மகளின் மானமும் வாழ்க்கையும் ஒன்றாக அழிந்துபோனதும் பழிவாங்குபவராக மாறியது தவறா? இப்படிப்பட்ட துயரங்கள் ஏற்பட்டால் எந்த அப்பாவின் இதயத்தில்தான் பகையெனும் உமித்தீ எரிந்து உயராது?

லக்ஷ்மிக்குட்டியைப் பாம்பு கடித்தது புத்தூர் வீட்டின் நிலவறையில் என்கிற ரகசியம் வெளியானபிறகு அப்பா உண்மையை அறிவதற்காக சூரக்காட்டு இல்லத்துப் பட்டேரியிடம் பிரஸ்னம் பார்த்திருக்கிறார். நிலவறையில் நடந்த சம்பவம் என்னவென்று பிரஸ்னத்தில் தெளிவாகத் தெரிந்தது. அதற்குப் பிறகுதான் அப்பாவின் மனநிலை பாதிப்படைந்தது.

அன்று முதல் ஒரு பைத்தியக்காரன் மாதிரி அப்பா வாழ்ந்தார். புத்தூர் மாந்திரீகனை அழிப்பதற்குத் தருணம் பார்த்திருந்த பட்டேரி, இந்தச் சந்தர்ப்பத்தைத் தந்திரபூர்வமாகப் பயன்படுத்திக் கொண்டார். அதனால் வேட்டைக்காரனின் கோழியாக அப்பா இரையாகவும் செய்தார்.

கடைசியில்...? தன் பெண் குழந்தைகளுக்கு அவமானம் ஏற்படுத்திய அதே மனிதனிடம் அடியும் உதையும் மிதியும் பெற்று, மகளது மானமும் உயிரும் பறிபோகக் காரணமான அதே நிலவறையில் ஒரு நாயைப் போல் மிரட்டப்பட்டு துடிதுடித்து பயந்து இரவைக் கழித்து மறுநாள் இறந்தும் போனார்.

அப்பாவின் உடல் கருநீல நிறமாக இருந்தது. இடது காலின் பாதப் பகுதி நீர்கோத்து வீங்கியிருந்தது. பாதத்தின் மேற்புறத்தில் சிறியதான ஒரு காயம். அதிலிருந்து வடிந்த ரத்தம் உறைந்து போன அடையாளமும் தென்பட்டன.

அப்பாவின் உயிரைப் பறித்ததும் புத்தூர் வீட்டு நிலவறையிலுள்ள ஐந்து தலை நாகமாகத்தான் இருக்க வேண்டும். நிலவறையிலிருந்து அடித்து வெளியேற்றப்பட்ட சில நாழிகைகளுக்குள் அவர் இறந்து போனாரே?

ஞானதிருஷ்டி மூலமாக விஷத்தீண்டலை அறியும் வல்லமையுள்ள புத்தூர் மாந்திரீகனுக்கு இந்த விவரம் மட்டும் தெரியாமலா போயிருக்கும்? மகேஸ்வரி தங்கச்சியுடன் அன்று காலையில் வெளியேறியதுகூட திட்டமிட்டுச் செய்த வேலைதானா? விஷக்கடிபட்ட ஓர் உயிரைக் காப்பாற்ற எந்தவிதமான தியாகத்தையும் அனுஷ்டிக்கக் கடமைப்பட்ட ஒரு விஷ வைத்தியன், தன் மனச்சாட்சியையே ஏமாற்றியதாகத் தானே அர்த்தம்?

அதெல்லாம் போகட்டும் அப்பாவின் இறுதிச்சடங்குகளில் கலந்து கொண்டதைத் தவிர, அதன் பிறகு அவர் ஒரு தடவைகூட இந்த வீட்டிற்கு வரவில்லை. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி மட்டும் இரண்டு தடவையோ மூன்று தடவையோ வந்திருக்கிறார்.

இப்போது இவர் வந்திருப்பது, தான் மறுபடியும் புத்தூர் வீட்டின் சமையற்கட்டுக்கு வருவோம் என்ற எதிர்பார்ப்பில்தான்.

நோயாளியும், விதவையுமான அம்மாவைத் தனியாக விட்டுவிட்டு, தான் இனிமேல் அங்கு செல்லவேண்டுமா?

அப்பாவின் முடிவு, புத்தூர் தறவாட்டில் தங்களது சேவைக்கு ஒரு முற்றுப்புள்ளியாக இருக்கட்டும்! தானும் தன் தாயும் அரைப் பட்டினியுடன் கிடந்தாலும் பரவாயில்லை... இந்த மண்குடிசையிலேயே இருந்து விடலாம்.



உடல் ஆரோக்கியத்திற்கு எந்தவிதமான குறைவும் இல்லை. முப்பது சென்ட் பூமியில் உழைத்து, அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தில் தானும் தன் கிழவியான தாயாரும் உயிர்பிழைத்துக் கொள்ளலாம்.

கண்ணாமூச்சு ஆட்டத்துக்கு வேலையே இல்லை. விரோதமோ உறவோ இரண்டையும் வெளிப்படுத்த வேண்டிய அவசியமில்லை. உறுதியான தன் தீர்மானத்தை குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியிடம் வெளிப்படையாகச் சொல்லிவிட வேண்டியதுதான்.

"அம்மச்சி! இனிமேல் நான் அங்க வரமாட்டேன். அம்மாவுக்கு உடம்புக்கு முடியலை. அவங்களைப் பார்த்துக்க வேற யாரும் கிடையாது"-நாணிக்குட்டி முகத்தை உயர்த்தி குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியிடம் கூறினாள்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் முகம் வாட்டமடைந்தது. அவர் உபதேசம் செய்வதுபோல் சொன்னார்: "கார்த்தியாயினிக்காக நீ கவலைப்பட வேணாம் நாணிக்குட்டி. அவளும் அங்க வந்துடட்டும். நாம எல்லோரும் ஒண்ணாவே இருந்துடலாம்."

"வேண்டவே வேண்டாம்... புத்தூர் தறவாட்டுல நாங்க சேவகம் செஞ்சவரைக்கும் போதும். அம்மச்சி, நீங்க புறப்படுங்க!"- குடிசையின் மூலையிலிருந்து சோர்வடைந் குரலாக இருந்த போதிலும் உறுதியாக ஒலித்த வார்த்தைகள் கார்த்தியாயினியுடையதாக இருந்தன.

நாணிக்குட்டியும் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் ஒரு சேரத் திரும்பி கார்த்தியாயினியைக் கவனித்தார்கள். துவண்டு போய்ப் படுத்திருந்த கார்த்தியாயினியின் வறண்ட உதடுகளில் இளக்காரத்தொனியிலான ஒரு புன்சிரிப்பு மின்னிமறைந்தது.

# 22

பொழுது விடியும்போது ஆரம்பித்த சோழி பிரஸ்னம் (சோழி ஜோதிடம்) முடிவடைந்தபோது பட்டத்திரி வியர்வைப் பெருக்கில் குளித்தது போலாகியிருந்தார். சோழியைப் பரப்பி பிரஸ்னம் நடத்திக் கொண்டிருந்ததுடன் வடயக்ஷிணியையும் நடுநடுவே தியானித்துக் கொண்டிருந்தார்.

இதுவரை குமாரன்தம்பியைப் பற்றிக் கிடைக்காத புதிய செய்திகள் இப்போது பட்டத்திரிக்குக் கிடைத்தன. ஜோதிடத்தில் அவருக்கு இருந்த நிபுணத்துவமும், மாந்திரீக ஸித்திகளும், மை போட்டுப் பார்ப்பதிலுள்ள அனுபவமும் -இப்படி எல்லாத் திறமைகளையும் ஒன்று சேர்த்துப் பிரயோகித்ததன் விளைவாக எதிராளியின் சரித்திரத்தைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடிந்தது. பட்டத்திரியின் முகம் பிரகாசமடைந்தது.

பிரஸ்னம் ஆரம்பித்தபோது கிடைத்த பலன், குமாரன் தம்பியின் தெய்வாதீனம் உச்சத்தில் இருப்பதாகக் காட்டியது. அவனுடன் நேருக்குநேர் மோதுவதற்குத் துர்த்தேவதைகள் பயப்பட்டனர். கருடன் அவனுடைய எல்லாக் காரியங்களுக்கும் உறுதுணையாக நிற்கும் நெருங்கிய தேவதையாகி விட்டிருக்கிறது. ஹனுமானின் அருளோ, அதுவும் உச்சகதியில் அமைந்திருக்கிறது. தேவி அவனுக்குக் காவலாகவே இருக்கிறாள்.

மீண்டும் புத்தூர் வீட்டிற்குச் செல்ல வடயக்ஷிணி தயங்கு வதாக மறு பிரஸ்னத்தில் தென்பட்டது. குமாரன்தம்பி மந்திரித்துக் கொடுத்துள்ள கறுப்புக்கயிறை இடுப்பில் கட்டியுள்ள அவனது சித்தியையும், மருமக்களையும் நெருங்கவே ரக்ஷஸ் பயப்படுகிறது!



வடயக்ஷிணியை மனமாரப் பிரார்த்தித்தபோது மற்றொரு விவரமும் கிடைத்தது. பிரஸ்னத்தின் மூலம் அதுவும் உறுதியானது. குமாரன்தம்பி மீது மோகினி-யக்ஷி ஒருத்தி தீராக் காதல் கொண்டிருக்கிறாள். புத்தூர் தறவாட்டின் மாந்திரீக சாலையான நிலவறையில் நடைபெற்ற துயரத்துக்குரிய சம்பவத்தைத் தொடர்ந்து இறந்துபோன ஓர் இளம்பெண் யக்ஷியாக மாறியிருக்கிறாள். பெருங்குளத்தின் வடபுறத்திலுள்ள சர்ப்பக்காவில் நிற்கும் பெரிய பாலை மரத்தில் அந்த யக்ஷி வாசம் செய்கிறாள். புத்தூர் தறவாட்டு மாந்திரீகனை அன்புடன் நெருங்கி வசப்படுத்தி, அவனை அவளுடைய சொந்தமாக்குவதுதான் யக்ஷியின் வாழ்க்கை லட்சியம். யாருக்கும் எந்தவிதமான தொல்லையும் தராமல் கடினமான விரதத்தை மேற் கொண்டிருக்கும் இந்த யக்ஷியை, குமாரன்தம்பி ஒரு சத்தியம் செய்ய வைத்திருக்கிறான். அதன் விவரம் பட்டத்திரிக்குப் புரிந்தது. கருடனைப் பயன்படுத்தி அவளைப் பயப்படச் செய்து தொலைவில் நிறுத்தி, சத்தியம் செய்ய வைத்திருக்கிறான். 'அவன் பிரம்மச் சாரியாக இருக்கும் காலம் வரையில், அவனைத் தொல்லைப் படுத்த மாட்டேன்!' என்று வாக்குறுதி அளித்திருக்கிறாள்.

பட்டத்திரி தீவிரமாக யோசித்தார். பெருங்குளத்தின் வடபுறத்திலுள்ள காவில் குடியிருக்கும் யக்ஷியை எப்படியாவது குமாரன்தம்பியுடன் இணைத்துவிட வேண்டும். யக்ஷியுடன் தொடர்பு கொண்டால் தேவி அவனைக் கைவிட்டு விடுவாள். அப்படிப்பட்டவனது கருட மந்திரஸித்தியும் குறைந்து கொண்டேவரும். நாளடைவில் ஹனுமானும் மாந்திரீகனைக் கை விட்டு விடுவார். நிவர்த்திக்காகச் செய்யப்படும் எந்தக் கர்மமும் பலனளிக்காமல் போய்விடும். அப்படிப்பட்ட சூழ்நிலையில் தன் ஆராதனா மூர்த்திகளை முறியடிக்க புத்தூர் வீட்டு மாந்திரீகனால் முடியாது, யக்ஷிகள் சத்தியத்தை மீறாதவர்கள். ஆனால், குமாரன்தம்பியின் பிரம்மச்சரியம் தகர்ந்துபோனால் யக்ஷி அவனைப் பிடித்துக் கொள்வது சர்வநிச்சயம்.

குமாரன்தம்பியின் பிரம்மச்சரியத்தை அழிக்கவும், அந்தச் சந்தர்ப்பத்தில் அந்த யக்ஷியிடம் அவன் சிக்கிக் கொள்ளவும் என்ன செய்யலாம் என்று பட்டத்திரி யோசிக்கத் தொடங்கினார்.

ஏதோ ஓர் உபாயத்தைக் கண்டுபிடித்து விட்டது போல் பட்டத்திரி புன்னகைத்தார். தனக்குத் தட்டுப்பட்ட வஞ்சகமான தந்திரத்துக்காக, சுயமாகவே பெருமிதப்பட்டார். எவ்வளவு அழகானதொரு திட்டத்தை செயல்படுத்தப் போகிறோம்! தன் திட்டம் வெற்றி பெற்றுவிட்டால் குமாரன்தம்பியின் பிரம்மச்சரியம் தூள் தூளாகி விடும். இதை நிறைவேற்ற மீனாக்ஷியைவிட பொருத்தமான கெட்டிக்காரி இந்த நாட்டிலேயே வேறு யாரும் இருக்க முடியாது. உடலழகும், கவர்ச்சியும் மிக்க மீனாக்ஷி குமாரன்தம்பியின் பழைய வைப்பாட்டியும்கூட!

மீனாக்ஷியை அணுகி எப்படியாவது காரியத்தை முடித்தே தீரவேண்டும். வடயக்ஷிணியால் முடியாத காரியம், மனிதப் பெண்ணான மீனாக்ஷியால் முடியும்! மனிதனது பிரம்மச்சரியத்தை பிளக்க, மனிதப் பெண்ணால் முடிவதுபோல் யக்ஷியால் முடியுமா என்ன? யக்ஷியுடன் உறவு கொண்டால் அது மாந்திரீகனின் பிரம்மச்சரியத்தைப் பாதிக்காது என்பது மாந்திரீக விதி.

மீனாக்ஷி மனம் வைத்தால் தன்னுடைய லட்சியப் பயணம் சுலபமாகிவிடும். பிரம்மச்சரியத்தை இழந்து, யக்ஷியின் வலையில் அகப்படவும் செய்தால் அத்துடன் நல்ல மந்திரவாதியாக உலாவும் குமாரன்தம்பி, துர்மந்திரவாதியாக மாறுவான். அதன் பிறகு அவனால் ஒருபோதும் துர்த்தேவதைகளைத் தோற்கடிக்க முடியாமல் போகும்!

அவனது யக்ஷியால், வடயக்ஷிணியின் பக்தனான தன்னை எதுவும் செய்ய முடியாது. மாறாகத் தன்னுடைய வடயக்ஷிணியும் தூமாவதியும் சேர்ந்து அவனைச் சுலபமாக அழித்து விடுவார்கள்.

"பலே பேஷ்!"-ராமன் பட்டத்திரி உற்சாக மிகுதியால் வாய்விட்டுச் சிரித்தார்.

அவர் உடனே புறப்பட்டது சுப்ரமண்ய ஸ்வாமி கோயிலை நோக்கித்தான். அது மாலை நேரம்.

கோயிலுக்குள்ளும் வெளியிலுமாக அவர் யாரிடமெல்லாமோ விசாரணைகள் நடத்தினார். இறுதியில் கோயிலின் கூத்து



மண்டபத்தின் பின்புறம் தவில்காரர் குட்டப்பமாராரிடம் பேசிக் கொண்டிருந்த மீனாக்ஷியை, பட்டத்திரியின் கூர்மையான கண்கள் கண்டுபிடித்தன. அவர் மீனாக்ஷியை கைகாட்டி அழைத்தார்.

திடுக்கிட்டபடி மீனாக்ஷி பட்டத்திரியின் அருகே வந்தாள். எப்படிப்பட்டவரையும் கூசாமல் நெருங்கும் கோயில் பெருக்குபவளான மீனாக்ஷிக்கு, துர்மந்திரவாதியான பட்டத்திரி மீது மட்டும் அப்படியொரு பயம் இருந்தது.

ராமன் பட்டத்திரி பெண்மோகம் பிடித்தவர் என்பதல்ல அவளது பயத்திற்குக் காரணம். ஒரு பிராமணனின் ஆசையைப் பூர்த்தி செய்யவும் தயங்கமாட்டாள், அந்தக் கோயில் ஊழியக்காரி. ஆனால், துர்மந்திரவாதியான பட்டத்திரியிடம் ஏனோ சிறுவயதிலிருந்து அவளுக்குப் பயம்தான். எப்போதாவது அவரைச் சந்திக்க நேர்ந்தால் சட்டென்று விலகி மறைவது அவளது வழக்கம்.

சூத்திரப் பெண்கள் பலரை வசியப் பிரயோகத்தின் மூலம் வெற்றி கொண்டு அவர் அனுபவித்திருப்பதைக் கதை கதையாக அவள் கேட்டிருக்கிறாள். அதிர்ஷ்டவசமாக அவரது துர்மந்திர வாதத்திற்கு இதுவரை அவள் இரையானதில்லை!

இப்போது பட்டத்திரி தன்னை எதற்காகத் தேடி வந்திருக்கிறார்?

உடன்பட வேண்டியது உடலுறவுக்குத்தானென்றால் எந்தவிதமான தடையுமின்றி இப்போதே வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போய்விடலாம். சூரக்காட்டு இல்லத்திற்கு வா என்று அவர் சொல்லாமலிருந்தால் போதும். சூரக்காட்டு இல்லத்தின் யக்ஷிக்காவையும், அங்குள்ள வடயக்ஷிணியைப் பற்றியும் அவள் ஏராளமாகக் கேள்விப்பட்டிருந்தாள். எனவே, அந்தப்பக்கம் போவதென்றால் அவளுக்குப் பயம்தான்.

தைரியசாலியாகக் காட்டிக்கொண்டு நடுங்கும் குரலில் மீனாக்ஷி கேட்டாள்: "திருமேனி, அடியேனை கூப்பிட்டது எதுக்காகன்னு தெரிஞ்சுக்கலாமா?"

"நீ எதுக்குப் பயப்படுற மீனாக்ஷி? பயப்பட வேண்டிய தேவையே கிடையாது! சொல்றதுக்குத் தயக்கமாவும் இருக்கு. ஆனால், சொல்லாம இருக்கவும் முடியாது. உன்னால எனக்கொரு காரியம் ஆக வேண்டியிருக்கு. அதை நீதான் செய்யணும். முடியாதுன்னு மட்டும் சொல்லக்கூடாது"-சிருங்காரச் சிரிப்பைப் பரிசளித்தபடி பட்டத்திரி பேசினார்.

மீனாக்ஷியின் முகம் தாழ்ந்தது. அவளது மனதின் பாரம் நீங்கியது. பயம் விலகியது.

தான் எதையெல்லாமோ தவறாக நினைத்துப் பயப்பட்டோம். மந்திரப் பிரயோகம் செய்து எப்படிப்பட்ட பெண்களையும் இல்லத்துக் காவிற்குள் வரவழைக்க முடிந்த துர்மந்திரவாதி, இப்போது நேர்வழியாகவே வந்திருக்கிறார். அதுவும் தன்னிடம் உதவி கேட்டு!

தன்னால் ஒரு காரியம் ஆகவேண்டி இருப்பதாகவும், தான் உதவியே தீர வேண்டும் என்றல்லவா சொல்கிறார். என்ன உதவி செய்ய வேண்டும் என்று கேட்க வேண்டியதில்லை. யக்ஷிகளையும், பிசாசினிகளையும் (பிசாசின் பெண்பால்) நொடியில் வரவழைக்கும் சூரக்காட்டு மந்திரவாதிக்கு, கோயில் பெருக்குபவளான இந்த மீனாக்ஷியால் முடியக் கூடியது என்னவென்பதை ஊகித்தறியும் புத்தி தனக்கு உள்ளது. அவரது உட்பொருள் நிறைந்த கேள்வியைக் கேட்டபோதே விஷயம் இன்னதென்று விளங்கி விட்டது.

இந்த ஊரிலுள்ள வயதுக்கு வந்த பெரும்பாலான நம்பூதிரிகளும், எம்ப்ரான்களும் (கோயிலில் பூஜை செய்யும் பிராமணர்கள்), பட்டேரிகளும் (பிராமணரில் ஒரு பிரிவினர்) மற்றவர்களும், கோயிலைச் சுற்றிக் குடியிருப்பவர்களும் தன்னிடம் கேட்டிருக்கிற கேள்வியைத்தான் இவரும் கேட்கிறார். கேள்வியுடன் தன்னை நெருங்கியுள்ள எந்த ஒரு பிராமணனையும் தான் இதுவரை ஏமாற்றியதில்லை. உதவிக்குக் கூலி வாங்கியதுமில்லை. அதற்கும் காரணம் உண்டு. பிராமண சாபம் ஏற்படாதிருக்க வேண்டுமானால், பிராமண போகத்திற்குக் கூலி வாங்கவே கூடாது!

அதிகமாக எதையும் யோசிக்க வேண்டியதில்லை. பட்டேரிக்கும் சம்மதிக்க வேண்டியதுதான்.



"திருமேனிக்கு எப்போ சௌகரியப்படுதோ, நேரா அடியேனின் வீட்டுக்கு வாங்க. இன்னிக்கே வேணுமானாலும் வாங்க. நான் தயாரா இருப்பேன்" வெட்கத்துடன் பேசிய மீனாக்ஷி மீண்டும் தொடர்ந்தாள் : "ஆனால், இல்லத்திற்கு மட்டும் வரச்சொல்லாதீங்க. எனக்குப் பயமா இருக்கு!"

பட்டத்திரி குலுங்கிச் சிரித்தார். சிரிப்பு அடங்கிய பிறகு கூறினார்: "முட்டாள் பெண்ணே! என்ன வார்த்தையெல்லாம் சொல்லிட்ட... நான் இதுவரையில அப்படியொரு நினைப்புல இந்தக் கண்களால உன்னைப் பார்த்ததில்லை. சம்போகக் கலையில் நான் கெட்டிக்காரன்தான். ஆனால், மீனாக்ஷியை ஒரு சகோதரியாத்தான் இதுவரை நினைச்சிருக்கேன். சுற்றி வளைக்காம நேரடியாகவே சொல்லிடுறேன். புத்தூர் வீட்டு மாந்திரீகன் இல்லையா, அதுதான் குமாரன்தம்பி! அவன் உன்னோட பழைய வாடிக்கைக்காரன்தானே? அந்த சுப்பன் என்னோட மல்லுக்கு வந்திருக்கிறான்! அவனை மண்ணைக் கௌவ வைக்கணும்னு எனக்கொரு பிடிவாதம். அதுக்குத்தான் உன் உதவி தேவைப்படுது."

"ஐயோ, இந்த விஷயத்தில நான் உங்களுக்கு என்ன உதவி செய்யுறது?"

"பயப்படாத மீனாக்ஷி. ஊர்வசியைவிட அழகியான மீனாக்ஷிக்குட்டி நினைச்சா, அவனை நினைச்ச இடத்தில நிக்க வைக்க முடியாதா என்ன?"

"திருமேனி, அடியேனுக்குப் பயமா இருக்கு. குமாரன்தம்பி இப்போ பழைய ஆளே கிடையாது. ரொம்பவும் திவ்வியமானவரா மாறியிருக்கார். ஒரு சன்னியாசி மாதிரி நடந்துக்கிறார். அவர்கிட்டப் பேசுவதற்குக்கூட எனக்குத் தைரியம் கிடையாது. பெண்கள் கெட்ட நினைப்புடன் அவரைப் பார்த்தாலே, கிருஷ்ணப்பருந்து பறந்து வந்து கொத்திக் குதறிவிடும் திருமேனி!"

"மண்ணாங்கட்டி! உனக்கு என்ன பைத்தியமா மீனாக்ஷி? எல்லாம் வெறும் கட்டுக்கதை. குடும்பத்திற்குச் சொந்தமான ஏட்டுச்சுவடிகளைப் படிச்சு, கருட பூஜை நடத்துறான்கிறதைத்

தவிர, நீ நினைக்கிற மாதிரி திவ்ய சக்தியெதுவும் குமாரனுக்குக் கிடையாது. அப்படியே உனக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டால் நான் காப்பாத்துறேன். நான் சொல்றதை நீ கேட்கலைன்னா கிருஷ்ணப்பருந்து இல்ல, வடயக்ஷிணியோ, கந்தர்வனோ வந்து உன்னைப் பழி வாங்குவாங்க. புரிஞ்சதா?"

பட்டத்திரியின் முகத்தோற்றம் மாறிவிட்டதைக் கவனித்த மீனாக்ஷி நடுங்கினாள். ஆத்மார்த்தமான முறையில் பேச்சை ஆரம்பித்த பட்டத்திரிக்குக் கோபம் ஏற்பட்டிருக்கிறது. எதற்கும் தயங்காத துர்மந்திரவாதியின் வலையில் தான் அகப்பட்டிருக்கிறோம். யக்ஷியும், கந்தர்வனும் இது மாதிரி வேறு பல மூர்த்திகளும் இவருடைய விருப்பப்படியே நடந்து கொள்வதுடன், இவர் நிற்கச் சொன்ன இடத்தில் நிற்பார்கள் என்பதையும் கேட்டிருக்கிறாள். எத்தனையெத்தனை நிரபாதிகளை இந்தத் துஷ்டன் அழித்திருக்கிறான். மோசமான மந்திரம்தானே இந்த மனிதனின் குலத்தொழில்?

"நீ இப்படி உலக்கையை முழுங்கினது மாதிரி நின்னுட்டா எப்படி? முடியுமா, முடியாதாங்கிறதைச் சீக்கிரமாச் சொல்" பட்டத்திரியின் குரல் உயர்ந்தது.

"திருமேனி!" - இரக்கத்திற்குரிய குரலில் அவள் அழைத்தாள்.

"இந்த நடிப்பெல்லாம் தேவையில்லை. நான் சொன்னபடி செஞ்சாப் போதும்!"

மீனாக்ஷிக்குத் தலைசுற்றுவதுபோல் இருந்தது. என்ன ஒரு சோதனை இது! கடவுளே! தலைமுடியையும், தாடியையும் வளர்த்து எப்போதும் மந்திர ஜபம் மற்றும் அனுஷ்டானங்களுடன் இருக்கும் புத்தூர் வீட்டு மாந்திரீகனை வசீகரிப்பதென்பது நடக்கக்கூடிய காரியமல்ல. பெண்களின் பக்கம்கூடத் திரும்பாமல் கடுமையான விரதத்தில் இருக்கிறார் தம்பி. அவரை நெருங்கும் விஷயத்தை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. அதே நேரத்தில் பயங்கர மனிதனான தூரக்காட்டு பட்டத்திரியுடன் மோதிக் கொள்வதும் நல்லதல்ல.



கைகளைக் கூப்பித் தொழுதபடி அவள் சொன்னாள்: "அடியேனின் உடம்பு சிலிர்க்குது திருமேனி! மூச்சுத்திணறுது. அடியேனை இப்படிச் சோதிக்கக் கூடாது!"

பட்டத்திரிக்குக் கோபம் பொங்கியது. கண்களை உருட்டியபடி குரூர பாவனையில் மீனாக்ஷியை உற்றுப்பார்த்தபடி பேசினார்: "உன்னோட இந்தப் பாசாங்கெல்லாம் என்கிட்ட வேண்டாம். உன்னால முடியுமா முடியாதா... அதை மட்டும் சீக்கிரம் சொல்!"

"உத்தரவிடுங்க திருமேனி. தயவு செஞ்சு கோபிக்காம உத்தரவிடுங்க."

"அப்படி வா வழிக்கு. நீ நைச்சியமா குமாரனை நெருங்கணும். எப்படியாவது அவனை வசீகரிச்சு உன்னோட வீட்டிற்கு வரவழைக்கணும். பிறகு..."

"பிறகு...?"

"பிறகு... மனப்பூர்வமா அவனோட போகிக்கணும். அவ்வளவுதான்."

"கடவுளே... நெருப்பில குதிக்கச் சொல்கிற உத்தரவாச்சே இது!"

"நீ அதிகமா வேதாந்தம் பேச வேண்டாம். எப்படிப்பட்ட யோகியையும் மயக்கக்கூடிய அழகு உன்கிட்ட இருக்கு. நீ மரியாதையா நான் சொன்னதைக் கேக்கலேன்னா, உன்னோட உடம்புக்குள்ள யாரையாவது ஏவி விடவேண்டி இருக்கும். என்ன சொல்ற?"

"என்னைக் கொல்லாதிங்க திருமேனி. முதல்ல நீங்க சொன்ன வேலையை அடியேனால் செய்ய முடியுமான்னு பார்க்கிறேன். நடக்கலேன்னா என்மேல கோபப்படக்கூடாது."

"தைரியமா இரு மீனாக்ஷி, காரியம் நடக்கும். நாளைக்கு வெள்ளிக்கிழமை. அஷ்டமி ரோகிணி நாள். உன்னை ராதையா நெனைச்சுக்க; குமாரன் கிருஷ்ணனாகிடுவான். கோபிகையான ராதா மனப்பூர்வமாக நினைச்சா ராஜக்ரீடை நடக்கும்.

என்னவாவது ஒரு சாக்குப்போக்குச் சொல்லி, தந்திரம் பண்ணி அவனை உன் வீட்டிற்கு வரவழைக்கணும். உன்னோட உள்ளாடைகள் அவிழும்போது புத்தூர் வீட்டு மாந்திரீகன் மலர்பாணத் தாக்குதல் ஏற்பான். விஷக்கடி வைத்தியன் விஷப்பாம்பா மாறுவான். விஷத்தை இறக்குறதில நீதான் கெட்டிக்காரி ஆச்சே?"

மீண்டும் ஒரு சிருங்காரச் சிரிப்பை பரிசளித்த பிறகு பட்டத்திரி நடந்து மறைந்தார். தலைமீது இடி விழுந்தது போல் நின்றுவிட்ட மீனாக்ஷிக்குச் சுற்றுப்புறச் சுயநினைவு திரும்பி வந்தது, தவில்காரக் குட்டப்பமாரார் அருகில் வந்து அழைத்தபோதுதான். பயந்து மிரண்ட குழந்தையைப் போல் அவள் பரிதாபமாக அவரைப் பார்த்தாள்.

குட்டப்பமாரார் பரிவுடன் கேட்டார்: "என்னா மீனாக்ஷியம்மா, பட்டேரி வேணும்கிறாரா?"

மீனாக்ஷியின் கோபம் திடுமென்று வெளிப்பட்டது. அவள் அலறினாள்; "ஆமாம், பட்டேரிக்கு வேணுமாம். . . ஆனால், என்னை இல்ல. . ."

"வேறு யாரையாம்?"

"உன்னோட சம்சாரத்தை. அவளைக் கூட்டிட்டுப் போய் அவர்கிட்ட விடு!"

பாவம் குட்டப்பமாரார். ஒன்றும் புரியாமல் மலைத்துப் போய் நின்றபோது, மீனாக்ஷி ஒரு சூறாவளி மாதிரி கோயில் முற்றத்திலிருந்து மறைந்தாள்.

## 23

கொட்டார முற்றத்திலிருந்த சமாதி மாடங்களில் விளக்குகளை ஏற்றி வணங்கிவிட்டு, படிப்புரை(தெருவாசற்படி)யை நெருங்கிய குமாரன்தம்பி திடுக்கிட்டான். படிப்புரைக்கு வெளியே துயரம் தோய்ந்த முகத்துடன் நின்று கொண்டிருந்தாள் மீனாக்ஷி.



ஒரு நாழிகை (ஏறத்தாழ ஒரு மைல்) தூரத்தில் கிழக்குத் திசையில் அமைந்திருந்த கிருஷ்ணன் கோயில் உறியடி உற்சவத்திற்குப் புறப்பட்ட ஒரு கூட்டம் அப்போதுதான் அந்தச் சாலையை கடந்திருந்தது. அருகிலிருந்த சுப்ரமணிய ஸ்வாமி கோயிலில் தீபாராதனை தொடங்கியிருந்தது. அஷ்டமி - ரோகிணி நாளானதால் சாலையிலும் சரி, பெருங்குளத்தின் அருகிலும் சரி மனித நடமாட்டமே இல்லாமல் இருந்தது. எல்லோரும் உறியடி உற்சவத்திற்குப் போயிருக்க வேண்டும். மாலை நேரமாகி விட்டிருந்தது.

ஜன நடமாட்டமில்லாத பாதை. கொட்டாரத்திற்குள் தானும், படிப்புரைக்கு முன்னால் பாதையையொட்டி மீனாக்ஷியும் நிற்கிறோம். யாராவது இந்தக் காட்சியை பார்த்தால் என்ன நினைப்பார்கள்? மீனாக்ஷி வந்திருப்பது தன்னைச் சந்திப்பதற்காகத்தான் பார்ப்பவர்களுக்குத் தோன்றும். போதாக்குறைக்கு தனக்கும் அவளுக்குமிடையே இருந்த முறையற்ற உறவு ஊர் ஜனங்களுக்குத் தெரியும். ஆயிரம் குடங்களின் வாயை மூடிக்கட்டி விடலாம். ஆனால், ஒரு மனிதவாயை மூடிக்கட்ட யாராலும் முடியாது. வீண் பழி சுமத்துவதில் மனிதர்கள் கெட்டிக்காரர்கள்.

சற்றும் எதிர்பாராத சந்திப்பு இது. தான் மாந்திரீகனான பிறகு இவளுடன் பேசியதில்லை. ஓரிரு தடவை கோயிலில் சந்தித்துக் கொண்ட போதிலும் பார்க்காத மாதிரிதான் இரண்டு பேருமே நடந்துகொண்டோம்.

இப்போது மாலைக்கருக்கலில் இதோ, தன்னைப் பார்க்கவும், தன்னுடன் பேசவும் வந்திருப்பதுபோலவே படிப்புரையில் நிற்கிறாள் மீனாக்ஷி.

அவளை நேருக்குநேர் சந்திக்கப் பயம்தான். மாந்திரீகனான தன் மனத்தை உழுது புரட்ட மீனாக்ஷியின் பார்வையால் முடியும். அவளது சேட்டைகளும் வார்த்தைகளும் தனது திடமான

விரதத்தில் கீறல்களை ஏற்படுத்தும். இத்தனை நாளாக வெகுதொலைவில் நிறுத்தி வைத்திருக்கும் பெண்ணின்ப வேட்கை தன் இதயத்தின் நுழைவாசலைத் தள்ளித் திறந்து, இதயப்பீடத்திற்குள் நுழைந்து மணியோசையை எழுப்பும். மணியோசை உயரும்போது பூஜை நடத்த மனம் ஆவேசமடையும். மீனாக்ஷி என்கிற அழகி பூஜைக்குரிய விக்கிரகமாக மாறி விடுவாள்!

எப்போதோ வேருடன் பிடுங்கி எறிந்த விக்கிரகத்தைத் தன் கரங்களால் மறுபடி பிரதிஷ்டை செய்து பூஜையும் நைவேத்தியமும் நடத்தும் பட்சத்தில், பரிசுத்தமானதாகப் பாதுகாக்கப்படும் பிரம்மச்சரியத்தை உடல் சுகத்தின் பலிக்கல்லில் உடைத்துக் காணிக்கையாக அர்ப்பணிக்க நேரும்.

கூடாது! இதயத்திற்கு ஆத்மபலத்தால் சக்தி ஊட்டியே தீரவேண்டும். மனத்தைச் சஞ்சலப்பட அனுமதிக்காமல் மனோபலம் என்கிற பாதுகாப்பான வளையத்திற்குள் பத்திரப் படுத்தியே தீரவேண்டும்!

இருளின் தடையை ஊடுருவிக் கொண்டு தங்கள் இருவரது கண்களும் ஒன்றுடன் ஒன்று மோதிக் கொள்ளவில்லையா? பூர்வகால சம்பவங்களை நினைத்துப் பார்க்க இந்த இரு மனங்களும் ஏங்கவில்லையா?

கூடாது! தன் கண்களைக் கட்டுப்படுத்தியே தீரவேண்டும். தான் ஒரு பிரம்மச்சாரி, மாந்திரீகன், சாத்வீகமானவனும் கூட!

பின்வாங்கிக் கொட்டாரத்திற்குள் மறைந்துவிட்டால் என்ன? மீனாக்ஷி படிப்புரையைத் தாண்டி உள்ளே வரத் துணிய மாட்டாள்.

ஒருவேளை என்ன நடந்தாலும் நடக்கட்டுமென்று உள்ளே வந்து விட்டால்...? விரட்டி வெளியேற்றத் தன்னால் முடியாமல் போகும். தன்னுடைய பலவீனங்களின் நரம்புகளைத் தொட்டு எழுப்புவது மீனாக்ஷிக்குச் சுலபம். அப்படி ஏதாவதொன்று நடந்துவிட்டால்?

ஆபத்தின் கோபுரவாசலில் நின்று கொண்டிருக்கிறோம் என்பதை நினைவுகூர்ந்த குமாரன்தம்பி, வியர்வையில்



நனைந்தான். மனத்திற்குள் பயம் சங்கூத ஆரம்பித்து விட்டது. தவிப்பு என்ற பஞ்சவாத்தியம் இசைக்கத் தொடங்கி விட்டது. திடுமென்று ஏற்பட்ட தளர்ச்சி உடலை மண்டியிடச் செய்தது. அவன் செயலற்றவனாக நின்று போனான்.

குமாரன்தம்பியிடம் ஏற்பட்ட உணர்ச்சி மாறுபாடுகளை உன்னிப்பாகக் கவனித்த மீனாக்ஷி கூப்பிய கைகளை உயர்த்திப் பணிவான குரலில் கூறினாள்: "நீங்க வீணா குழம்ப வேண்டிய தில்லை. நான் பழைய மீனாக்ஷி இல்ல. உங்ககிட்ட ஒரு முக்கிய மான விஷயத்தைச் சொல்றதுக்காக வந்தேன். அதுதான் இங்கயே நின்னுட்டிருக்கேன்."

"என்ன விஷயம்?"

"என் மகள் கோமதிக்கு ஏதோ ஓர் ஆவி தொல்லை கொடுக்குது. ரொம்ப நாளா பைத்தியக்காரி மாதிரி அலறியும், உளறியும் திரியுறா. தொல்லையைத் தாங்க முடியலை அதனால தான் வந்திருக்கிறேன். நீங்க என் வீடு வரைக்கும் வந்து விபூதி ஜபித்துத் தந்தா கோமதியோட தொல்லை விலகிடும்."

உடுத்தியிருந்த முண்டின் (வேட்டி) ஒரு முனையை எடுத்துக் கண்களைத் துடைத்தபடி, துயரக் குரலில் அவள் தொடர்ந்தாள்: "சூரக்காட்டு இல்லத்துப் பட்டேரியைக் கூட்டிட்டுவந்து பார்க்கலாம்னு அவளோட அப்பா சொல்றார். துர்மந்திரவாதியும் கெடுதல் செய்யுறவருமான அவரை வீட்டிற்குள்ள ஏத்தறது எப்படி? இந்த மீனாக்ஷி கெட்டுப் போனவதான். ஆனால், நீங்க மந்திரவாதி யானதிலேர்ந்து நான் சுத்தமானவளா இருக்கேன். தப்பா ஏதாவது மனசுக்குத் தோணிச்சுன்னா குப்புறப்படுத்துட்டு நாமம் ஜபிப்பேன். குழந்தைகளுக்கும் வயசாகிட்டே போகுது. இனிமேலாவது கெட்ட பேர் வாங்கக் கூடாதுன்னு நெனைக்கிறேன்."

மீனாக்ஷியிடமிருந்து இரக்கத்திற்குரிய விசும்பல் ஒன்று உயர்ந்தது. அந்த விசும்பல் குமாரனின் மனத்திற்குள் ஒரு பதைபதைப்பை ஏற்படுத்தியது. அவனது மனத்தில் எழுந்த பயத்தின் கனம் குறைந்தது. உத்வேகம் ஓடி மறைந்தது. சந்தேகம்

விடை பெற்றது. மனத்தில் இரக்கத்தின் மத்தாப்பு மலர்ந்தது. இதயம் நெகிழ்ந்தது. விழிகள் நிறைந்தன.

உடம்பு இப்போது லேசாகிவிட்டிருந்தது. மனத்திற்குள் மீனாக்ஷியிடம் கருணையின் குலவைப்பூக்கள் உயர்ந்தன.

மீனாக்ஷியைக் குறித்துத் தான் தவறாக என்னவெல்லாம் நினைத்து விட்டோம்? சொந்த மகள் ஆபத்தில் அகப்பட்டுக் கொண்டபோது அதற்கொரு வழி தேடி வந்திருக்கிறாள் பாவம்!

திருமணத்திற்குத் தயாராக இருப்பவள் கோமதி. ஒருவேளை காக்காய்வலிப்பு அவளது நோயாக இருக்கலாம். அல்லது ஏதோ ஓர் ஆவியால் ஏற்பட்ட தொல்லையாக இருக்கலாம். ஒருவேளை கந்தர்வன்கூட அவளைப் பீடித்திருக்கலாம்.

காரணம் என்னவாக இருந்தாலும் இந்த நேரத்தில் அவளுடன் அவளது வீட்டிற்குச் செல்வது நல்லதல்ல. கோயிலின் மேற்கு வாசலை ஒட்டி தென்புறம் சென்று வயல் வரப்பில் இறங்கி நடந்தால் அவளது வீட்டை அடையலாம். முன்பெல்லாம் இரவு பகல் பேதமில்லாமல் எந்த நேரத்திலும் அவளுடைய வீட்டிற்குச் செல்வதுண்டு. அன்றெல்லாம் மீனாக்ஷி தனக்கொரு போதையாகவே இருந்தாள். பித்துப்பிடிக்க வைத்திருந்தாள். அதெல்லாம் பழங்கதை. புதைக்கப்பட்ட கதைகள். அதைப் பற்றிய நினைவுகள்கூட இனிமேல் தன் மனத்திற்குள் நுழையக்கூடாது.

ஒரு பெருமூச்செறிந்து கண்களை இறுக்கி மூடித் திறந்த பிறகு குமாரன்தம்பி மந்திரிப்பது போலப் பேசினான்: "கோமதியைப் புத்தூர் வீட்டுக்குக் கொண்டு வரக்கூடாதா?"

"நானும் அவளோட அப்பாவும் எவ்வளவோ முயற்சி பண்ணினோம். தெருவுல இழுத்துட்டு வரமுடியுமா? வயசுக்கு வந்த பெண்ணுக்கு இப்படி ஒரு பிரச்சினை இருக்கிறதா ஊரார் தெரிஞ்சுக்கிட்டா அது அவமானமில்லையா? பைத்தியக்காரி என்கிற பேரும் சேர்ந்துட்டா அதுக்குப் பிறகு யாராவது அவளைக் கல்யாணம் பண்ணிக்க விரும்புவாங்களா? என் வீட்டுக்கு வர்றதை நீங்க அவமானமான விஷயமா நெனைச்சா, வரவேணாம். என்



பொண்ணு செத்தே போகட்டும்!" - மீனாக்ஷி விசும்பி அழத் தொடங்கினாள்.

தர்மசங்கடத்தில் அகப்பட்ட குமாரன்தம்பி சுற்றுமுற்றும் பார்த்தான். இரவை நெருங்கும் இந்த நேரத்தில் தான் மீனாக்ஷியுடன் பேசிக் கொண்டிருப்பதை யாராவது கவனிக்கிறார்களோ என்று பதைபதைத்தான். சுற்றுப்புறம் ஆள்நடமாட்டம் இல்லாதிருப்பது புரிந்ததும் ஆறுதலடைந்தான்.

சாந்தமான குரலில் அவன் பேசத் தொடங்கினான்: "மீனாக்ஷி, தவறா நினைக்காதே. நான் வீட்டுக்கு வெளியில எந்தவிதமான மாந்திரீகக் கர்மங்களையும் செய்றதில்லை. என் வீட்டிலோ இந்தக் கொட்டாரத்திலோ மட்டுமே தியானம் செய்றது வழக்கம். எங்க குடும்ப மாந்திரீகர்களின் பழக்கமும் அதுதான். நீ ஒரு காரியம் செய். கொஞ்ச நேரத்திற்குப் பிறகு கோபாலனை என் வீட்டுக்கு அனுப்பு. நான் விபூதியோ, கயிறோ ஜபிச்சுக் கொடுத்தனுப்புறேன். இப்படிப்பட்டவங்களை நான் நேரில பார்க்கலேன்னாலும்கூட மந்திரம் ஜபிச்சுக் குணப்படுத்த முடியும்."

"ஐயோ, அவளோட அப்பா கஞ்சா அடிச்சு சுயநினைவில்லாம வீட்டுக்குள்ள ஒரு மூலையில விழுந்து கிடக்கிறார். பையன் காபிக்கடையில வியாபாரம் பண்ணிட்டிருக்கான். அஷ்டமி-ரோகிணி நாளானதால கடையிலயும் நல்ல வியாபாரம்."

"அப்ப ஒண்ணு செய். நீயே புத்தூர் வீட்டுக்கு வா!"

"சாமி, என்னை மன்னிச்சிடுங்க." ஒரு நிமிட இடைவெளிக்குப் பிறகு அவள் தொடர்ந்தாள்: "புத்தூர் வீட்டு மாந்திரீகர்கள் பாம்பு கடிச்சவங்களுக்கு விஷம் இறக்க வீட்டைவிட்டு வெளியே வரமாட்டாங்கன்னு கேள்விப்பட்டிருக்கேன். என் மகளைப் பாம்பு கடிக்கலை. அவளுக்கு ஆவித் தொல்லை. வீடு வரைக்கும் வந்து என்ன ஏதுன்னு தெரிஞ்சுட்டுப் பரிகாரம் பண்ண உங்களுக்கு மனசிருந்தா என்கூட வீட்டுக்கு வாங்க. இந்த மீனாக்ஷிகிட்ட தயவு காட்ட வேண்டிய கடமை உங்களுக்கு இல்லையா? மாந்திரீகனானதும் பழைய விஷயங்களை ஒட்டுமொத்தமாவா மறந்து போயிட்டீங்க?"

மீனாக்ஷி தேம்பி அழத் தொடங்கினாள். வலது கையை உயர்த்தி தன் தலையிலும் நெஞ்சிலுமாக வலுவுடன் அடித்தபடி தொடர்ந்தாள் : "ஒரு காலத்தில இந்த மீனாக்ஷியை சக்கையா பிழிஞ்செடுத்தவர் இந்த குமாரன்தம்பி. என் பிள்ளைகளின் அப்பாவைப் பக்கத்துல வெச்சுக்கிட்டே உங்களைச் சந்தோஷப்படுத்தினவ இந்த மீனாக்ஷி. இல்லைன்னாலும் எனக்குத் தெரிஞ்சதுதான். ஊரானுடைய கோழிக்கு இறகைப் பிடுங்கினால் கோழியும் கிடைக்காது, இறகும் கிடைக்காது. என் பெண் சாகக் கிடக்கிறா. ஊரிலேயே பெரிய மந்திரவாதி எனக்குச் சொந்தம்தான். இருந்தும் எனக்கென்ன பிரயோஜனம்?" அழுது புலம்பினாள்.

குமாரன்தம்பிக்கு ஏதோ பொறிக்குள் அகப்பட்டுக் கொண்டது போலிருந்தது. இவளுடன் விவாதிப்பதில் பலனேதுமில்லை. பிடிவாதக்காரியான இவளுடைய நடவடிக்கைகள் தனக்கு நன்றாகவே தெரியும். அந்த நாட்களில் இவள் இது மாதிரியெல்லாம் கெஞ்சிக் கொண்டிருக்க மாட்டாள். மாந்திரீகனிடம் உள்ள மரியாதைதான் இவளைக் கடிவாளமிட்டு நிறுத்திவைத்திருக்கிறது. அந்த மரியாதை கோபத்துடன் கலந்துவிட்டால் மீனாக்ஷியின் குணம் மாறிவிடவும் கூடும்.

பாம்பு விஷத்தை இறக்கும் கர்மம் செய்ய வீட்டிற்கு வெளியே போகக்கூடாது என்ற நியதி இருப்பதாக இவள் சொன்னது சரிதான். ஆவி மற்றும் யக்ஷித் தொந்தரவுகளை அகற்ற மாந்திரீகன் வீட்டைவிட்டு வெளியே போவதில் எந்தவிதமான தடையும் கிடையாது. ஆனால், புத்தூர் வீட்டு மாந்திரீகர்கள் அப்படியும் செய்வதில்லை என்பது வேறு விஷயம்.

இவளுடைய மகளுக்கு மோசமான பாதிப்பு ஏதாவது ஏற்பட்டிருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஊராரிடம் நல்லதோர் அபிப்பிராயமில்லாத மீனாக்ஷி, இங்கு வந்து இந்த அளவிற்கு அழுது புலம்ப மாட்டாள். உயிர் மீது ஆசையுள்ள எந்த ஒரு பெண்ணும் வெள்ளிக்கிழமையும் அதுவுமாக, மாலைக்கருக்கலில் கொட்டாரத்திற்கு அருகே வரமாட்டார்கள். சொந்த மகளின் ஆபத்தான நிலைமைதான் அவளை இப்படியொரு சாகசம் செய்யத் தூண்டியிருக்கவேண்டும். வீட்டிற்குச் சென்று



விபூதியையோ, கயிறையோ மந்திரித்து எடுத்துக்கொண்டு இவளுடைய வீட்டிற்குப் போவதில் தவறேதும் இல்லை.

சாதாரணமாகவே மீனாக்ஷியின் வீட்டிற்குச் செல்ல நான் எதற்காகப் பயப்பட வேண்டும்? கருடத் தியானத்தில் மனத்தை ஈடுபடுத்தி, ஹனுமான் மந்திரங்களை நினைவுகூர்ந்து, தேவி மந்திரங்களை உருப்போட்டபடி, எப்படிப்பட்ட சுரசுந்தரியையும் தன்னால் சந்திக்க முடியுமே!

உடல் கட்டமைப்பில் மீனாக்ஷிக்குச் சற்றும் சளைக்காத நாணிக்குட்டி படுத்துறங்கும் புத்தூர் வீட்டிற்குள் குறுகிய ஒரு நடுமுற்றத்தின் இடைவெளியில் கைக்கெட்டும் தொலைவில் எத்தனையோ இரவுகள் படுத்திருந்தும் காம உணர்விற்குத் தான் அடிமைப்பட்டதில்லையே? இருளின் மறைவில் நாணிக்குட்டி தன்னை நெருங்குவதை மோப்பம் பிடித்த அந்த வினாடியிலேயே மனம் நொந்து கிருஷ்ணப்பருந்தை அழைத்து பிரம்மச்சரியத்தைக் காப்பாற்றிக் கொண்டவனல்லவா நான்!

வடயக்ஷிணியின் மனம் மயக்கும் பேரழகை நேரில் பார்த்து ஒரு கணம் தடுமாறியபோதும் தேவியின் நினைவல்லவா தன்னைக் காப்பாற்றியது?

அற்புதமான மாந்திரீக ஸித்தியின் உடைமையாளனான நான் எதற்காக உடல் வாளிப்புள்ள மீனாக்ஷியிடம் 'மயங்கி விடுவோம்' என்று பயப்பட வேண்டும்?

புதியதொரு தைரியம் கைவரப் பெற்றவனாக குமாரன்தம்பி பதிலளித்தான்: "சரி, நீ புறப்படு. நான் வீட்டிற்குப் போய் விபூதியை ஜபித்து எடுத்துக் கொண்டு ஒரு நாழிகைக்குள் உன் வீட்டிற்கு வருகிறேன்."

"ஜபிப்பதற்கான கொஞ்சம் விபூதி என் வீட்டில இருக்காதா என்ன. ஏன் நீங்க என் வீட்டிலேயே வந்து விபூதியை ஜபிச்சுத் தரக்கூடாதா?"

"அது கூடாது. எங்க தறவாட்டு நிலவறையில்தான் விபூதியை ஜபிப்பது வழக்கம். அது மட்டுமல்ல, என்னுடைய வழக்கமான கருட சேவையை முடித்துக்கொண்ட பிறகுதான் வர முடியும்!"

சரியென்பதற்கு அடையாளமாகத் தலையாட்டிய மீனாக்ஷி அங்கிருந்து புறப்பட்டாள். படிப்புரையை மூடிவிட்டு குமாரன்தம்பி சாலையில் இறங்கினான். கோயிலில் இரவு பூஜைக்கான வாத்தியங்கள் ஒலிக்க ஆரம்பித்திருந்தன. மயில்வாகனனான சுப்ரமண்யனை மனத்திற்குள் நினைத்தபடி அவன் மெதுவாகத் தனது வீட்டை நோக்கி நடந்தான்.

# 24

கோயிலின் முன்புறத்தை அடைந்த குமாரன்தம்பி கைகூப்பித் தொழுதான். இரவு பூஜை நடந்து கொண்டிருந்தது. பஞ்சவாத்தியங்களின் நாத அலைகள் காதுகளைக் குளிரச் செய்தன. முழுச்சந்தனக்காப்புடன் மயில்வாகனத்தில் தோற்றமளித்த வேலாயுதனின் கோமளவதனம் மனத்தின் மணிமுற்றத்தில் திவ்வியமாகக் காட்சியளித்தது.

"வேலாயுத ஸ்வாமியே காப்பாத்துங்க!'' அவன் பிரார்த்தித்தான்.

ஒரு சில நிமிடங்கள் தியானம் செய்துவிட்டு நடக்கத் தொடங்கியபோது, "உங்களைத்தானே!"- என்ற அழைப்பைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். தவில்கார குட்டப்பமாரார் வணங்கியபடி தென்பட்டார்.

"என்ன மாராரே! என்ன விசேஷம்?" குமாரன்தம்பி குசலம் விசாரித்தான்.



"வண்டி அப்படியே ஓடிட்டிருக்கு. ஆமாம், உங்களைப் பாக்கவே முடியலையே?"

"இது ஒரு புது வாழ்க்கை இல்லையா மாராரே! பழையபடி ஊரைச் சுத்தீட்டு அலைய முடியுமா?"

"அதெல்லாம் தேவையே இல்லை. நீங்க ஒரு பெரிய மாந்திரீகனாயிட்டா போதும். ஊராருக்கு ஒரு ஆபத்துன்னா உங்ககிட்டத்தானே சட்டுன்னு ஓடி வரணும். உங்களோட மேன்மையைப் பத்தித்தான் இப்ப ஊரே பேசுது. எல்லாம் வேலாயுத ஸ்வாமியோட அனுக்கிரகம்."

மாராரின் புகழ்வார்த்தைகள் குமாரன்தம்பிக்குப் பெருமிதம் அளித்தன. தன் கடந்தகால வாழ்க்கை திருத்தி எழுதப்பட்டுள்ளது. மாராரின் முகச்சுளிப்பிற்கு ஆளாகியிருந்த தான், இப்போது மரியாதைக்குரியவனாகி இருக்கிறோம்!

கோயிலின் முன்புறமிருந்த யானைக் கொட்டடியிலும் மீனாக்ஷியின் வீட்டிலும் குட்டப்பமாராருடனும் கோபாலனுடனும் சேர்ந்து கஞ்சா புகைத்த பழைய காட்சிகள் அவனது நினைவில் எழுந்தன.

மாராரின் வீட்டிற்குள் உட்கார்ந்து எத்தனையோ தடவை மது அருந்தியிருக்கிறோம். மீனாக்ஷியுடன் ஒப்பிடக்கூடிய அளவுக்கு அழகியென்று சொல்ல முடியாவிட்டாலும், மாராரின் மனைவி பாறுக்குட்டியை மோசமென்று சொல்லிவிட முடியாது. அவளும் தன்னுடைய போகப் பொருளாக விளங்கியவள்தான்.

மனத்தின் பெருமிதம், ஆத்மநிந்தனைக்கு ஒதுங்கி வழிவிட்டது. நல்லதல்லாத பூர்வகால நினைவுகள் ஆயிரங்கால் பூச்சிகளாக மூளைக்குள் அலைந்து திரிந்தன. தலை தானாகவே தாழ்ந்தது. பாதங்கள் மரத்தன. நெஞ்சிற்குள் குற்றவுணர்வு குலவையிட்டது.

"சரி அப்புறம் பார்ப்போம்"-என்ற குமாரன்தம்பி நடக்கத் தொடங்கினான். அவனைப் பின்தொடர்ந்த மாரார் தொண்டையை லேசாகக் கனைத்தார்.

"என்ன மாராரே?"

"ஒரு விஷயம் சொல்லணும்!"

"என்ன விஷயம்?"

"நம்ம மீனாக்ஷியும் தூரக்காட்டு இல்லத்து நம்பூதிரியும் சேர்ந்து என்னென்னவோ திட்டம் போடுறாங்க போலிருக்கு!"

"ங்... ஆ?"- குமாரன்தம்பி திடுக்கிட்டுத் திரும்பி நின்றான்.

"நேத்துச் சாயங்காலம் திருமேனி மீனாக்ஷியைப் பார்க்க கோயிலுக்கு வந்திருந்தார். தேவஸ்தான ஆபீஸுக்கு முன்னால ரொம்ப நேரம் பேசிட்டிருந்தாங்க. அவள் பயந்தமாதிரி இருந்தாள். என்ன விஷயம்னு நான் கேட்டபோது என்மேல எரிஞ்சு விழுந்தாள். இப்ப கொஞ்ச நேரத்திற்கு முன்னால பட்டேரித் திருமேனியும் அவளும் கோயில் மடப்பள்ளித் திண்ணையில ரகசியமா பேசிட்டிருந்தாங்க. அப்புறம் அவள் வடக்குப்புறமாப் போனாள். திருமேனி சாதாரணமா இந்தப் பக்கமெல்லாம் வர்றதில்லை. எனக்கு என்னவோ சந்தேகமா இருக்கு, குமாரன்தம்பி!"-குட்டப்ப மாராரின் குரல் தழுதழுப்புடன் ஒலித்தது.

மனத்திற்குள் தோன்றிய திகைப்பை வெளிக்காட்டாமல் குமாரன்தம்பி கேட்டான்: "மீனாக்ஷியோட வீட்டில ஏதாவது விசேஷமா என்ன? அவளோட பொண்ணுக்கு உடம்பு சரியில்லேன்னு கேள்விப்பட்டேன். உண்மையா?"

"யாருக்கு, கோமதிக்கா? அவளும் அவ தம்பியும் அப்பாவும் கடையிலதான இருக்காங்க? அஷ்டமி, ரோகிணியானதால நல்ல வியாபாரம்? கொஞ்ச நேரத்துக்கு முன்னாலகூட நான் அங்க காபி சாப்பிடப் போயிருந்தேனே!"

"சரி, மாராரே! நீங்க புறப்படுங்க. நேரமாயிடுச்சு. வீட்டுக்குப்போய் நான் தியானம் பண்ணணும். வரட்டுமா?" விடைபெற்ற குமாரன்தம்பி வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான்.



அவனுடைய மனத்தில் கோபம் கொதித்துக் கொண்டிருந்தது. மீனாக்ஷியைப் பகடையாகப் பயன்படுத்தி, பட்டேரி தனது அடுத்த முயற்சியைத் தொடங்கியிருக்கிறார் என்பது தெளிவாகிறது. பெண் மனசு வைத்தால் எதுவும் நடந்து விடுமென்று அந்த முட்டாள் நினைத்திருக்கிறான். பட்டேரியைச் சந்தோஷப்படுத்த மீனாக்ஷியும் உடன்பட்டிருக்கிறாள். நன்றி கெட்டவள்!

சற்று முன்னால் தன்னிடம் எவ்வளவு அபாரமாக நடித்தாள்! சுத்தமான மனங்கொண்ட தானும் மீனாக்ஷியைச் சந்தேகிக்கவில்லை. இப்போதுதான் அவளது வார்த்தைகளில் ஒளிந்திருந்த கபடம் புரிகிறது.

மகளது உபாதைக்காக தூரக்காட்டு பட்டத்திரியிடம் போகலாமென்று கோபாலன் சொன்னதாக அவள் அூசகப்படுத்தியபோதே அவள் மீது சந்தேகப்பட்டிருக்க வேண்டும். அப்பாவியும் மனைவியின் கைப்பாவையுமான கோபாலன் ஒருபோதும் அப்படிச் சொல்லியிருக்க மாட்டான். அது மட்டுமல்ல, ஆவியை உடலில் புகுத்துவதைத் தவிர, உபாதையை நீக்க பட்டத்திரி மந்திரம் செய்வதில்லை என்பது கோபாலனுக்கும் நன்றாகத் தெரியும்.

கோபாலன் கஞ்சாவின் போதையில் வீட்டு மூலையில் சுயநினைவற்றுப் படுத்திருப்பதாக அவள் சொன்னதில்கூட திருட்டுத்தனத்தின் ஒளியம்பு இருக்கிறது. கோபாலனும் அவனது குழந்தைகளும் கடையில் வியாபாரம் செய்வதாக குட்டப்பமாரார் சொன்னார். மாரார் பொய் சொல்லமாட்டார்!

ஒரு காலத்தில் தன்னை உயிராக நினைத்திருந்த மீனாக்ஷி, வஞ்சகத் திட்டத்துடன் தன்னை ஆபத்திற்குட்படுத்த கச்சை கட்டுவாள் என்பதை இப்போதும் நம்புவதற்குச் சிரமமாக உள்ளது.

தான் அவளுக்கு எந்தவிதமான துரோகமும் செய்யவில்லை. மாந்திரீகனாக மாறிவிட்டதால், அவளை அணுகவில்லை என்கிற உண்மை அவளுக்கே தெரியும். சொல்லப் போனால், மாந்திரீகர்கள் என்றாலே இவள் பயப்படுபவள்; மதிப்பளிப்பவள்.

கண்ணை மூடிக்கொண்டு யாரையும் நம்பி விடாதே என்றல்லவா இந்த அனுபவங்கள் எச்சரிக்கின்றன?

தனது ஆயுளின் பெரும்பாலான பகுதியை புத்தூர் தறவாட்டில் காரியஸ்தராகச் செலவிட்டவர் குமாராசார். வயதான காலத்தில் அவர் செய்த வேலை எப்படிப்பட்டது? இந்தக் கையை அல்லவா அந்தப் பைத்தியக்கார நாய் கடித்தது? கந்தர்வனின் துணையுடன் புத்தூர் வீட்டின் குடும்பத்தலைவியைக் கொல்வதற்காகப் பட்டேரி செய்த துர்மந்திரவாதத்திற்கு உடந்தையாக அல்லவா இருந்திருக்கிறார்? ரக்ஷைஸ அனுப்பி புத்தூர் வீட்டைச் சேர்ந்த சித்தியையும் சின்னக் குழந்தைகளையும் அழிக்கப் பட்டடேரிக்குத் துணை நிற்கவில்லையா? நள்ளிரவில் தறவாட்டு நிலவறையில் நடந்த ரகசிய கர்மங்களை பட்டேரிக்குத் தெரிவிப்பதற்காக ஒளிந்திருந்து கவனித்து ஒற்றுவேலை செய்யவில்லையா அவர்?

குமாராசாருக்கு இப்படிப்பட்ட பாவகாரியங்களைச் செய்ய மனம் வந்தது என்றால், தவறான நடத்தையுள்ள மீனாக்ஷிக்கு, இப்படியொரு சதிச்செயலில் ஈடுபட மனம் வந்ததில் வியப்படைய என்ன இருக்கிறது?

என்ன இருந்தாலும் முன்னோக்கி எடுத்து வைக்கும் ஒவ்வொரு காலடியையும் எச்சரிக்கையுடன் வைக்க வேண்டும். பட்டேரி என்கிற பகையாளி தருணம் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

வீட்டு முற்றத்தை அடைந்தபோது குமாரன்தம்பி சிந்தனைகளின் பிடியிலிருந்து விடுபட்டான். கை கால்களைக் கழுவிக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்தான்.

அறப்புரை வாசலில் நிலவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. அவன் வழக்கம் போல் கருட சேவையைத் தொடங்கினான்.

தியானம் முடிந்த பிறகும் அவன் கண்களைத் திறக்கவில்லை. “கருட பகவானே! என்னைக் காப்பாற்றுங்கள். என் மனம் தடுமாறாமல் பார்த்துக் கொள்ளுங்கள்” அவன் மனமாரப் பிரார்த்தனை செய்தான்.



தீபத்துடன் அவன் நிலவறைக்குச் சென்றான். பத்மாசனமிட்டு அமர்ந்து தேவியின் வடிவத்தை மனத்தில் வரவழைத்தான். அன்னபூர்ணேஸ்வரி மனத்தின் கருவறையில் வெளிப்பட்டதாகத் தெரிந்தது.

சமீபத்தில்தான் அன்னபூர்ணேஸ்வரி மந்திரங்களை அக்ஷர (ஒவ்வோர் எழுத்துக்கும் ஒரு) லட்சம் தடவை பக்தி பூர்வமாக ஜபித்து, பசு நெய் கலந்த கைக்குத்தலரிசி அன்னத்தால் பத்தாயிரம் தடவை ஹோமித்திருந்தான். இது தவிர த்ரிகோணம் (யந்திரம்), நான்கு தளங்கள் அதற்குப் பிறகு பதினாறு தளங்கள், பூபுரம் என்ற வரிசையில் தயாரான பூஜை சக்கரத்தில் தேவியை ஆவாஹம் செய்து பக்தி பூர்வமாகப் பூஜை செய்து மந்திரஸித்தி கைவரப் பெற்றிருந்தான்.

அன்னபூர்ணேஸ்வரி மந்திரத்தின் சந்தநயம் மிக்க வார்த்தைகள் அவனையும் மீறி அவனது நாவிலிருந்து உதிர்ந்தன.

*த்ருஹிண: க்ருஷி: க்ருதிச்சந்த:*
*அன்னபூர்ணேஸ்வரி தேவதா*

தொடர்ந்து தியான மந்திரஜபம்:

*தப்த ஸ்வர்ண்ணநிபா சசாங்க முகுடா*
*ரத்ன ப்ரபா பாஸீரா*
*நானாவஸ்த்ரவிராஜிதா த்ரிநயனா*
*ப்ரமீரமாப்யாம் யுதா,*
*தர்வீம் ஹாடகபாஜனம் சததீ*
*ரம்யோச்சபீனஸ்தனி*
*ந்ருத்யந்தம் சிவமாகலய்ய முதிதா-*
*ன்னத்யோயான பூர்ணேஸ்வரி.*

(உருக்கிய தங்கநிற வண்ணத்துடனும், சந்திரப்பிறை மின்னும் பளபளத்த கிரீடத்துடனும், ரத்ன சோபையுடனும், விதவிதமான உடைகளின் ஒளியுடனும், முக்கண்களுடனும், சர்ப்பம் (பாம்பு) தங்கநிற மதுக்கிண்ணத்துடனும், அழகான

திரண்ட மார்பகங்களுடனும் சிவதாண்டவ நடனத்தைப் பார்த்த மகிழ்ச்சியுடனும் விளங்குகிற அன்னபூர்ணேஸ்வரி, உன்னை நான் தியானிக்கிறேன்.)

*ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்ளீம் நம:*
*பகவதி மகேஸ்வரி அன்னபூர்ணா ஸ்வாஹா*
*ஓம் ஹ்ரீம் நம: பகவதி*
*மகேஸ்வரி அன்னபூர்ணே ஸ்வாஹா*
*ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் க்ளீம் நம: பகவதி*
*மகேஸ்வரி மமாபிமத மன்னம்*
*தேஹி தேஹி அன்னபூர்ணே ஸ்வாஹா*
*ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் நமோ பகவதி*
*பிரசன்ன பாரிஜாதேஸ்வரி*
*அன்னபூர்ணே ஸ்வாஹா*
*ஓம் ஹ்ரீம் ஸ்ரீம் நமோ பகவதி*
*மாகேஸ்வரீ பிரசன்னவரதே*
*அன்னபூர்ணே ஸ்வாஹா*

மந்திர ஜபம் முடிவடைந்தபோது, தேவி புன்னகைத்தவாறு நிற்பதாகத் தோன்றியது. திருக்கரத்தை உயர்த்தி ஆசீர்வதித்துக் கொண்டிருந்தாள் பரமேஸ்வரி.

"மஹாமாயே; துர்மந்திரவாதியின் வஞ்சக நோக்கத்தை எனக்குக் காட்டித்தர வேண்டும்"-மாந்திரீகன் மனம்விட்டுப் பிரார்த்தித்தான்.

இதோ... தன் மனக்கண்களுக்கு முன்பாக மிகவும் குறைவாக உடையணிந்த ஒரு பெண்ணின் உருவம். மீனாக்ஷியின் உன்மத்த மேற்படுத்தும் வடிவம்! படுக்கையறையின் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து அரை நிர்வாண உடலின் மீது சுகந்தத் தைலம் தேய்த்துக் கொண்டிருக்கிறாள்! அவ்வப்போது ஜன்னல் வழியே சிருங்கார உணர்வுடன் ஓரக்கண்ணால் வெளிப்புறம் பார்க்கிறாள். ஒரு சன்னமான துணியை இடுப்பில் அலட்சியமாக உடுத்தியிருந்த மீனாக்ஷி இரண்டு முழங்கைகளையும் தலையணையில் ஊன்றி



எதையும் பொருட்படுத்தாதவளாகக் கட்டிலில் படுத்துக் கொண்டிருக்கிறாள்.

"அடி துரோகி!"-குமாரன்தம்பி சுற்றுப்புறத்தை மறந்து உரத்த குரலில் அலறினான்.

"தேவிகடாட்சம் காரணமாக ஞானதிருஷ்டி கிடைத்த எனக்கு ஆஞ்சநேயரே, ஹனுமானே அனுக்கிரகம் செய்யுங்கள்"- அவனது மனம் ஹனுமானில் ஒன்றிக் கலந்தது. ஸ்ரீராமபக்தனான ஸ்ரீ ஹனுமான் மனக்கண்களில் தென்பட்டார். அவரது அலறல் அவனது காதுகளில் கேட்டது.

குமாரன்தம்பி எழுந்து நிலவறையின் கதவை மூடிவிட்டு வீட்டின் தென்புறத் தளத்திற்கு வந்தான். சற்றுநேரம் யோசித்த பிறகு ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவனைப் போல் மாந்திரீகப் பிரம்பை வலது கையில் எடுத்தான்.

"அம்மா, நான் கொஞ்ச நேரத்துல வந்துடுறேன்" சாப்பாடு பரிமாறிவிட்டு மகனுக்காகக் காத்திருந்த அம்மாவிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டான் குமாரன்தம்பி.

"இந்த ராத்திரி வேளையில எங்க போற குமாரா? நீ சாப்பிட வேணாமா?"

"மேல் சாந்தி (கோயில் கருவறைக்குள் பூஜை செய்யும் பூசாரியின்) மடம் (வீடு) வரை போய்ட்டு வந்துடுறேன். இன்னிக்கு எனக்கு சாப்பாடு வேணாம்"-மனப்பூர்வமாக அம்மாவிடம் பொய் சொல்லிவிட்டு வீட்டிலிருந்து வெளியேறினான்.

# 25

'நான்கு வழித்துணைவர்கள் என்னுடன் இருக்கிறார்களே!' மீனாக்ஷியின் வீட்டை நோக்கி நடந்த குமாரன்தம்பி யோசனையில் ஆழ்ந்தான். தன்னைக் காக்கும் வல்லமையுள்ள நான்கு

வழித்துணைவர்கள்: புவனேஸ்வரியான பரமேஸ்வரி, விஷமழிக்கும் கிருஷ்ணப்பருந்து, சக்தியே வடிவமான வாயுபுத்ரன், புத்தூர் தறவாட்டின் மாந்திரீகச் சகதி வாய்ந்த மந்திரப் பிரம்பு, இவையெல்லாம் துணையுள்ள போது உண்மையில் நான் யார்? வல்லவன்! பலம் பொருந்தியவன்!

'மீனாக்ஷி! நான் இதோ வர்றேன். எந்தவிதமான ஆவித் தொல்லையை உனக்கு அகற்றித் தரவேண்டும் சொல்! அதற்கு நீயும் தயாராக இரு. புத்தூர் தறவாட்டு மாந்திரீகன் இதோ இன்னும் சில நிமிடங்களில் உன் வீட்டை அடைந்து விடுவான்.'

மீனாக்ஷியின் படுக்கை அறையில் மண்ணெண்ணை விளக்கு எரிந்துகொண்டிருந்தது. சன்னமான குரலில் முனகும் ஏதோ பாடல் வரிகளும் கேட்டன.

பரிமளத் தைலம் மற்றும் வாசனைப் பொருட்களைக் கலந்து காய்ச்சிய தேங்காய் எண்ணெயின் மணமும் ஒன்றாகச் சேர்ந்து சுகந்தம் அலையடித்துக் கொண்டிருந்தது அந்த வீட்டின் சுற்றுப்புறத்தில். சிந்தனையிலிருந்து விடுபட்ட குமாரன்தம்பி வீட்டின் முற்றத்தில் வந்து நின்றான்.

சுகந்தப் பொருள்களுடன் மீனாக்ஷிக்குள்ள ஈடுபாட்டை அவன் நினைவுகூர்ந்தான். கற்பூரமிட்டுக் காய்ச்சிய எண்ணெயைத் தேய்த்துக் குளித்துவிட்டு, உடல் முழுவதும் சுகந்தத் தைலம் பூசிக் கொண்டுதான் அவள் சுரதக் கலையில் ஈடுபடுவாள். வெற்றிலை போடும்போதுகூட வாசனைச் சுண்ணாம்பையும் தளிர் வெற்றிலையையும், களிப்பாக்கையும், இளிப்புக் கலந்த பன்னீர்ப் புகையிலையையும் போட்டுக் குதப்புவாள்.

வீட்டிற்குள்ளோ, வெளியிலோ எவரும் இருப்பதாகத் தெரியவில்லை. திட்டமிட்டுச் செய்துள்ள ஏற்பாடு இது என்பது குமாரன்தம்பிக்குத் தெளிவாக விளங்கியது.

எப்படிப்பட்ட தவமுனிவனும் இவளுடைய நிர்வாண உடலழகில் கிறங்கி விழுந்து விடுவான் என்பதில் பட்டேரிக்கு



அழுத்தமான நம்பிக்கை இருந்திருக்க வேண்டும். அவரது யோசனைப்படிதான் இவள் மார்புப் பகுதிகளை மறைத்தும் மறைக்காத நிர்வாணத்துடன் கவர்ச்சியாகக் காத்திருக்கிறாள். யோசித்துக் கொண்டிருக்காமல் தன்னுள் இருக்கும் மாந்திரீகனின் சரியான வடிவத்தை இவளுக்குக் காட்டிய பிறகு வீட்டிற்குக் கிளம்பினால் போதும் என்று அவன் முடிவு செய்தான்.

"வீட்டில யாருமில்லையா?"-குமாரன்தம்பி மிடுக்கான குரலில் கேட்டான்.

"இருக்கிறேனே" பணிவான குரலில் வெளிவந்தது பதில். அதைத் தொடர்ந்து அறைக்குள் காலடி ஓசைகள் உயர்ந்தன.

வலது கையில் மண்ணெண்ணெய் விளக்கைப் பிடித்துக் கொண்டு மீனாக்ஷி அடிமேல் அடியெடுத்து வைத்து வெளித்திண்ணைக்கு வந்தாள்.

"எவ்வளவு நேரமா உங்களுக்காகக் காத்திருக்கேன் தெரியுமா? வந்த கால்லேயே வாசல்ல நிக்காம வீட்டுக்குள்ள வாங்க. மண்ணெண்ணெய் விளக்கை உயர்த்திப் பிடித்து தனது உடம்புப் பகுதிகளைக் கவனத்துடன் ஆனால், அலட்சியம் போன்ற பாவனையில் வெளிச்சத்தினால் குளிப்பாட்டியபடி உபசரித்தாள். வந்தவன் அசைவற்று நிற்பதைப் பார்த்த அவள் வாய்விட்டுச் சிரித்தாள். மார்புப் பகுதியின் இரட்டையான தங்கப் பந்துகள் உயர்ந்தும் தாழ்ந்தும் அசைந்து கொண்டிருந்தன. சிவந்த வயிற்றுப் பகுதியில் சதைப்பிடிப்புகள் துள்ளி விளையாடின. இடுப்பில் உடுத்தியிருந்த ஒரே முண்டும் சட்டென்று அவிழ்ந்து தரையில் விழுந்தது.

அவள் இப்போது முழு நிர்வாணமாக இருந்தாள். தங்கப் பாம்பு!

மனத்தை எவ்வளவோ கட்டுப்படுத்தியும், கடவுள் சிந்தனையில் மனத்தை அர்ப்பணித்தும் குமாரன்தம்பிக்குள் இருந்த ஆண் சட்டென்று விழித்து எழுந்தான். மீனாக்ஷியின் மையிட்ட

கண்கள் மின்னின. மாந்திரீகனின் உதடுகள் நடுங்கின. கண்களில் காமத்தின் ஈரம் படிந்தன. நீண்டுநின்ற நிமிடங்கள்!

'டப்.' கனமுள்ள ஏதோ ஒரு பொருள் ஆகாயத்திலிருந்து தரையில் விழுந்த சத்தம். மாந்திரீகனும், அவனது முன்னாள் காதலியும் ஒன்றாகத் திடுக்கிட்டார்கள். ஆனால், கண்களுக்கு எதுவும் தட்டுப்படவில்லை.

கண்ணிமைக்கும் நேரத்துக்குள் குமாரன்தம்பிக்குச் சுற்றுச்சூழல் நினைவில் எழுந்தது. குற்ற உணர்வுடன் அவன் அவளிடமிருந்து பார்வையைப் பெயர்த்தான். வலது கையிலிருந்த பிரம்பை இறுகப் பற்றினான். ஆகாயத்தை நோக்கிக் கண்களைத் உயர்த்தினான். செஞ்சாயம் பூசிய ஆகாயப் பரப்பில் பளபளத்த நட்சத்திரங்கள், கண்மூடித் திறப்பதைப் பார்த்தான். நட்சத்திரங்களின் தலைவனைப் போல ஒளி சிந்திக் கொண்டிருந்த சந்திரன் புன்னகை புரிவதாகவும் தோன்றியது. சந்திரனில் கறையாகப் படிந்திருந்த கறுப்புநிழல் மறைந்து விட்டிருந்தது.

அதே நிலையில் நின்றபடி அவன் கேட்டான் : "கோமதி எங்க படுத்திருக்கிறா?"

உள்ளுக்குள் ஏற்பட்ட திகைப்பை முடிந்தவரையில் மறைத்துக் கொண்டவளாக மீனாக்ஷி கூறினாள்: "முற்றத்தில நின்னுட்டேவா கோமதியைத் தேடுறீங்க? உள்ள வாங்க" வெட்கப்படுபவள் போல் நடித்தவாறு உட்புறமாக நடந்தாள்.

குமாரன்தம்பியின் தோரணை அடியோடு மாறியது. "மீனாக்ஷி!" அவன் அழைத்தான். அவள் திரும்பி நின்றாள்.

"நான் உள்ள வர்றேன். ஆனா, மாந்திரீகக் கர்மங்களை முடிச்சுட்டுத்தான் அப்புறம் நான் வெளியேற முடியும். என்ன சொல்ற?" அவன் குரலில் கம்பீரம் குறையாமலிருந்தது.

"கர்மத்தைச் செய்யாம நீங்க கிளம்புறத்துக்கு நான் விட்டாத் தானே?"-உணர்ச்சிகள் கூர்மையடைந்த நிலையில் அவள் மறுகேள்வியை எறிந்தாள்.



"சரி, நான் வர்றேன்"- அவன் அவளது படுக்கை அறைக்குள் நுழைந்தான்.

கட்டிலில் இரட்டை மடிப்பு ஓலைப்பாய் ஒன்றும், அதன் மீது ஒரு வெள்ளை வேட்டியும் விரிக்கப்பட்டிருந்தது. மண்ணெண்ணை விளக்கை ஒரு மூலையில் வைத்த மீனாக்ஷி உணர்ச்சி குன்றாதவளாகக் கேட்டாள்: "விளக்கு வேணாமா?"

அவளை ஊன்றிப் பார்த்த குமாரன்தம்பியை நெருங்கிய அவள் ரகசியக் குரலில் கிசுகிசுத்தாள்: "என்னை மன்னிச்சிடுங்க. வியாதி கோமதிக்கு இல்லை; உங்க மீனாக்ஷிக்குத்தான் உபாதைத் தொல்லை!" அவள் இரண்டு கைகளாலும் அவனைத் தன்னோடு இழுத்து அணைக்க முன்பக்கமாகப் பாய்ந்தாள்.

"நில் அப்படியே!"-அவன் கர்ஜித்தான். அவள் கொஞ்சம் திடுக்கிட்டாள்.

"உன்னோட உபாதையை நான் தீர்த்து வைக்கிறேன். ஆனா, புத்தூர்வீட்டு மாந்திரீகன் வந்திருக்கிறது உன்னோட உபாதையைப் போக்குறதுக்குங்கிறது ஞாபகமிருக்கட்டும்."

"நீங்க எவ்வளவு பெரிய மாந்திரீகனானாலும் எனக்குச் சொந்தமானவர்தான். எனக்கு மட்டுமே சொந்தமானவர்" - அவள் மூச்சிரைப்புடன் அவனை இறுகக் கட்டி அணைத்தாள். "அன்பான என் மந்திரவாதியே!"

இடி விழுந்தது போல உணர்ந்த குமாரன்தம்பி வலது கையில் இருந்த பிரம்பை இறுகப் பிடித்தபடி கண்களை இறுக்கி மூடினான். அவனது முகத்தின் தசைகள் இழுபட்டு விறைப்படைந்து முறுக்கேறத் தொடங்குவதையும், முகம் ரத்த வண்ணத்தில் சிவந்து கனிந்து கொண்டிருப்பதையும் அலட்சியமாக அமர்ந்திருந்த மீனாக்ஷி கவனிக்கவில்லை.

குமாரன்தம்பியின் மனத்தில் அப்போது தெளிவடைந்து வந்தது ஹனுமானது முழுவடிவம். அவனையறியாமலே உதடுகள்

அசையத் தொடங்கின. திவ்வியமான ஹனுமான் மந்திரம் உதடுகளிலிருந்து உதிர்ந்தது.

*தஹனதப்த ஸுவர்ண ஸமப்ரபம்*
*பயங்கரம் ஹ்ருதயே விஹிதாஞ்ஜலீம்*
*கனககுண்டல சோபிமுகாம்புஜம்*
*நமத வானரராஜ மிஹாத்புதம்...*

ஓர் அலறலுடன் மீனாக்ஷி அவனைப் பிடித்திருந்த பிடியை நழுவ விட்டாள். ஓரிடத்திலும் நிற்க முடியாதவளாக அவள் அறை முழுவதும் ஓடியலைந்தாள்.தன் உடல் முழுவதும் தீக்கங்குகளை வாரியிறைத்தாற் போல் தகிப்பதை உணர்ந்தாள். ஓட்டத்தின் நடுவே கட்டிலிலிருந்த வெள்ளை வேட்டியை எடுத்து நிர்வாணத்தை மறைத்துக் கொண்டாள்.

"என்னைக் காப்பாத்துங்க!" அவள் கைகூப்பித் தொழுதபடி வேண்டினாள்.

அந்தக் குரலைச் செவிமடுக்க யார் இருக்கிறார்கள்? எல்லாவற்றையும் மறந்த மாந்திரீகன் ஹனுமானை ஜபித்துக் கொண்டிருந்தான்.

*ஓம் நமோ பகவதே*
*ஆஞ்ஜனேயயே*
*மஹாபலயே ஸ்வாஹ :*

உடம்பின் தகிப்பைத் தாங்க முடியாமல் துள்ளிக் குதித்துக் கொண்டிருந்த மீனாக்ஷி பரிதாபமான குரலில் அவனிடம் இறைஞ்சினாள்.

"ஐயோ!" - பயந்து நடுங்கிய அவளிடமிருந்து தீனமான அலறல் எழுந்தது. தான் உடனடியாக இறந்து போகப் போகிறோம் என்றே நினைத்தாள்.

தனக்கு முன்பாக நின்றுகொண்டிருக்கும் மாந்திரீகன் ஒரு பயங்கர உருவத்துக்கு மாறியிருந்தான். விநாடிக்கு விநாடி அவனது உருவம் பெரிதாகிக் கொண்டிருந்தது!



'கடவுளே! யாரிது? இது மனுஷனோட முகமே இல்லை! பயங்கரமான குரங்கு முகம். விரிந்த மார்புடன் கதாயுதத்தைக் கையில் பிடித்துக் கொண்டு பீமாகாரமாக நிற்கும் இந்தக் குரங்கு மனிதனின் தலை வீட்டின் மேல்மச்சுத்தளத்தை தொடுகிறதே! தேங்காய் நார் போன்ற உடல் ரோமங்கள் விறைத்து நெட்டுக் குத்தாக நிற்கின்றன. பெரிதாகிக் கொண்டேயிருக்கும் இந்தக் குரங்கு மனிதன் அறையையே நிறைத்திருக்கிறான்!' அவளது மனம் திகைப்பிலும் பயத்திலும் உழன்றது.

"இந்தப் பாவியை மன்னிச்சுடுங்க!" இதயம் தகர்ந்துபோன நிலையை அடைந்த மீனாக்ஷி அவனது பாதங்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டாள்.

"உன்னோட உபாதையை விரட்ட வேணாமா?" அவன் குரல் இடியோசை போல் முழங்கியது.

"வேண்டாம்... இந்த மகாபாவியை மன்னிச்சிடுங்க. சூரக்காட்டு இல்லத்துப் பட்டேரி மிரட்டி என்னை இப்படியெல்லாம் செய்ய வெச்சுட்டார். இனிமேல் ஒருபோதும் மீனாக்ஷி தப்பு செய்ய மாட்டாள். சுப்ரமண்யசாமி மேல சத்தியம்." இதயத்தை நெகிழச்செய்யும் மன்னிப்பு கோரும் குரல்.

"எழுந்திரு"-சாந்தமான குரலில் புறப்பட்டது கட்டளை.

மீனாக்ஷி எழுந்தாள். கூப்பிய கைகளுடன் நின்றாள். வியப்பில் அவள் கண்கள் அகல விரிந்தன. பயங்கர உருவத்துடன் குரங்குமுகமாகத் தென்பட்டவன், இப்போது பழையபடி மனிதனாக குமாரன்தம்பியாகி விட்டிருந்தான்.

"மீனாக்ஷி!"- இரக்கத்துடன் அழைத்தான்.

"என்னங்க?"- பணிவுடன் ஒலித்தது அவள் குரல்.

"என்னோட பிரம்மச்சரியம்தான் இந்த ஸித்திகளோட ரகசியம்னு உனக்குத் தெரியுமா?"

"தெரியும்!"

"உன் மேல எனக்கு எந்த விதமான கோபமும் கிடையாது. பட்டேரிதான் இதுக்குப் பின்னால் இருக்கிறான்னு எனக்கு முன்னாடியே தெரியும். எப்படி இருந்தாலும் இந்த முறையும் அவன் தோல்வி அடைஞ்சிருக்கிறான்." ஒரு பெருமூச்சிற்குப் பிறகு அவன் தொடர்ந்தான்: "உன் நெற்றியில இருக்கிற பொட்டு, அவன் ஜபிச்சுத் தந்ததுதானே?"

"ஆமாம்."

"நீ உடம்பு முழுக்கத் தேய்ச்சிருக்கிற சுகந்தத் தைலமும் அவன் தந்ததுதானே?"

"ஆமாம்."

"அவனோட பொல்லாத ஒரு வசியப்பிரயோகம்! சீக்கிரமாப் போய்க் குளிச்சு சுத்தமாகிடு. தைலத்தை எங்கயாவது கொண்டு போய் ஊத்தி அழிச்சிடு. இல்லேன்னா உன்னோட மகனே, இப்படி உன்னைப் பாத்தா ஆசைப்பட்டுடுவான்: பட்டேரி செய்ஞ்சிருக்கிறது சர்வ வசியப் பிரயோகம். என்னோட மாந்திரீக ஸித்தியால நான் இதிலிருந்து தப்பிச்சிருக்கேன்."

குமாரன்தம்பி அங்கிருந்து வெளியேறினான். வெளிவந்தவன் வியப்புடன் கைகளைக் கூப்பித் தொழுதான். முற்றத்தில் காவல்காரனைப்போல் காத்திருந்தது கிருஷ்ணப்பருந்து!

"என்னோட கருடமூர்த்தி! எனக்கு உதவுறதுக்காக இங்கேயும் வந்துட்டிங்களா? மீனாக்ஷியை மன்னிச்சிடுங்க."-ஒற்றைக்காலில் நின்ற குமாரன்தம்பி உடனே பிரார்த்தித்தான். தொடர்ந்து கருடனை பிரீதி(மகிழ்ச்சி)ப்படுத்தும் கருட மந்திரங்களைச் சொல்லத் தொடங்கினான்:

*ஓம் நம: பக்ஷி ராஜாய*
*ஸர்வ விஷப்பூதரக்ஷ:*
*க்ருத்யாதி பேதனாய*
*ஸர்வேஷ்ட சாதகாய ஸ்வாஹா*



அவன தியானதததில மூழ்கியதும் கருடன் பறந்து உயர்ந்தது. மூன்று முறை அவனை வலம் வந்த பிறகு கிருஷ்ணப்பருந்து மறைந்தது. வாசலருகே முற்றத்திலிருந்து இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்த மீனாக்ஷி திடுக்கிட்டு நடுங்கினாள். வேகமாகக் கதவை மூடித் தாழிட்டாள்!

# 26

மீனாக்ஷியின் வீட்டில் நடந்த சம்பவங்களை அறிந்த ராமன் பட்டத்திரியின் கோபம் எல்லை கடந்தது.

சர்ப்பக்காவின் மந்திரமண்டபத்தில் தியானத்தில் ஈடுபட்டு ஆராதனா தேவதையான கர்ணப்பிசாசினியின் அனுக்கிரகத்துடன் அப்போதைக்கப்போது நடப்பதை அவர் அறிந்து கொண்டிருந்தார்.

சம்பவ தினத்தன்று மாலை நேரத்தில் அவர் சுப்ரமண்ய ஸ்வாமி கோயிலுக்குச் சென்று மீனாக்ஷியைச் சந்தித்து, குமாரன்தம்பியை வசீகரிப்பதற்குத் தேவையான உபதேசங்களை வழங்கியதுடன், வசியத்திற்கு உதவியாக மந்திரம் ஜபித்த மருந்துகளை ஒப்படைக்கவும் செய்தார். நெற்றியில் வைத்துக்கொள்ளப் பொட்டும், கண்மையும் உடம்பில் தேய்த்துக்கொள்ளத் தைலத்தையும் கொடுத்திருந்தார். வசியப் பிரயோகத்திற்கான தன்னுடைய மருந்தும் மந்திரமும் இதுவரை பலிக்காமல் போனதில்லை. ஆனால், அப்படிப்பட்ட பொருள்கள் இப்போது புத்தூர் மாந்திரீகனிடம் எடுபடாமல் போவதா? பட்டத்திரிக்கு அளவிட முடியாத கோபமும், கடுமையான ஏமாற்றமும் தோன்றியது.

எவ்வளவு கஷ்டப்பட்டு பொட்டுக்கான மையைத் தயாரித்தோம்?

அதற்காக ஒரு செம்போத்தைப் ( ஏறத்தாழ காக்கையின் உருவத்தில் பழுப்பு நிறமுள்ள ஒரு பறவை) பிடிப்பதற்கே எவ்வளவு சாகசம் செய்ய நேர்ந்தது? விதிப்படி இரும்பு அதன் உடலில் படாமல் கொன்று, ஒரு துளி ரத்தம்கூடச் சிந்தாமல் அதன் இறக்கைகளைப் பிடுங்கி, அதன் நாக்கை அறுத்தெடுத்து செறுதேன் கலந்து அரைத்தல்லவா பொட்டுக்கான மை தயாரித்தோம்! பிறகு உடலில் துணியில்லாமல் நின்றபடி காம உணர்வுடன் மதன காமேஸ்வரி மந்திரம் ஜபித்தோம்: *"ஓம் ஹ்ரீம் ஐம் நமோ பகவதீ மதன காமேஸ்வரி ஸர்வஜனஸ்ய மதனக் ஷோபம் வர்த்ய வர்த்ய ஸீஹ்ரம் மாம் பிரத்யாகர்ஷயாகர்ஷயே ஸ்வாஹா"*

அதிலிருந்து ஒரு துளி மையெடுத்துப் பொட்டு வைத்துக் கொள்ளும் எந்த ஒரு பெண்ணுக்கும் அவள் விரும்பும் ஆடவனை வசப்படுத்த அவனை ஒரு தடவை பார்த்தாலே போதும். உக்கிரமான தவத்தில் ஈடுபட்டிருந்த விசுவாமித்ர முனிவர் மேனகையிடம் வசியமானது, கவர்ச்சிகரமான நடனத்தாலோ, அவளது அழகில் கிறங்கிப் போனதாலோ அல்ல. அந்த மேனகை நெற்றியில் வைத்திருந்த பொட்டு இப்படிப்பட்ட மையால் தயாரிக்கப்பட்டிருந்ததால்தான்.

தவமுனிவரான விசுவாமித்திரரையே காமாவேசங் கொள்ளச் செய்ய, மாந்திரீக மைப்பொட்டு வைத்துக் கொண்ட மேனகையால் முடிந்தது. ஆனால், சாதாரணமான ஒரு மாந்திரீகனை வசியப் படுத்த அதே பொட்டு வைத்துக்கொண்ட மீனாக்ஷியால் முடியவில்லையா! இதை எப்படி நம்புவது?

மாந்திரீக மையைவிட எவ்வளவோ மடங்கு சக்தி வாய்ந்தது அவளிடம் வழங்கிய தைலம். அதைப் பன்னீரில் கலந்து மீனாக்ஷி உடம்பில் தேய்த்துக் கொள்வதற்குக் கொடுத்தோம். அந்தத் தைலம் தயாரிப்பதற்கும் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருந்தது!

பாக்குமரப்பசை, சூட்டுக்கற்பூரம், திப்பிலி, இந்துப்பு, காமநீர் போன்றவற்றைச் செறுதேனில் அரைத்துத் தயாரித்தது அந்தத்



தைலம். பிறகு தைலத்தைப் பன்னீரில் கலந்து பக்குவப்படுத்தி காமபாண மந்திரம் ஜபித்தோம்:

*த்ராம் திராவிணிபாணயே நம: த்ரீம்*
*ஸம்க்ஷோணே பாணயே நம: க்ளீம்*
*ஆகர்ஷணாய நம: ப்ளூம் வசீகரண*
*பாணயே நம: ஸம்பஸம்மோகன பாணயே நம:*

ஒரு பெண் இந்தத் தைலத்தை தன்னுடலின் ரகசியப் பகுதிகளில் தேய்த்துக்கொண்டு அவள் விரும்பும் ஆடவனை ஒரு தடவை ஊன்றிப் பார்த்தாலே போதும். அவன் எப்படிப்பட்ட மனத்திண்மை உள்ளவனாக இருந்தாலும் அவளது அடிமையாகி விடுவான். ஓர் ஆடவன் இந்தத் தைலத்தை உபயோகிப்பதானால் அவன் நெருங்கும் எந்தப் பெண்ணும் அவனுக்கு வசப்படுவாள். ஆண், பெண் பிறப்பு உறுப்புகளில் தடவிக்கொள்ளும் தைலம் என்று கூறப்பட்டுள்ள இந்த மகத்தான பொருளும் பயனளிக்கவில்லையா? அற்புத வல்லமையுள்ள இந்தத் தைலத்தை உடல் முழுவதும் பூசிக்கொண்டு, உடையின்றி நிற்கும் ஒரு பெண்ணால் தேவேந்திரனைக் கூடக் காலடியில் விழ வைக்க முடியும்! அப்படித்தான் சுவடிகளில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானால் இந்திரனைவிட உயர்ந்தவனா இந்தப் புத்தூர் வீட்டு குமாரன்தம்பி?

தான் சொன்னபடியெல்லாம் மீனாக்ஷி நடந்து கொண்டாள். அந்த விஷயத்தில் அவளைக் குறை சொல்லவே முடியாது!

ஒருவேளை தன்னுடைய, மீனாக்ஷியின் நோக்கங்களை முன்கூட்டியே குமாரன்தம்பி அறிந்து கொண்டிருக்கக்கூடும். அவனது ஒவ்வொரு நடவடிக்கையையும் நான் தெரிந்து கொள்வதுபோலவே, ஒருவேளை அவனும் தெரிந்து கொள்கிறானோ? அது எப்படி அவனுக்குச் சாத்தியமாகிறது! ஞான திருஷ்டியா அல்லது தேவதை ஏதாவது அவனுக்கு உதவுகிறதா?

ஜோதிடம், மைபோட்டுப் பார்ப்பது மற்றும் கர்ணப் பிசாசினியின் அருளால் தன்னால் எதிராளியின்

நடவடிக்கைகளையும், திட்டங்களையும் தெரிந்துகொள்ள முடிகிறது. மீனாக்ஷியின் வீட்டில் நடைபெற்ற ஒவ்வொரு சம்பவத்தையும் அந்தந்த நேரத்திலேயே தனக்குத் தெரிவித்தது கர்ணப்பிசாசினிதான். அதெல்லாம் கண் முன்பாக நடப்பதுபோலவே தெரிந்தன.

சாயந்திரவேளை தாண்டிய பிறகுதான் சர்ப்பக்காவிற்கு வந்து, மந்திர மண்டபத்தில் ஹோமகுண்டத்தைத் தயார் செய்தோம். தானிமரச் சுள்ளிகளால் பத்தாயிரம் தடவை ஹோமித்தோம். கூடவே கர்ணப்பிசாசினிக்கு மிகவும் பிரியமான மந்திரத்தை ஒரு லட்சம் தடவை ஜபித்தோம்:

*சவாஸனஸ்தாம் நரமுண்டமாலாம்*
*விப்ரஷி தாமஸ்திமணீன்கராப்ஜை:*
*ப்ரோதாம் நராந்த்ரைர்த்ததீம் கவஸ்த்ராம்*
*பஜாமஹே கர்ணப் பிசாசினீம்தாம்*
*ஓம் ஹ்ரீம் கர்ணப் பிசாசினி*
*கர்ணமே கதயே ஸ்வாஹா*

மந்திரஜபம் முடிவடைந்ததும் கர்ணப்பிசாசினி பிரத்தியட்சமானாள். அந்தச் சமயத்தில்தான் குமாரன், மீனாக்ஷியின் வீட்டிற்குப் புறப்பட்டான். அப்போதிலிருந்து நடைபெற்ற ஒவ்வொரு சம்பவத்தையும் கர்ணப்பிசாசினி தன் வலது காதில் சொல்லிக்கொண்டே இருந்தது. ஒவ்வொரு காட்சியையும் கண்ணுக்கு முன்பாகக் காணுவது போலவே அவ்வளவு தெளிவாக இருந்தன அவளது வர்ணனை.

நெற்றியில் மாந்திரீகத் திலகம் அணிந்து, மெலிந்த உடல் முழுவதும் மாந்திரீகத் தைலம் தேய்த்து, மை வரைந்த நீலோற்பல விழிகளில் காமரசம் சொரிந்தபடி அபூர்வமான அழகியாக மீனாக்ஷி முன்னால் வந்தபோது, குமாரனது மனம் ஒரு கணம் தடுமாறவே செய்தது. அந்தத் தகவலைக் கேட்டதும் தனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு அளவே இல்லாதிருந்தது!

திடுமென்று அவனது தோரணை மாறியது. ஏதோ ஒரு சத்தம் கேட்டதும் அவன் ஆகாயத்தை நோக்கிக் கண்களை



உயர்த்தினான். அப்போது அவன் மனம் கருவறையில் ஒன்றியிருந்தது. சற்று நேரத்திற்குப் பிறகு அவன் மீனாக்ஷியின் படுக்கை அறைக்குள் நுழையும்போது, அவனுக்குள் அசாதாரணமான மனோதிடம் ஏற்பட்டு விட்டது.

தந்திரசாலியான மீனாக்ஷி குமாரனை இறுகக் கட்டியணைத்தாள் என்பதைக் கேட்டபோது, அவன் காம உணர்விற்கு அடிமைப்பட்டுவிடுவான் என்றே நினைத்தோம். மீனாக்ஷி மாதிரி அழகும் கட்டுடலும் கொண்ட கவர்ச்சியான உடையற்ற உடம்பு, தன் உடம்புடன் உராயும்போது எந்த ஒரு மனிதனுக்குத்தான் உடல் சிலிர்க்காது? வேட்கை எழாமலிருக்கும்? மாந்திரீகனும் மனிதன்தானே? இப்படிப்பட்ட ஒரு சந்தர்ப்பத்தில் முனிவனுடைய உணர்வும் பாணம் போல் மேற்புறம் உயர்ந்துவிடாதா? போதாக்குறைக்கு காமபாண மந்திரம் அலையடிக்கும் அற்புதமான தைலத்தையும் அவள் உடல் முழுவதும் பூசியிருந்தாளே!

அதிசயம் என்றுதான் சொல்லவேண்டும். குமாரன் அந்தச் சமயம் பார்த்து பக்த ஹனுமானிடம் அபயம் தேடினான். அவனது உருவமும், இயல்பும், தோரணையும் மாறிக் கொண்டே இருந்தது. உடம்பில் நெருப்புப் பட்டதுபோல் உணர்ந்த மீனாக்ஷியோ மரணவேதனையில் துடிக்கத் தொடங்கினாள். சட்டென்று அவள் நிர்வாணத்தை மறைத்தாள். எல்லாத் தவறுகளையும் ஒப்புக்கொண்டு மன்னிப்புக்கேட்டு அவன் கால்களிலேயே விழவும் செய்தாள்!

நீண்டகால மாந்திரீக வாழ்க்கையில் தன்னுடைய வசியப் பிரயோகம் தோல்வியடைந்தது இதுதான் முதல் தடவை. எத்தனையெத்தனை ஆண்களுக்கும் பெண்களுக்கும் தன் மருந்தும் மந்திரமும் துல்லியமான பலனை அளித்துள்ளன! சூரக்காட்டு பட்டத்திரியின் வசியப் பிரயோகம் என்று கேட்ட மாத்திரத்திலேயே பயப்படாதவர்கள் யாராவது இந்த நாட்டில் உண்டா?

குமாரன் மற்றும் அவனது குடும்பத்திற்கு எதிராக, தான் நடத்திய ஸ்தம்பன (செயலிழக்கச் செய்யும்) மந்திரமும், உயிர்

பறிக்கும் மாரணப் பிரயோகமும் தோல்வியடைந்தது போலவே இப்போது... இதோ இந்த வசியப் பிரயோகமும் தோல்வியைத் தழுவியிருக்கிறது.

மேற்கொண்டு என்ன செய்வது? என்ன இருந்தாலும் இந்தத் தோல்விகளால், தோற்றுவிட்டோம் என்று ஒப்புக்கொண்டு ஓடிவிட முடியாது. பின்வாங்கும் பேச்சே கிடையாது! அடுத்த மாதத்தின் கடைசி வெள்ளிக்கிழமை அமாவாசை தினமும்கூட. அன்று இதே மந்திர் மண்டபத்தில் தூமாவதியையும், வட யக்ஷிணியையும் பிரத்தியட்சப்படுத்த வேண்டும். 'எப்படியும் குமாரனையும் அவனுடைய வாரிசாக வருவதற்கு வாய்ப்புள்ள மருமகன்களையும் அழித்தே தீருவோம்!' என்று நமது தேவதைகளைச் சத்தியம் செய்ய வைக்க வேண்டும்!

பூஜாதி கர்மங்களை நடத்தாமலேயே வடயக்ஷிணியையும் தூமாவதியையும் கூப்பிட்ட குரலுக்கு வரவழைத்து விடலாம். ஆனால், விசேஷமான பூஜைகளை நடத்தி அவர்களை நல்லபடியாக மகிழ்ச்சிப்படுத்திவிட்டால் அவர்கள் மேலும் தீவிரமான முயற்சிகளில் ஈடுபடுவார்கள். அவர்கள் மட்டுமே தனக்கு உள்ள ஒரே அடைக்கல ஆதரவு!

குமாரனது ஆணவத்தை ஒடுக்காமல் தான் உயிர் வாழ்வதில் பிரயோஜனமே இல்லை. அவனுடைய ஒரு கருடன்! கருடனை வைத்துக் கொண்டு குரங்காட்டம் போட வைக்கிறான் முட்டாள்! ஒரு சிறு தவறு ஏற்பட்டால்கூட கருடன் விலகிப் போய்விடுவான் என்பதை அந்த முட்டாள் இன்னும் புரிந்துகொள்ளவில்லை. ஹனுமான் சேவையையும், தேவி பூஜையையும்கூட அவன் நடத்துகிறானாம். சீக்கிரத்திலேயே பெரிய மந்திரவாதியாக வேண்டுமென்று நினைத்திருக்கிறான் போலும்! பிராமணனல்லாதவனுடைய மந்திரஸித்தி எவ்வளவு காலத்திற்கு நீடித்து நிற்க முடியும்? அவன் நடத்துவதெல்லாம் நல்ல நோக்கத்துக்கான மந்திரங்களாம். நல்ல மந்திரங்களையெல்லாம் அவன் படித்திருக்கலாம். மோசமான மந்திரங்களும், அதில்



இருக்கத்தானே செய்கிறது. இன்று இல்லாவிட்டால் நாளைக்கு அவன் துர்மந்திரவாதத்தைச் செய்துதானே ஆகவேண்டும்?

நான் ஏன் அதைக் குறித்தெல்லாம் அதிகமாக யோசிக்க வேண்டும்? அவனை மண்ணைக் கௌவ வைப்பதுதானே தனது லட்சியம்!

முதலில் அவனது மனோதிடத்தைக் குலைப்பதற்கான வழிகளைக் கண்டுபிடிக்கவேண்டும். உறுதியான மனநிலைதானே மாந்திரீகனின் உண்மையான மூலதனம்?

புத்தூர் தறவாட்டின் ஏதாவது ஒரு கிளையில் யாரையாவது ஒருவரைக் கொல்ல முடிந்தால்... அதன் மூலம் குமாரனின் மனதைச் சோர்வடையச் செய்யலாம். தறவாட்டின் மற்ற உறவினர்கள் எல்லாருமே குமாரனுக்கு விரோதிகள்தான். குமாரனது காலத்திற்குப் பிறகு மாந்திரீகனாகப் போவது அவனது ஒரே மருமகனாகத்தான் இருக்கவேண்டும். அந்தப் பையனைத் தொலைத்து விட்டால் புத்தூர் குடும்பத்தின் மாந்திரீகப் பாரம்பரியம் அத்துடன் முடிவடைந்துவிடும். வேறு எவருக்கும் குமாரன் மந்திரோபதேசம் தர வாய்ப்பில்லை. குமாரனது சகோதரி மகளான மருமகளைத் தொலைத்தாலும்கூடப் போதும். அந்தப் பரம்பரை அத்துடன் முடிந்துவிடும்.

மாரணகர்மங்களை வெற்றிகரமாக நடத்தத் தன்னுடைய மாந்திரீக ஸித்திகள் உதவாமலிருக்காது.

வடயக்ஷிணியும் தூமாவதியும் ஆத்மார்த்தமாக இதில் ஈடுபட்டால் தன் திட்டம் சுலபமாக வெற்றி பெற்றுவிடும்!

ஹோமகுண்டத்தின் அக்னி அணைந்து போயிருந்தது. எண்ணெய் தீர்ந்த விளக்குகளில் வறண்ட திரிகளும் எரிந்து கருகின. பட்டத்திரியின் மனம், அடுத்த மாத அமாவாசை தினத்தில் நடத்தப்போகும் உயிர்பறிக்கும் மாரண கர்மங்களைச் சீராட்டத் தொடங்கியிருந்தது.

# 27

பரம்பரைச் சொத்தான தறவாட்டுக் கொட்டாரத்தையும், ஏனைய சொத்துக்களையும் குமாரன்தம்பியிடமிருந்து மீட்டெடுக்கும் யோசனை, அந்தப் பரம்பரையின் மற்ற கிளைகளைச் சேர்ந்த பெரும்பாலானோருக்கு உடன்பாடான விஷயமாகவே இருந்தது. பரம்பரையின் ஒரு குறிப்பிட்ட உறவினர் மட்டுமே சொந்தமாக்கி வைத்துள்ள மாந்திரீக ஸித்தியை, எல்லாக் கிளையைச் சேர்ந்தவர்களுக்கும் பொதுவானதாக்க வேண்டும். இப்போதைய கணக்கின்படி அடுத்த மாந்திரீகப் பதவி, குமாரன்தம்பியின் ஒரே மருமகனான கொச்சுராமனுக்கே போய்ச் சேரும். அவனுடைய காலத்திற்குப் பிறகு அது அவனது சகோதரியின் குழந்தைகளுக்கு உரியதாகும். சுருக்கமாகச் சொன்னால் மாந்திரீகப் பாரம்பரியம் என்பது குறிப்பிட்ட ஒரு கிளையினருக்கே சாசுவதம் என்றாகிவிடும். அதற்கு எதிரான சேகரன்தம்பியின் நடவடிக்கைகளுக்குத் துணை நிற்பதென்று புத்தூர் தறவாட்டைச் சேர்ந்த மற்றவர்களும் தீர்மானித்தனர். ஆனால், இதற்காக யாரும் வெளிப்படையாகக் களத்தில் இறங்கத் தைரியம் காட்டவில்லை. அசாதாரணமான மாந்திரீக ஸித்திகள் கைவரப் பெற்றுள்ள மாந்திரீகனை எதிர்த்தால், அதனால் ஏற்படும் மோசமான விளைவுகள் குறித்து அவர்கள் பயந்தனர்.

"எல்லோருக்கும் கொட்டாரம் மற்றும் அதைச் சார்ந்த சொத்துகளிலிருந்து கிடைக்கும் லாபத்தில் பங்கு வேண்டுமாம். ஆனால், அதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ள யாருக்கும் தைரியம் இல்லை" -சேகரன்தம்பி தனது அம்மாவிடம் புகார் செய்தான்.

"சேகரா! அப்புறம் நாம மட்டும் ஏன் மல்லுக்கு நிக்கணும்? குமாரன் கடுமையான மந்திரப் பிரயோகங்களை வசப்படுத்தி



யிருக்கான். அவனை, உன்னால தோற்கடிக்க முடியுமா?"-ஒரு பெருமூச்சுடன் பார்வதிதங்கச்சி தொடர்ந்தார்: "பித்ருக்களின் கருணையால நமக்கும், நமது சந்ததிகளுக்கும் சுகமா வாழ்வதற்கேற்ற சொத்து இருக்கவே இருக்கு. கொட்டாரத்தை யார் வேணும்னாலும் ஆளட்டுமே. அதிலிருந்து எந்தப் பங்கும் நமக்கு வேண்டாம்!"

அம்மாவின் உபதேசத்தை ஏற்றுக்கொள்ள சேகரன்தம்பி தயாராக இல்லை. கொட்டாரம் மற்றும் கொட்டாரச் சொத்துக்களைக் கைப்பற்றுவது எப்படி என்று அவன் இரவு பகலாகத் தீவிரமாகச் சிந்தித்தான். தனக்குப் பணத்தின் மீது எந்தவிதமான ஆசையும் கிடையாது. ஆனால், அநீதியை எதிர்ப்பது என்கிற ஒரு லட்சியம் இருக்கிறது!

கொட்டாரத்தில் முறைப்படி பூஜை நடத்துவதற்கும், அத்தியாவசியமான மந்திரகர்மங்களைச் செய்வதற்கும், பிராமண விருந்துகளை குறிப்பிட்டபடி செய்வதற்கும்தான் கொட்டாரம் மற்றும் அதைச் சுற்றியுள்ள பெரிய இடம், குடும்பப் பாகப்பிரிவினைப் பத்திரப்படி மாந்திரீகனுக்கு விட்டுத்தரப் பட்டுள்ளது. ஆனால், பெயருக்குச் சில சடங்குகளை நடத்திவிட்டு, அதிலிருந்து கிடைக்கும் வருமானத்தை அப்படியே மிச்சப்படுத்தி வைத்துக் கொள்வதைத் தவிர வருமானத்தின் ஒரு சிறுபகுதியைக்கூட அவர்கள் செலவிடுவதில்லை. எத்தனை நாளைக்குத்தான் இதையெல்லாம் பொறுத்துக் கொள்வது?

சொந்த மருமக்களுக்குத் தேவைக்கும் அதிகமாகச் சம்பாதித்து வைத்த பிறகுதான் பப்புமாமா இறந்து போனார். குறுகிய மனம் கொண்ட அவர், சொந்த மருமகனுக்கு மாந்திரீகனாக மந்திரோபதேசமும் செய்து வைத்தார். அதுகூட அதுவரை ஊதாரியாகத் திரிந்த குமாரனுக்கு!

மோசமான நடவடிக்கை உள்ளவனும் ஊதாரிச் செலவு செய்பவனுமாகப் பெயரெடுத்திருந்த குமாரன் மாந்திரீகனாக மாறியதுடன் ஆளே மாறிவிட்டான். அவனுடைய லட்சியமும் சொந்த மருமக்களுக்காகச் சம்பாதித்துக் குவிப்பதுதான்.

தினமும் மாலை நேரத்தில் விளக்கேற்றும் ஒரு சடங்கைத் தவிர, கொட்டாரத்தில் வேறு எதுவும் நடைபெறுவதில்லை.

குமாரன் மாந்திரீகனாகப் பதவியேற்று இரண்டு வருடங்களாகிவிட்டன. இரண்டு அமாவாசைப் பூஜைகள் முடிந்து விட்டன. அரிசிப்பொடி நைவேத்தியமும், பித்ருபூஜையும், கருட பூஜையும் நடந்ததைத் தவிர அன்னதானமோ, சப்தாகமோ, விசேஷமான பூஜைகளோ மற்று எதுவுமோ நடைபெறவில்லை. இருந்தும் பொறுமையாக இருந்தோம். ஆனால், பொறுமைக்கும் ஓர் அளவில்லையா?

கொட்டாரச் சொத்துக்களிலிருந்து கிடைக்கும் வருமானம் அப்படியொன்றும் குறைவானதல்ல. இந்த இரண்டு வருடத்திற்குள் குமாரன் கணிசமாகச் சொத்துச் சேர்த்திருப்பான். தறவாட்டின் பொதுச்சொத்தைக் கைவசம் வைத்துள்ளோம் என்கிற பிரக்ஞையே அவனுக்குக் கிடையாது.

மருமகன் வயதுக்கு வந்துவிட்டால் அவனை மாந்திரீகனாக்கு வதுதான் குமாரனது திட்டமாக இருக்க வேண்டும். எதிர்காலத்தில் மாந்திரீகனாவது குமாரனின் வழித்தோன்றல்களாகவே இருப்பார்கள். இந்தச் சூழ்நிலையில் கொட்டாரம் மற்றும் சொத்துக்களையாவது எப்படியும் எல்லோருக்கும் கிடைக்கும் படியாகப் பாகம் பிரித்தே தீர வேண்டும். தங்கப்பாத்திரங்களும் வெள்ளிப்பாத்திரங்களும் மற்ற ஜங்கம சொத்துக்களும் ஏராளமாக உள்ளன. போகட்டும்... அதெல்லாம் தேவையில்லை. நிலத்தின் உரிமை மட்டுமாவது தங்களுக்கு வேண்டும்.

கோர்ட்டுக்குப் போக வழியில்லை. பத்திரப்படி, கொட்டாரம் மற்றும் அதன் சொத்துககள் மாந்திரீகனின் குடும்பத்தினர் கையில்தான் உள்ளன. அதிக வயதான தறவாட்டு உறுப்பினர்தான் குடும்பத்தலைவர் என்கிற நாட்டுநடப்பு, இந்தத் தறவாட்டுக்குப் பொருந்தாது. குடும்ப மாந்திரீகனாகப் பதவியேற்பவரை-அது யாராக இருந்தாலும் மற்றவர்கள் அங்கீகரித்து, மரியாதை செலுத்த வேண்டும் என்பதுதான் இவ்விடத்து நியதி. பூஜைகளையும் மற்ற வருடாந்திரச் சடங்குகளையும் முறைப்படி நடத்தாவிட்டால்,



குடும்பத்தின் மற்ற கிளையினர் மாந்திரீகனை வற்புறுத்தலாமே தவிர, அவருக்கு எதிராக கோர்ட்டில் வழக்குத் தொடுக்கப் பத்திரத்தில் விதிமுறைகள் எதுவும் கிடையாது. ஏற்கெனவே வக்கீலுடன் இதைக் குறித்து விவாதித்தாயிற்று. வேறு வழியே கிடையாது!

தறவாட்டின் மற்ற கிளை உறுப்பினர்கள் அனைவரும் ஒன்றுசேர்ந்து பொருள்களை வலுக்கட்டாயமாகக் கைப்பற்றுவது என்கிற வழியைத் தவிர வேறு எந்த வழியும் கிடையாது. அதன்பிறகு குமாரன் வழக்குத் தொடுத்தால் பார்த்துக் கொள்ளலாம். அப்படி ஒரு வழக்கு வந்தால், நீதிமன்றம் ஒரு பொறுப்பாளரை நியமிக்கும். கொஞ்ச காலத்திற்கு அவர் கொட்டாரச் சொத்துக்களைக் கவனித்துக் கொள்வார். நிலைமை சிக்கலாகும்போது மாந்திரீகன் சமரசப் பேச்சுக்கு இறங்கி வரத்தானே வேண்டும்? தனது அடுத்த வாரிசைத் தேர்ந்தெடுக்கும்போது கிளையின் மற்றொரு உறுப்பினரைத் தேர்ந்தெடுப்பதாக அவன் ஒப்புக்கொண்டால், பிரச்னை சுலபமாக சமரசமாகிவிடும்.

பொருள்களைக் கைப்பற்றவேண்டும் என்பதில் எல்லோ ருக்கும் ஒருமித்த கருத்து உண்டு. ஆனால், வெளிப்படையாக இதற்கான நடவடிக்கைகளில் ஈடுபட யாருமே தயாராக இல்லை. கோழைகள்!

எந்த விஷயமானாலும் தன்னுடன் ஒத்துழைக்க தனது மூன்று மைத்துனர்கள் மட்டுமே உள்ளனர். ஒருவேளை மனைவியின் வீட்டிலேயே வசிப்பதால் அவர்கள் இப்படித் துணையாக இருக்கிறார்களோ என்னவோ? அவர்களுக்குத் தங்கள் மனைவியுடனும், மனைவியின் சகோதரன் என்பதால் தன்னிடமும் நன்றி விசுவாசம் இருப்பதுவரையில் பாராட்ட வேண்டியதுதான்!

இந்த மூன்று மாப்பிள்ளைகளின் துணையுடன் கொட்டாரச் சொத்துக்களைக் கைப்பற்றுவது எப்படி என்பது குறித்து யோசிக்கத் தொடங்கியது சேகரன்தம்பியின் மனம்.

கொட்டாரத் தோப்பிற்குள் புகுந்து தேங்காய் பறிக்கச் செய்ய வேண்டும். தென்னை மரங்களுக்கு வேலிகட்ட வேண்டும். புதுமனை தந்திரியை வரவழைத்து கொட்டாரத்தில் விசேஷமான பூஜை ஒன்றை நடத்த வேண்டும். அந்தப் பூஜையில், இந்தத் தறவாட்டின் எல்லாக் கிளையினரையும் கலந்து கொள்ளும்படிச் செய்ய வேண்டும். மாந்திரீகன் குமாரன் இவற்றையெல்லாம் எதிர்க்கவரட்டும். தறவாட்டின் கர்மஸித்தி மூலமாகப் பெற்ற மந்திரஸித்தியைப் பயன்படுத்தி, தறவாட்டு உறுப்பினர்களுக்கு அவன் தொல்லை ஏதாவது தர முயன்றால் அதையும்தான் பார்ப்போமே!

ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டவன்போல சேகரன்தம்பி தனது மூன்று மைத்துனர்களையும் அழைத்துக் கொண்டு கொட்டாரத்தை அடைந்தான். அவற்றை எப்படிக் கைப்பற்றுவது என்பது குறித்து அவர்கள் தீவிரமாக ஆலோசனை நடத்தினர்.

தென்னை மரங்களில் ஏறித் தேங்காய் போட யார் முன் வருவார்கள்? அதுதான் முக்கியமாக மேலெழும்பிய பிரச்சினை. கொட்டாரத் தோப்பில் வழக்கமாக மரமேறுபவர்கள், குமாரன் தம்பிக்கு எதிராகச் செயல்படமாட்டார்கள். இந்த ஊரிலுள்ள எந்த ஒரு மரமேறியும் புத்தூர் மாந்திரீகனிடம் மோதுமளவுக்கு மனத்துணிவுள்ளவனாக இருக்கமாட்டான். எனவே வெளியூரிலிருந்து தென்னை மரமேறுபவர்களை வரவழைப்பதுதான் ஒரே வழி. அதற்கு எவ்வளவு செலவழிந்தாலும் பரவாயில்லை!

கடைசியாக அவர்கள் ஒரு தீர்மானத்திற்கு வந்தனர். சேகரன் தம்பியின் சகோதரிகளின் கணவர்கள். நாராயணக் கைமள், விக்கிரமன் உண்ணித்தான், கிருஷ்ணக் குறுப் - ஆகிய இந்த மூன்று பேரும் தங்களது ஊரிலிருந்து ஆளுக்கு ஒரு மரமேறியைக் கொண்டு வருவதாக முடிவானது.

தோப்புக்குள் அத்துமீறி நுழைவதற்கான நாளும் தீர்மானிக்கப் பட்டது. சேகரன்தம்பியின் மைத்துனர்கள் தென்னை மரமேறும் நபர்களைத் தேடித் தங்களது சொந்த ஊருக்குப் புறப்பட்டார்கள்.



குறிப்பிட்ட நாளன்று மாலையில் கொட்டாரத்தில் ஒரு விசேஷ பூஜையை நடத்தித் தருமாறு கேட்டுக்கொள்ள, புதுமனைத் தந்திரியை அழைப்பதற்காக சேகரன்தம்பியும் புறப்பட்டான்.

பார்வதிதங்கச்சியும் அவரது மூன்று பெண்களும் கலவரத்தில் ஆழ்ந்தார்கள். தறவாட்டு மாந்திரீகனுடனான இந்த மோதல் ஆபத்துகளை வரவழைக்குமென்று அந்த நான்கு பெண்மணிகளும் பயந்தனர். தறவாட்டின் மாந்திரீகர்கள் எல்லோரை விடவும் மிகவும் வலிமை வாய்ந்தவனான குமாரன் தம்பியுடன் மோதப் போகின்றனர் இவர்கள். இனிமேல் என்னவெல்லாம் நடக்கப் போகிறதோ... ஒன்றுமே புரியவில்லை!

வடக்குப்புற வீட்டில் நடைபெற்ற ஆலோசனைகளைத் தெரிந்து கொண்ட புத்தூர் வீட்டுக் காரியஸ்தர் சங்குசார், உடனே குமாரன்தம்பியிடம் எல்லாவற்றையும் விளக்கினார். அவர்கள் சொத்துகளைக் கைப்பற்ற வரப்போகும் தேதியையும் குறிப்பிட்டார்.

"நீங்க பேசாம இருங்க சங்குசார். எவனும் கொட்டாரச் சொத்துக்களைத் தொடமுடியாது. அது நிச்சயம்!" எல்லாவற்றையும் கேட்டுக்கொண்ட குமாரன்தம்பி கம்பீரமான குரலில் பதிலளித்தான்.

மகனை நெருங்கிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி உபதேசித்தார்: "நானும் எல்லாத்தையும் கேள்விப்பட்டேன் குமாரா. நீ எந்த வம்புதும்புக்கும் போகவேணாம். அது ஒண்ணுதான் நான் சொல்ல விரும்புறது. கொட்டாரச் சொத்துக்களின் வருமானத்தை யார் வேணும்னாலும் எடுத்துக்கட்டும். காரணவர்களின் அருளால் நமக்குப் பண விஷயத்தில எந்தவிமான குறையுமில்லை. கலகம் ஏற்பட்டா குடும்பம் அழிஞ்சுடும். இந்தச் சமயத்தில நீதான் கொஞ்சம் பொறுமையா இருக்கணும்."

குமாரன்தம்பிக்குக் கோபம் வந்தது: "நீங்க என்னம்மா சொல்றீங்க? தறவாட்டு மாந்திரீகன், தறவாட்டு உறுப்பினர்கள் முன்னால தோல்வியடையறதா? கூலி எதுவும் வாங்காம ஜனங்களுக்குச் சேவை செய்யணும்கிறதுக்காகத்தான் கொட்டாரச் சொத்துக்களைத் தனியா ஒதுக்கி வைச்சு, அதை மாந்திரீகன்கிட்ட

ஒப்படைச்சிருக்காங்க. கொட்டாரச் சொத்துக்களை அனுபவிக்கும் அனுபவ பாத்தியதை மாந்திரீகனுக்கு மட்டுமானதுதான். சொத்துக்களை கைப்பற்றுறது மட்டுமில்லாம, புதுமனை தந்திரியை கூட்டிட்டு வந்து விசேஷ பூஜையும் செய்யப் போறாங்களாம். அது என்னை அவமானப்படுத்துறதுக்குச் சமானமில்லையா? நான் ஒரு விஷயத்தை உறுதியாச் சொல்றேன். யாரும் எதையும் கைப்பற்றப் போறதில்லை; எந்த பூஜையும் நடக்கப் போறதில்லை. இந்தப் புத்தூர் மாந்திரீகன் யார்ன்னு அவங்களுக்குக் காட்டுறேன்!"

குமாரன்தம்பியின் வார்த்தைகள் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியைத் திக்பிரமை கொள்ள வைத்தன. நீர் நிறைந்த கண்களுடன் அவர் சொன்னார்: "எனக்கு ஒரே பயமா இருக்கு குமாரா! புதுமனை தந்திரி, பெயர் பெற்ற தாந்திரீகன். உன்னோட மாமாவும் அவர் மேல நல்ல மரியாதை வைச்சிருந்தார். அவர்கிட்ட நீ சண்டைபோடக்கூடாது!"

"அதைப் பற்றி நீங்க கவலைப்பட வேணாம். தந்திரி பூஜைக்கே வரமாட்டார். நான் இன்னிக்கே போய் அவரைப் பார்த்துட்டு வந்துடுறேன்" - குமாரன்தம்பி அம்மாவுக்கு ஆறுதல் கூறினான்.

கலிகாலத்தின் போக்கைக் குறித்ததாக இருந்தது குமாரன் தம்பியின் சிந்தனை. மோசமான நடவடிக்கைகளைத் துறந்து விஷவைத்தியனாகவும் மாந்திரீகனாகவும் நிஷ்காம்ய கர்மியாகக் கர்மங்களைச் செய்து ஜனங்களுக்கு உதவுபவனுமான மாந்திரீகனுக்கு மனநிம்மதி இல்லாமல் இருப்பதா?

ஒருபுறம் துர்மந்திரவாதியான சூரக்காட்டு பட்டத்திரியின் கொரில்லாத் தாக்குதல். மறுபுறம் சொந்தத் தறவாட்டிலுள்ள ஒருசிலரின் பின்புறத் தாக்குதல்கள்!

நல்ல மந்திரவாதக் கர்மங்கள் மீதுள்ள எதிர்ப்புதான் பட்டத்திரியினுடையது. ஒரு சூத்திரன் தாந்த்ரீகக் கர்மங்களைச் செய்வதா என்கிற பிராமணனின் குசும்பு!



தாய் வழியில், தான் ஒரு க்ஷத்திரியனல்லவா? க்ஷத்திரிய - சூத்ரக் கலப்பு இனத்தவன் என்றுகூடக் கூறலாம். ஆனால், தந்தை வழியில் தான் ஒருபிராமண வம்சத்தவனல்லவா?

அப்படி இல்லையென்றாலும் சூத்திரனுக்கு மந்திரப் பிரயோகங்கள் விலக்கப்பட்டவையா என்ன? ஜாதி வித்தியாசங்கள், தர்ம ஆசார வித்தியாசங்களால் ஏற்பட்டவை அல்லவா? தர்ம - அதர்மத்தைப் பார்த்தல்லவா ஒருவனது ஜாதியை நிர்ணயிக்கவேண்டும்? தர்ம ஆசாரத்திலுள்ள வேறுபாடுகளால் பிராமணன் - க்ஷத்திரியனாகவும், க்ஷத்திரியர் பிராமணனாகவும் வைசியன் சூத்திரனாகவும், சூத்திரன் பிராமணனாகவும் மாறியே தீருவான். புராணங்களில் இதற்கெல்லாம் எவ்வளவோ ஆதாரங்கள் உள்ளன!

துர்மந்திரவாதத்தைச் செய்யும் பட்டத்திரி, அதர்மத்தை அல்லவா பின்பற்றுகிறார்? அவர் எப்படிப் பிராமணனாக முடியும்? நல்ல கர்மங்களை அனுஷ்டிக்கும் தன்னைப் போன்றவர்கள் பிரம்மத்துவத்தை அடைய உரிமை இல்லையா? இதென்ன நியாயம்?

மாந்திரீகப் பதவி தனக்குக் கிடைக்கவில்லையே என்கிற ஏமாற்றம்தான் சேகரன்தம்பியின் எதிர்ப்புக்கான காரணம். உட்கார்ந்திருக்கிற கிளையை வெட்டிக் கொண்டிருக்கிறோம் என்பதை அவன் உணரவில்லை. பட்டத்திரியின் செயலைவிட மோசமான ஒரு செயலையல்லவா அவன் செய்கிறான்!

என்னவானாலும் இன்றே புதுமனை தந்திரியைச் சந்திக்க வேண்டும். மாந்திரீகனான நாளிலிருந்தே அவரைப் பார்க்க வேண்டும் என்பது தனது ஆசை. அவரைப் பார்த்து அவரிடம் அனுக்கிரகம் பெறவேண்டும். பப்புமாமா அடிக்கடி அவரைச் சந்திப்பதுண்டு. திவ்வியமானவரும், தீனபந்துவுமான புதுமனை தந்திரி துர்மந்திரவாதத்தை எதிர்க்கும் ஒரு சாத்வீகரும் கூட! புத்தூர் தறவாட்டுக் கொட்டாரத்தில் வந்து பூஜைசெய்வதாக அவர் சேகரனிடம் ஒப்புக் கொண்டிருப்பார் என்று தோன்றுகிறது. இங்கு நடைபெறும் உட்பூசல் அவருக்குத் தெரிந்திருக்காது.

அதைப் பற்றி சேகரன்தம்பி, தந்திரியிடம் எதுவும் குறிப்பிட்டிருக்கமாட்டான் என்றே தோன்றுகிறது.

மாலை நேரத்தில் கொட்டாரத்தில் விளக்கேற்றிய பிறகு புதுமனை இல்லத்திற்குச் செல்ல வேண்டுமென்று குமாரன் தம்பி தீர்மானித்தான். அங்கிருந்து திரும்பி வந்த பிறகு கருடத் தியானம் செய்யலாம் என்று எண்ணினான்.

"சங்குசாரே, சீக்கிரமாப் போய் ஒரு தார் பூவன் வாழைப் பழம் வாங்கிட்டு வாங்க. புதுமனை தந்திரியைச் சந்திக்கும்போது அவர்கிட்டக் கொடுக்கணும்" - குமாரன்தம்பி காரியஸ்தரிடம் கட்டளையிட்டான்.

# 28

சமாதி மாடங்களுக்கு முன்புறம் விளக்குகளை ஏற்றிய குமாரன்தம்பி, வழக்கத்தைவிட அதிகமான நேரம் தியானத்திலாழ்ந்தான்.

பப்புமாமாவின் உருவம் மனத்தில் தெளிவாகத் தட்டுப்பட்டது. அவர் கூறினார்: "கருடமூர்த்தி உனக்குத் துணையா இருக்கிறார். தைரியமா இரு!"

குமாரன்தம்பியின் கண்கள் நிறைந்தன. கருடனின் சிறகடியோசை காதுகளில் முழங்கின.

*"க்ஷிப ஓம் ஸ்வாஹா"* - அவன் கருடமந்திரத்தை உருப்போட்டான்.

குமாரன்தம்பியின் வருகையை எதிர்பார்த்து, காரியஸ்தர் கொட்டாரத்தின் படிப்புரைக்கு வெளியே காத்திருந்தார். ஒரு பெரிய பூவன் வாழைப்பழக்குலை அவரிடம் இருந்தது.



குமாரசார் வேலையைவிட்டுச் சென்றதுமுதல் புத்தூர் வீட்டுக் காரியஸ்தர் வேலையைக் கவனித்து வருபவர் சங்குசார். புத்தூர் வீடு, மகேஸ்வரிதங்கச்சியின் கொச்சு புத்தூர் வீடு ஆகிய இரண்டு வீட்டின் காரியஸ்தர் வேலைகளையும், பொறுப்பாகக் கவனித்து வருகிறார்.

தியானத்தை முடித்துக்கொண்டு வெளியே வந்த குமாரன் தம்பி படிப்புரையை மூடிவிட்டு வீதிக்கு வந்தான். மனம் நிம்மதி அடைந்திருக்கிறது. இதயத்தில் கருட பக்தி உறைந்து கிடந்தது. 'இஷ்ட தேவதையை பக்தியுடன் பூஜித்துக் கொண்டு, சொந்த தர்மத்தை அனுசரிப்பவனுக்கு துயரமோ, கவலையோ தோன்றுவது இல்லை' என்கிற பிரமாணம் அவனது நினைவில் எழுந்தது.

மந்திரோபதேசம் வழங்கியபோது பப்புமாமா சொல்லித் தந்த ஒரு சுலோகம் நினைவுக்கு வந்தது:

*ஸ்வதர்ம்மமாசரன் நித்யம்*
*தேவபூஜ பாராயண:*
*ஜித்தேந்த்ரியோ கிலான் போகான்*
*ப்ராப்யேஹானந்ததாம் வ்ரஜேத்*

சுயதர்மங்களை சரியாக அனுஷ்டித்து, தேவபூஜையை நடத்துபவன் இந்திரியங்களை வெற்றி கண்டு அந்திமக் காலத்தில் கடவுளின் அருளைப் பெறுவான் என்ற பொருள் தரும் வரிகள்!

"புதுமனை இல்லத்துக்குத்தானே?" - சிந்தனையில் ஆழ்ந்திருந்த குமாரன்தம்பியைச் சுயநினைவுக்குக் கொண்டுவர காரியஸ்தர் கேட்டார்.

"ஆமாம் சங்குசார்" - இயல்பு நிலைக்குத் திரும்பிவந்த குமாரன்தம்பி பதிலளித்தான்.

அவர்கள் புதுமனை இல்லத்தை நோக்கி நடந்தனர். ஆஜானுபாகுவான குமாரன்தம்பியின் வேகமான நடைக்கு ஈடாக நடக்க, சங்குசார் மிகவும் சிரமப்பட வேண்டியிருந்தது.

விரைவாக நடந்துகொண்டிருந்த குமாரன்தம்பி புதுமனை இல்லத்தின் சிரேஷ்டமான பாரம்பரியத்தைக் குறித்து எண்ணிப் பார்த்தான். புதுமனை தந்திரிகளின் உத்பவத்துக்கு, கேரளம் தோன்றியதுபோல் அவ்வளவு தொன்மை உள்ளதாக ஐதிகம்.

கேரளத்தைப் படைத்த சாக்ஷாத் பரசுராமனே நிறைய மந்திரவாதிகளை நியமித்தாராம். துர்த்தேவதைகளை அகற்றவும், நல்ல தேவதைகளை உபாசிக்கவும் பரசுராமன் அவர்களுக்குக் கட்டளை இட்டதாகவும் கதை. அப்படிப்பட்டவர்களில் முக்கிய மானவர்கள் காளக்காடு, காட்டுமாடம், கல்லூர், சேன்னாஸ், அடிகச்சேரி, கணியாட்டம், கக்காடு, குழிமன, புதுக்கோடன், கல்லக்காடு, கக்காட்டு குளம், மூத்த மனை, புதுமனை போன்றவர்கள்.

புதுமனையின் பாரம்பரியத்தைச் சேர்ந்த இப்போதைய தந்த்ரியும் - மாந்திரீகனும்தான் தேவன்பத்ரன் நம்பூதிரிப்பாடு நல்ல மந்திரவாதத்தை மட்டுமே அவர் மேற்கொள்வார். அதேபோல் கடவுள் வழிபாட்டுடன் இணைந்த தந்த்ரங்களை மட்டுமே செய்வார்.

சாந்தமானவரும், பேச்சுப்பிரியரும், நட்பை விரும்புபவருமான நம்பூதிரிப்பாட்டை தூரத்திலிருந்து பார்த்திருக்கிறோம். அவருடன் நெருங்கிப்பழக இதுவரை சந்தர்ப்பம் ஏற்பட்டதில்லை.

மந்திரப் பிரயோகங்களைப் பற்றியும், சேவா முறைகள் குறித்தும் அவர் எதையாவது கேட்கக்கூடும். மந்திரத்திலும் தந்த்ரத்திலும் ஜோதிடத்திலும் தேர்ந்த மேதைமை வாய்ந்த புதுமனை தந்திரியிடம் மிகவும் எச்சரிக்கையுடன் பேச வேண்டுமென்று குமாரன்தம்பி மனத்துள் தீர்மானித்தான்.

"பரவாயில்லையே, நடந்து வந்ததே தெரியாம இவ்வளவு சீக்கிரம் இல்லத்துக்கு வந்து சேர்ந்துட்டமே சங்குசாரே?" புதுமனையின் படிப்புரையை அடைந்த குமாரன்தம்பி பின்புறம் திரும்பிப் பார்த்துப் பேசினான்.



படிப்புரை திறந்து கிடந்தது. பயபக்தியுடன் குமாரன்தம்பி உள்ளே நுழைந்தான். பின்னால் அதே போன்ற பயபக்தியுடன் சங்குசாரும் நுழைந்தார்.

நிலவொளியில் மூழ்கிக் குளித்துக் கொண்டிருக்கும் இரவு. அமைதி தவழும் சூழ்நிலைக்கு ரத்த சந்தனத்தின் நிறம். கால் பாதங்களைத் தழுவும் மணல்துகள்கள் பிரணவத்தைச் சொல்கின்றனவோ? ஒவ்வோர் அடியை முன்னெடுத்து வைக்கும் போதும் கடவுள் சன்னிதானத்தை நோக்கிச் செல்லும் பயணத்தின் ஒவ்வொரு கட்டமும் முழுமை அடைவது போன்ற உணர்வு!

புதுமனை இல்லத்தின் தென்புற முற்றத்தை அடைந்தபோது குமாரன்தம்பி கைகளைக் குவித்தான். இல்லத்தின் புகழ்பெற்ற தேவி கோயில்! சன்னிதிக் கதவு மூடியிருந்தாலும், சுற்றிலும் இருந்த விளக்குகளில் பலவும் எரிந்து கொண்டிருந்தன. தேவி திரிபுரசுந்தரியின் பிரதிஷ்டைதான் இங்கு என்று கேள்விப் பட்டிருந்தான்.

கண்களை மூடி பக்திபூர்வமாக வணங்கி நின்ற குமாரன் தம்பியின் நாவிலிருந்து தேவி மந்திரம் வழிந்தது.

*பாலார்க்கயுத தேஜஸாம் த்ரிநயனாம்*
*ரக்தாம் பரோல்லாஸினீம்*
*நானாலம்க்ருதி ராஜமானவ புஷ்வம்*
*பாலோடுராட் ச்சேகராம்*
*ஹஸ்தைரிக்ஷ்யா தனுஸ்ஸ்ருணீம் ஸுமஸரம்*
*பாசம் முதா பிப்ரதீம்*
*ஸ்ரீ சக்ரஸ்திதசுந்தரீம் த்ரிஜகதா -*
*மாதாம் பூதாம் ஸ்மரேது.*

(உதயசூரியனைப் போன்ற ஒளி, மூன்று திருக்கண்கள், ரத்தச் சிவப்பு உடை, அழகான உடல், கரும்பால் செய்த வில், அங்குசம், பூச்சரம், பாசக்கயிறு போன்றவற்றைத் தாங்கிய நான்கு திருக்கரங்கள்-இவ்வாறெல்லாம் காட்சியளிக்கும் ஸ்ரீசக்ராதி வாசினியும், திரிலோக சுந்தரியுமான பகவதியைத் துதிக்கிறேன்.)

திருச்சன்னிதியில் சாஷ்டாங்கமாக வணங்கி எழுந்த குமாரன் தம்பி, காரியஸ்தருடன் கிழக்குப்புற முற்றத்திற்கு வந்தான். முற்றத்திலிருந்த துளசிமாடத்தில் தீபம் எரிந்து கொண்டிருந்தது. கிழக்குத் திண்ணையில் நிலவிளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது.

சற்றுத் தூரத்தில் நின்றிருந்த இல்லத்துக் காரியஸ்தர் அருகில் வந்தார். வந்திருப்பவர்களை அடையாளம் தெரிந்து கொண்டார்.

"திருமனஸ் (திருமேனி போன்ற மரியாதையான வார்த்தை) சாப்பிடுறார். இப்போ வந்துடுவார்" - காரியஸ்தர் தெரிவித்தார்.

ஒரு சில நிமிடங்களுக்குப் பிறகு திண்ணைக்கு வந்த நம்பூதிரிப்பாடு, தனது பிரம்பு நாற்காலியில் அமர்ந்தார்.

முற்றத்தில் யாரோ இரண்டு பேர் நிற்பதைக் கவனித்த நம்பூதிரிப்பாடு காரியஸ்தரிடம் கேட்டார்.

"சங்கரா, யார் வந்திருக்காங்க?"

"புத்தூர் மாந்திரீகரும் அவரோட காரியஸ்தரும் வந்திருக்காங்க" - சங்கரன் விவரித்தார்.

"என்ன? புத்தூர் மாந்திரீகனா? குமாரன் என்பதுதானே பெயர்? வாங்க... வாங்க. இப்படி உட்காருங்க" அவர் தலையை உயர்த்திப் பணிவான குரலில் அழைத்தார்.

தந்த்ரியின் அருகே வந்து குமாரன்தம்பி அங்கேயே நின்றான்.

"இப்படி வந்து உட்காருங்க. இங்க உட்கார்றதுக்கு இதெல்லாம்தான் இருக்கு!" திண்ணையில் கிடந்த இரண்டு அகலமான மணைகளைச் சுட்டிக்காட்டிய தந்த்ரி கூறினார்.

"நான் இப்படியே நின்னுக்கிறேன் திருமேனி" - குமாரன் தம்பி கைகூப்பி வணங்கியபடி கூறினான்.



"அதெல்லாம் கூடாது. புத்தூர் மாந்திரீகனை முற்றத்தில நிற்க வைச்சுப் பேசுறதா? முதல்ல உட்காருங்க" அவரது குரல் கட்டளைபோல் ஒலித்தது.

குமாரன்தம்பி, சங்குசாரிடமிருந்து பழக்குலையை வாங்கித் திண்ணையில் வைத்தான். பிறகு ஒரு மணையை எடுத்து சற்றுத் தள்ளிப் போட்டு பவ்வியமாக அமர்ந்தான்.

"இதென்ன பேட்டிக்கான பொருளா? இதெல்லாம் தேவையா என்ன கொச்சுதம்பி!" நம்பூதிரிப்பாடு பழக்குலையைப் பார்த்துச் சந்தோஷத்துடன் சிரித்தார்.

"பூவன்பழக்குலை திருமேனி! முதல் தடவை பார்க்க வந்திருக்கேன்."

"ஹாய்! நமக்குப் பூவன் பழம்னா கொஞ்சம் பிரியம்னு குமாரன்தம்பி தெரிஞ்சு வெச்சிருக்கீங்க. அப்புறம் என்ன விசேஷம்? பப்புத்தம்பி இறந்து ரெண்டு வருஷம் ஆகிடுச்சில்லையா?"

"ஆமாம்... இரண்டு வருஷம் முடிஞ்சிடுச்சு."

"எவ்வளவு சீக்கிரமா காலம் கடந்து போகுது? பப்புத்தம்பி மகானுபாவனா இருந்தார். மரண முகூர்த்தத்தை முன்னாலேயே தெரிஞ்சுக்க முடிஞ்ச திவ்யன். அடிக்கடி இங்க வருவார். வந்தா வாரசியம்தான். மந்திரதந்திரங்களைப் பற்றிப் பேச்சு திரும்பிடும். ரிக் வேதத்திலும், யஜுர் வேதத்திலும், மனுஸ்மிருதியிலும், தர்ம சாஸ்திரத்திலுமா விவாதம் தொடங்கிடும். அவ்வளவு ஏன்? பிரம்ம சூத்ரசங்கர பாஷ்யத்தைக்கூட நாங்க விட்டுவைச்சதில்லை. எல்லாம் இப்போ வெறும் நினைவாகிப் போச்சு" - துயரபாவனையில் சற்றுநேரம் பேச்சை நிறுத்திய பிறகு தொடர்ந்தார்: "மாந்திரீகர்களின் காலம் முடிவுக்கு வந்துட்டிருக்கு. சாஸ்திர விதிகளை ஒட்டி அனுஷ்டானங்களை நடத்துற ஆட்கள் குறைஞ்சுட்டாங்க. போகட்டும், மாந்திரீகக் கர்மங்களையெல்லாம் சரியாக செய்றீங்க இல்லையா? குமாரனுக்கு நல்ல மந்திர ஸித்தி

ஏற்பட்டிருக்கிறதா கேள்வி[illegible]. எல்லாத்தையும் கவனத்தோட செய்யணும். சிறுவயசு அதனாலதான் உபதேசிக்கிறேன்."

"தெரிஞ்ச கர்மங்களையெல்லாம் அதனதன் விதிப்படி நடத்திட்டிருக்கேன் திருமேனி. அதிகமா விஷத்தொல்லைகளை அகற்றும் நிவர்த்திக் கர்மங்கள்தான். எப்பவாவது ஒரு சில வேளைகளில் துர்த்தேவதைகளோட உபாதைகளையும் அகற்றும்படி இருக்கு."

"கருட சேவையை மட்டும்தானே காரணவர் கற்றுத் தந்தார்? மற்றதையெல்லாம் சுவடிகளைப் பார்த்துக் கத்துக்கிட்டீங்க இல்லையா?"

"ஆமாம் திருமேனி, தேவியையும் ஹனுமானையும் கூட சேவிக்கிறேன். அவங்களும் அருள்பாலிக்கிறாங்க. வெளிப்படுறாங்க."

"இதெல்லாம் உங்க தறவாட்டின் கர்மஸித்திப் பலன்னுதான் சொல்லணும். சாதாரணமா குருகிட்டேயிருந்து சிக்ஷை பெறாம மந்திரஸித்தி வாய்க்கிறதில்லை. ஒரு காரியத்தில் மிகவும் கவனமா இருக்கணும். கருட சேவையைத்தான் குறிப்பிடுறேன். கிருஷ்ணப்பருந்து விரைவில் அருள்பாலிப்பது. அதே சமயம் விரைவில் கோபமடைவதும்கூட. நீங்க அழைக்கும்போதெல்லாம் கிருஷ்ணப்பருந்து வெளிப்படுறதாக் கேள்விப்படுறேன். கடுமையான மந்திரப் பிரயோகத்தின் மூலம் பக்ஷிராஜாவை எப்பவும் வரவழைக்கக் கூடாது. ஆள் கொஞ்சம் ஆபத்தானவர். எங்கேயாவது ஒரு சின்னத் தப்பு நடந்துட்டா, ரொம்பவும் அன்னியோன்னியமாக இருப்பவர் சட்டுன்னு எதிராளியாகிடுவார். ஹனுமானின் விஷயமும் அப்படித்தான்."

குமாரன்தம்பி ஒருகணம் திடுக்கிட்டான். தவிர்க்க முடியாத சந்தர்ப்பங்களில் மட்டுமே ஜபிக்க வேண்டிய சில மந்திரங்களை மிகவும் சாதாரணமான சந்தர்ப்பங்களில்கூட, தான் பிரயோகித்திருக்கிறோம். அப்போதெல்லாம் கிருஷ்ணப்பருந்து காட்சியளிக்கவும் செய்திருக்கிறது. பப்புமாமாவின் காலத்தில்



கிருஷ்ணப்பருந்து இதுமாதிரி அடிக்கடி காட்சியளித்ததில்லை என்று அம்மா கூறியது ஞாபகம் வந்தது. ஞானக்கிழவரான நம்பூதிரிப்பாடு எல்லாவற்றையும் புரிந்து கொண்டிருக்கிறார்.

குமாரன்தம்பி சற்றே திடுக்கிட்டுப் போனதைப் புரிந்துகொண்ட தந்த்ரி அமைதியான குரலில் கூறினார்: "இதில திகைப்படைய என்ன இருக்கு? பிரம்மசசரியம் வாழ்க்கை விரதமாக இருக்கணும். ஹனுமான் சேவைக்கும், கருட சேவைக்கும் அது கண்டிப்பான நிபந்தனை. தேவிக்கு அதெல்லாம் பரவாயில்லை. பக்தியுடன் அழைக்கும் யாரையும் பக்தப்பிரியா அனுக்கிரகிப்பாள். ஷட்(நல்ல)கர்மங்களையெல்லாம் செய்றீங்கதானே? சும்மாதான் கேட்கிறேன்."

"ஷட் கர்மங்கள் ஓரளவுக்குத் தெரியும் திருமேனி. ஆனால், சாந்தி (நிவர்த்தி) கர்மங்களைத்தான் செய்கிறேன். துஷ்கர்மங்களைச் செய்றதில்லை."

"கெட்ட காரியங்களை(துர்மந்திர வாதத்தை)ச் செய்யவே கூடாது. எதிரிகளிடமிருந்து தப்பிக்கவும், தொல்லைகளை நீக்கவும் சில வேளைகளில் சாந்தி கர்மங்களாக அல்லாத குரூர கர்மங்களையும் செய்யவேண்டி வரலாம். பணத்துக்காக அப்படிப்பட்டதைச் செய்யக்கூடாதுங்கிறது விதி. சத்ரு நாசம், சுயப் பாதுகாப்பு மாதிரியான விஷயங்களில உச்சாடன-மாரண கர்மங்களை நடத்தலாம்னு விதியே இருக்கு."

"எனக்கு எதிரிங்க இருக்காங்க திருமேனி. இருந்தும் நான் பொறுமையா இருக்கேன்."

"என்ன, குமாரனுக்கு எதிரிகளா! அதுக்குக் காரணம்?"

"எந்த ஒரு காரணமும் இல்லாம சூரக்காட்டுப் பட்டத்திரி எனக்குத் தொல்லை தர்றார். அவரோட ஆராதனா மூர்த்திகளான துர்த்தேவதைகளை எனக்கு எதிரா பயன்படுத்துறார்."

"க்ஷுத்ரக்காரன் (மோசமான மந்திரங்கள் செய்பவன்) [illegible]டேரியா? முட்டாள்! துஷ்கர்மங்களை மட்டுமே நடத்தி

இல்லத்தை நாசமாக்கிட்டுத்தான் அவனோட அப்பா பட்டேரி இறந்து போனார். மகனோட வேலையும் அதுதான். அவனும் அவனுடைய துர்த்தேவதைகளும்! எத்தனை குடும்பங்களை அவன் அழிச்சிருக்கிறான்! எக்கச்சக்கமா பணம் வாங்கிட்டு அந்த மாதிரி வேலைகளைச் செய்றான். இந்தமாதிரியான கெட்ட காரியங்கள் பிராமணர்களுக்குக் கூடாதவை. 'இது போன்ற தீய கர்மங்களால் செய்வினை, எதிரியைத் தோற்கடித்தல் போன்றவற்றில் பிராமணரும் வெற்றி பெறலாம் என்று ஸ்மிருதிகள் ஒப்புக்கொள்கின்றன' என்கிற நியாயத்தைச் சுட்டிக்காட்டித்தான் செய்றாங்க. ஆனால், ராமன் பட்டேரி இதையெல்லாம் பண்றது பணத்திற்கு ஆசைப்பட்டுத்தான். இதுக்கான பலனை அவன் அனுபவிச்சுட்டுத்தான் சாவான். அது உறுதி."

"நான் இந்த ராத்திரி நேரத்தில வந்திருக்கிறது ஒரு முக்கியமான விஷயத்தை உங்ககிட்டச் சொல்றதுக்காக..."

"என்னது அது... சொல்லுங்க!"

"எங்க தறவாட்டின் ஒரு கிளை களீக்கல் வீடு."

"எனக்குத் தெரியுமே... வைரமனைப்போற்றியின் சம்சாரமும் குழந்தைகளும் அங்க குடியிருக்காங்க!"

"ஆமாம்... அந்த வீட்டு சேகரனுக்கு மாந்திரீகனாகணும்கிற ஆசை இருந்தது. ஆனா, அப்படி நடக்காததால, அவன் இப்போ கொட்டாரம் மற்றும் சொத்துக்களைக் கைப்பத்துறதுல தீவிரமாகியிருக்கான். வர்ற ஞாயிற்றுக்கிழமை காலையில அத்துமீறி நுழைஞ்சு சொத்துக்களைக் கைப்பத்திட்டு அன்னிக்கு சாயந்திரமே உங்க உதவியோட விசேஷ பூஜையும் நடத்தப் போறான்னு தோணுது!"

ஏதோ ஓர் அதிசயச் செய்தியைக் கேள்விப்பட்டது போல், சாய்வு நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தார் நம்பூதிரி: "சேகரன் இங்க வந்து என்ன சொன்னார்னா, உங்க தறவாட்டுக் கொட்டாரத்தில் மொத்தக் குடும்பமும் ஒண்ணா சேர்ந்து பூஜை



நடத்தப் போறதாத்தான். நான் வர்றேன்னும் வாக்களிச்சுட்டேன். எனக்கு இதெல்லாம் தெரியாதே! இனி என்ன செய்யலாம்?"

"தறவாட்டு மாந்திரீகனின் எதிராளிங்க நடத்துற பூஜைக்கு நீங்க போகக்கூடாது. நான் அவ்வளவுதான் சொல்ல முடியும்!"

சற்று நேரம் சிந்தனையில் ஆழ்ந்த பிறகு தந்த்ரி கூறினார்: "தேவபூஜையை யார் நடத்தினாலும் அது நல்ல காரியம்தான். நாம ஒண்ணு செய்யலாம். பூஜையை நாம சேர்ந்தே நடத்தலாம். குமாரா, நீங்களும் என்னோட பூஜைசெய்யலாம். அப்படிச் செஞ்சா புத்தூர் மாந்திரீகனின் கௌரவமும் பாதிப்படையாது."

தந்திரிகளில் முக்கியமானவரான புதுமனையின் வார்த்தைகளைக் கேட்ட குமாரன் வியப்பிலாழ்ந்தான். வேதம் கற்கவும், காயத்ரி ஜபிக்கவும், தாந்திரீகக் கர்மங்களைச் செய்யவும் பிராமணர்களுக்கு மட்டுமே அருகதை உள்ளது என்று வாதிடுகிற பழமையாளர்கள் கூட்டத்தினருக்கு மத்தியில் இப்படியும் ஒரு விசால மனமா? இணைகர்மியாக அழைக்கவும், அங்கீகரிக்கவும் மகா பிராமணனும், மகாமாந்திரீகனுமான இவர் தயாராக இருக்கிறார்!

புதுமனை தந்த்ரியின் பாதங்களைத் தொட்டு வணங்கிய பிறகு குமாரன்தம்பி விடை பெற்றான்.

"புவனேஸ்வரி அருள் புரியட்டும்!" - குமாரன்தம்பியின் தலை மீது இரண்டு கைகளையும் பதித்து தந்த்ரி ஆசீர்வதித்தார்.

## 29

விடியற்காலைவேளை. புத்தூர் தறவாட்டுக் கொட்டாரத்தின் படிப்புரை வாசலில் ஒரு பாராக்காரனைப் போல் காவலிருந்தது கிருஷ்ணப்பருந்து. கொட்டாரத்திற்குள், சமாதி மாடங்களுக்கு

முன்புறத்தில் ஒற்றைக்காலில் நின்று கருடபூஜை நடத்திக் கொண்டிருந்தான் குமாரன்தம்பி.

பெருங்குளத்தின் வடபுறத்திலும் கிழக்குப்பகுதியிலும் நின்று கொண்டிருந்தவர்கள் இந்தக் காட்சிகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். படிப்புரையின் அருகே செல்வதற்கு அவர்களுக்குப் பயமாக இருந்தது. பீமாகாரமான பக்ஷிராஜாவின் மனோநிலை எப்படி இருக்கும் என்பது யாருக்கும் புரியவில்லை. கிருஷ்ணப்பருந்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருந்தாலும் தோற்றத்தில் பாதி மனித வடிவமும், பாதிப் பறவை வடிவமானதுமான இந்த அதிசய உயிரினத்தை இப்போதுதான் பெரும்பாலானவர்கள் நேரில் பார்க்கிறார்கள்.

களீக்கல்வீட்டு சேகரன்தம்பி கொட்டார எல்லைக்குள் அத்துமீறி நுழையப்போவது அன்றுதான் என்பது அவர்கள் எல்லோருக்கும் தெரியும். சேகரன்தம்பியை எல்லோருக்கும் பிடிக்கும் என்றாலும் மாந்திரீகனான குமாரன்தம்பிக்குப் பயந்து யாரும் இந்தப் பிரச்சினையில் தலையிடவில்லை. அதுமட்டு மின்றி, புத்தூர் தறவாட்டின் உள்விவகாரங்களில் தலையிட தங்களுக்கு என்ன உரிமை உள்ளது என்றும் நினைத்தார்கள்.

சூரிய உதயத்திற்கு முன்பாகவே காலைநேரச் சடங்கு களையும், தியானத்தையும், கோயில் தரிசனத்தையும் முடித்துக்கொண்டு குமாரன்தம்பி கொட்டாரத்திற்கு வந்து சேர்ந்தான். வந்தவுடனே சமாதி மாடங்களுக்கு முன்புறம் நின்று கருடசேவையைத் தொடங்கினான். எங்கிருந்தோ பறந்து வந்த கருடன் படிப்புரையை அடைந்து முன்புறத்தைப் பார்த்தபடி அமர்ந்தது. யாரையோ எதிர்பார்த்துக் காத்திருப்பது போலிருந்தது அதன் தோரணை.

"சேகரன்தம்பி சொத்துக்களைக் கைப்பற்ற வந்துடுவானா?"

"அதுக்கான தைரியம் அவனுக்கு இருக்கா என்ன?"



"இந்த நேரத்துல அவரும் அவரது கூட்டாளிகளும் வந்தா படிப்புரைக்கு முன்னால நிக்குற பயங்கர ஆசாமி சும்மா இருப்பாரா?"

வேடிக்கை பார்க்க வந்தவர்கள், தங்களுக்குள் பரஸ்பரம் கேள்விகளைக் கேட்டுக்கொண்டார்கள். இதற்கெல்லாம் பதிலளிக்க யாரும் அங்கே தயாராக இல்லை.

உத்வேகம் நிறைந்த நிமிடங்கள்! கொட்டாரத்தின் மீது கண்களைப் பதித்தபடி எதிர்பார்ப்புடன் நின்று கொண்டிருக்கும் பார்வையாளர்களின் எண்ணிக்கை நிமிடத்திற்கு நிமிடம் அதிகரித்துக் கொண்டிருந்தது.

விடியற்காலை நேரத்தின் இளம்வெயிலின் இளஞ்சூடான வெப்பத்தை அனுபவித்தபடி நின்றிருந்த பார்வையாளர்களின் கண்கள் திடுமென்று பெருங்குளத்தின் கிழக்குப்புறம் நோக்கி ஒரே நேரத்தில் திரும்பின. சேகரன்தம்பியின் தலைமையில் எட்டுப்பேர் கொண்ட ஒரு படை போரிடத் தயாராக வந்துகொண்டிருக்கிறது! முன்னாலிருப்பவன் சேகரன்தம்பி. அவனுக்குப் பின்னால் அவனுடைய மூன்று சகோதரிகளின் கணவர்கள். எல்லோருக்கும் பின்னால் - கடைசியில் காரியஸ்தர் ராமாசார், கையில் அரிவாளேந்திய மூன்று தென்னை மரமேறிகளும் இருந்தனர்.

அபாயப் பகுதியை நெருங்கும் சாகச வீரர்களைப் பார்க்கும் போது ஏற்படும் அதே பரபரப்புடன், கொட்டாரத்தை லட்சியமாக்கி நடந்துவரும் சேகரன்தம்பியையும் அவனது கூட்டத்தையும் பார்வையாளர்கள் கவனித்தனர்.

படிப்புரையை நெருங்கச் சுமார் நூறுமுழ தூரமிருந்தபோது சேகரன்தம்பியைப் பயம் பிடித்துக் கொண்டது. நடையின் வேகம் குறைந்தது.

"நீங்க முன்னால நடங்க" - அவன் திரும்பி நின்று மைத்துனர்களிடம் கூறினான். சிக்கலில் அகப்பட்டுக் கொண்ட அவர்கள் தங்களது கோபத்தைக் காரியஸ்தரிடம் வெளிப்படுத்தினர்:

"அவங்களோட சீக்கிரமாக கொட்டாரத்துக்குள்ள நுழையுங்க. அன்னநடை நடந்தால் எப்படி? ம்... சீக்கிரம்."

நிலைமை சரியில்லை என்பது புரிந்தாலும் வேறு வழி புலப்படாததால் காரியஸ்தர் மரமேறிகளை அழைத்துக்கொண்டு முன்புறமாக நடக்கத் தொடங்கினார்.

படிப்புரைக்கு முன்னால் வந்தவுடன் காரியஸ்தரின் சப்தநாடிகளும் ஒடுங்கின. படிப்புரை வாசலில் ஒரு பெரிய பறவை உட்கார்ந்திருக்கிறது என்பதைத் தவிர, மற்ற விவரங்கள் எதுவும் வெளியூர்க்காரர்களான மரமேறிகளுக்குத் தெரிந்திருக்கவில்லை. ஆனால், அவர்களும் தயங்கி நின்றார்கள். தங்க நிறத்திலிருந்த இந்தப் பறவைக்கு மனிதனது தோற்றமும் இருந்தது. இப்படிப்பட்ட அதிசயப்பிறவியை அவர்களும் இப்போதுதான் முதன் முறையாகப் பார்த்தனர்.

"இது இந்த இடத்தில சாதாரணமா தென்படுற ஒரு விதமான பறவை. இது யாரையும் ஒண்ணும் செய்யாது" நடுங்கும் குரலில் காரியஸ்தர் கூறினார். பிறகு பரிதாபத்துடன் சற்றுத் தூரத்தில் நின்றிருந்த சேகரன்தம்பியையும் அவனது மைத்துனர்களையும் கவனித்தார்.

"ஸ்...ஸ்... விலகு விலகு!" - மரமேறிகள் அரிவாள்களை ஓங்கியபடி கிருஷ்ணப்பருந்தை விரட்ட முற்பட்டனர். இதையெல்லாம் பொருட்படுத்தாமல் உட்கார்ந்திருந்தது பக்ஷி ராஜா.

"அது அங்கேயே இருக்கட்டும். நீங்க உள்ளே போங்க!" சேகரன்தம்பி உரத்த குரலில் உற்சாகப்படுத்தினான்.

மரமேறிகள் மூன்று பேரில் மிகவும் இளைஞனான ஒருவன் மட்டும் என்ன வந்தாலும் வரட்டுமென்று அரிவாளை காற்றில் வீசியபடி படிப்புரைக்குள் வலது காலை வைத்ததுதான் தாமதம், மின்னல் வேகத்தில் மேற்புறம் பாய்ந்த கிருஷ்ணப்பருந்து அவனது நெற்றியில் வலுவாகக் கொத்தியது. உயிர்போகும் வேதனையுடன்



அவன் வந்த வழியே திரும்பி ஓடத் தொடங்கினான். மீதமிருந்த இருவரும் காரியஸ்தரும் இன்னொரு திசையில் பாய்ந்தோடினர். சேகரன்தம்பியும் மைத்துனர்களும் அதற்குள் சிட்டாகப் பறந்து விட்டிருந்தனர்.

உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் ஆசையில் பின்வாங்கி ஓடிய சொத்துக்களைக் கைப்பற்றவந்த வீரர்களைப் பார்த்துப் பார்வையாளர்கள் உரத்த குரலில் சிரித்தார்கள். கொட்டாரத்தின் மேற்புறத்தில் வட்டமிட்டுப் பறந்து கொண்டிருந்த கிருஷ்ணப்பருந்து ஓடுபவர்களைத் துரத்திச் சென்று தாக்கக்கூடும் என்று எல்லோரும் நினைத்தனர். ஆனால், அப்படி எதுவும் நடக்கவில்லை. சற்று நேரத்திற்குள் கிருஷ்ணப்பருந்து பறந்து உயர்ந்து மறைந்தது. சொத்துக்களைக் கைப்பற்ற வந்தவர்கள் நேராகக் களீக்கல் வீட்டை அடைந்தனர்.

"என்ன, தேய்காய் வெட்டாம எல்லோருமா திரும்பி வந்துட்டீங்க?" பார்வதிதங்கச்சி கேலிக் குரலில் கேட்டார்.

"பிணத்தைக் குத்தாதீங்கம்மா" சேகரன்தம்பியின் குரல் தழுதழுத்தது.

"இதை நான் எதிர்பார்த்தேன். நம்மளோட மாந்திரீகன் மனம் வருந்திக் கூப்பிட்டா உடனே கிருஷ்ணப்பருந்து ஓடிவரும். போதாக்குறைக்கு குமாரன் கருடனை அடிக்கடி பிரத்தியட்சப் படுத்துறவன். அதனாலதான் இதெல்லாம் வேணாம்னு நான் ஆரம்பத்திலேயே சொன்னேன். இந்தக் கிழவி பேச்சை யார் காதுல போட்டுக்கிறீங்க?"

மாப்பிள்ளைகளை உற்றுக் கவனித்த பார்வதிதங்கச்சி கேட்டார்: "கிருஷ்ணப்பருந்தைக் கொன்னுட்டு அந்தக் கறியை வறுத்துச் சாப்பிட்டு வர்றோம்னு வீம்பாச் சொல்லிட்டுக் கொட்டாரத்திற்குப் போனீங்க? என்ன ஆச்சு?" மரமேற வந்தவர்களுக்கு நேராக விரலைச் சுட்டிக்காட்டிய அவர் தொடர்ந்தார்: "இந்த அப்பாவிகளுக்குப் பணம் கொடுத்து முதல்ல

அவங்களை அனுப்பு. நல்லவேளையா ஒருத்தனை மட்டும்தான் கிருஷ்ணப்பருந்து காயப்படுத்தியிருக்கு."

"எங்களுக்குக் காசுபணமோ, புதுத்துணிமணிகளோ எதுவும் வேணாம். நாங்க உயிரோட எப்படியாவது ஊர் போய்ச் சேர்ந்துடுறோம், ஆளை விடுங்க." நெற்றியிலிருந்து அப்போதும் வழிந்து கொண்டிருந்த ரத்தத்தை மேல்துண்டால் துடைத்த இளைஞனான மரமேறி பலவீனமான குரலில் பேசினான். பிறகு உடன் வந்தவர்களை அழைத்துக் கொண்டு அவன் பாட்டுக்கு நடக்கத் தொடங்கினான்.

சேகரன்தம்பியின் இதயம் குமைந்து கொண்டிருந்தது. தன் திட்டங்கள் எல்லாம் நாசமாகிவிட்டன. இனிமேல் குமாரனின் முகத்தில் எப்படி விழிப்பது? கொட்டாரத்திற்குள் கருட சேவையில் மூழ்கியிருந்த குமாரனுக்கு இதற்குள் விஷயம் எட்டியிருக்கும். அவன் வெற்றிக்களிப்பில் கெக்கலி கொட்டிச் சிரித்திருப்பான்!

அவ்வளவுதானா? ஊராருக்கு முன்னால் தான் ஒரு கோமாளியாகிவிடவில்லையா? கிருஷ்ணப்பருந்தின் தாக்குதலி லிருந்து தப்பிக்க, தானும் தன் கூட்டாளிகளும் ஓடி வந்தபோது வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்கள் உரத்த குரலில் கேலியாகச் சிரித்த சிரிப்புச் சத்தம் இப்போதும் காதுக்குள் ரீங்கரிக்கவே செய்கிறது. நேரில் பார்க்கும்போதெல்லாம் தன்னை அன்புடனும், மரியாதையுடனும் நலம் விசாரித்த இதே ஊரார், தன்னுடைய அபாயகரமான நிலைமையில் வேடிக்கை பார்த்து சிரிக்கத்தானே செய்தனர்! புத்தூர் மாந்திரீகனின் வித்திகளைப் பற்றி இப்போது அவர்கள் வாயாறப் புகழ்ந்து கொண்டிருப்பார்கள்.

என்ன செய்வது? தன்னுடைய செயலின் விளைவு எதிராளியின் புகழை உயர்த்துவதற்குப் பயன்பட்டுவிட்டது! அம்மா மற்றும் சகோதரிகளின் வார்த்தைகளைச் செவிமடுத்திருந்தால் இந்த அவமானத்தையாவது தவிர்த்திருக்கலாம்!

இன்று மாலையில் கொட்டாரத்தில் விசேஷ பூஜை நடத்துவதற்குப் புதுமனை தந்த்ரியையும் அழைத்து விட்டோம்.



அவர் பட்டியலிட்டுத் தந்த பூஜை சாமான்களும் தயாராக உள்ளன. சரியான நேரத்திற்கு அவர் கொட்டாரத்திற்கு வந்து விடுவார். இனி என்ன செய்வது? இப்போதைய நிலையில் நாம் கொட்டாரத்துக்குள் போய் பூஜை நடத்த முடியுமா?

பூஜையைத் தள்ளிவைத்திருப்பதாக உடனே தந்த்ரிக்குத் தெரியப்படுத்துவதுதான் உத்தமமான வேலை. ஆனால், அவரைப் பார்த்து, இந்த விஷயத்தைத் தெரிவிக்கும் தைரியம் தனக்குக் கிடையாது.

காரியஸ்தரை புதுமனை இல்லத்திற்கு அனுப்பி வைக்கலாம். அவர் போய் தந்த்ரியிடம் பூஜையைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்திருப்பதாகக் கூறட்டும். பூஜைக்காக வாங்கிய பொருள்களை சுப்பிரமண்ய ஸ்வாமி கோயிலுக்குக் காணிக்கையாகக் கொடுத்து விடலாம்.

"ராமாசாரே!" - சேகரன்தம்பி அழைத்தான். தலை குனிந்தபடி நின்றிருந்த காரியஸ்தர் சேகரன்தம்பிக்கு முன்னால் வந்து நின்றார்.

"நீங்க புதுமனை தந்த்ரியின் வீட்டுக்குப்போய், இன்னிக்கு சாயந்திரம் நடத்துறதா இருந்த பூஜையை தற்காலிகமா நிறுத்தி வைச்சிருக்கிறதா சொல்லுங்க."

"என்ன காரணம்னு அவர் கேட்டா என்ன பதில் சொல்றது?"

"தவிர்க்க முடியாத சில காரணங்களால தள்ளி வைச்சிருக்கிறதா சொல்லுங்க."

ராமாசார் புறப்பட்டார். அவர் திரும்பி வருவதை எதிர்பார்த்து சேகரன்தம்பி வீட்டு முற்றத்திலேயே காத்திருந்தான்.

நேரம் நத்தைபோல் மெதுவாக நகர்வதாக அவனுக்குத் தோன்றியது. அவமானத்தின் பாரத்தைத் தாங்க மாட்டாமல் அவனது இதயம் விம்மித் திணறியது. இதயத்துடிப்பை இயல்பான நிலைக்குக் கொண்டுவர அவன் மிகவும் சிரமப்பட்டான்.

தொங்கப்போட்ட முகத்துடன் ராமாசார் திரும்பி வந்தார்.

"என்ன ஆச்சு ராமாசாரே?"

"திருமேனி ஏற்கெனவே ஒப்புக்கிட்டபடி சாயந்திர வேளையில கொட்டாரத்துக் வருவாராம்."

"பூஜையைத் தள்ளி வைச்சிருக்கிறோம்னு சொன்னிங்களா?"

"சொன்னேன். அதுக்காக அவர் என்னைக் கண்டபடி திட்டினார். பூஜைக்குத் தேவையான பொருட்களோட அவரே வந்து பூஜையை நடத்துவாராம். அவரும் குமாரன்தம்பியும் இணைஞ்சு பூஜையை நடத்தப் போறதாகவும் சொன்னார்."

"என்ன!"

"அப்படித்தான் சொல்றார்."

சேகரன்தம்பிக்கு தலைசுற்றுவதுபோல் இருந்தது. தலைக்குள் குளவிகள் தாறுமாறாகப் பறந்தன. பூமியே சுற்றுகிறது. தானும் சுழன்று கொண்டிருக்கிறோம். முதலில் எங்காவது சற்று நேரம் அசையாமல் உட்கார வேண்டும்.

அவன் தட்டுத் தடுமாறி வீட்டின் திண்ணையில் ஏற முயன்றான்.

காரியஸ்தர் ஓடிவந்து அவனைத் தாங்கிப் பிடித்தார்.

*ஸ்ரீமாதா ஸ்ரீமகாராஜ்ஞி*
*ஸ்ரீமத் சிம்ஹாஸனேஸ்வரி*
*சிதக்னிகுண்டசம்பூதா*
*தேவகார்ய சமுத்யதா*
*உத்யத்பானு சஹஸ்ராபா*
*சதுர்பாஹு" சமன்விதா*
*ராகஸ்வரூப பாஸாட்யா*
*க்ரோதாகாராங்கு சோஜ்ஜவ்வலா*
*மனோரூபேக்ஷு" கோதண்டா*
*பஞ்சதன்மாத்ர ஸாயக*



*நிஜாருண ப்ராபூர*
*மஜ்ஜுத் ப்ரஹ்மாண்ட மண்டலா*
...... ...... ......
...... ...... ......

புத்தூர் தறவாட்டுக் கொட்டாரத்தின் தாழ்வாரத்தில் சாணத்தால் மெழுகிய தரையில் தேவியின் யந்திரக் கோலம் வரைந்து இருபுறங்களிலும் பத்மாசனத்தில் சப்பணமிட்டு அமர்ந்திருந்த புதுமனைத் தந்த்ரியும் குமாரன்தம்பியும் ஏக குரலில் லலிதா சகஸ்ரநாமத்தை ஜபித்தனர். பக்தியின் போதையில் ஒவ்வொரு வரியைச் சொல்லி முடித்ததும் ஒவ்வொரு தெற்றிப்பூவாக அர்ச்சித்துக் கொண்டிருந்தனர்.

களீக்கல் கிளையைத் தவிரப் புத்தூர் தறவாட்டின் ஏனைய எல்லாக் கிளை உறுப்பினர்களும் பூஜையைக் காணவும், வணங்கவும் வந்து சேர்ந்திருந்தனர்.

மாலை வேளையில் ஆரம்பித்த தேவிபூஜை முடிவடைந்த போது நள்ளிரவாகிவிட்டது. பூஜை முடிந்த வேளையில் எல்லோரையும் திடுக்கிட வைத்த அந்தச் சம்பவம் நடைபெற்றது. கிருஷ்ணப்பருந்து திடுமென்று வந்து முற்றத்தில் பறக்கத் தொடங்கியது.

குமாரன்தம்பி இரண்டு கைகளிலும் நிறையப் பூக்களை வாரிக்கொண்டு முற்றத்திற்கு ஓடிவந்தான். பக்தி பூர்வமாக புஷ்ப அர்ச்சனை நடத்திய பிறகு ஒற்றைக்காலில் நின்று நடசேவையைத் தொடங்கினான்.

"க்ஷிப ஓம் ஸ்வாஹா" கருடபஞ்சாக்ஷர மந்திரத்தொனிகள், சுற்றுப்புறத்தையே கருடபக்தியால் போர்த்திக் கொண்டது.

கிருஷ்ணப்பருந்தின் சிறகடியோசை உரத்துக் கேட்டது. எல்லாரும் கைகளைக் கூப்பி கருடனை வணங்கினர்.

# 30

இரவின் கடைசி யாமம் தொடங்கியிருந்தது. குமாரன்தம்பி ஆழ்ந்த உறக்கத்திலிருந்தான். யாரோ தட்டி எழுப்பியது போல அவன் திடுக்கிட்டெழுந்தான்.

"குமாரா எழுந்திரு... உன்னைத் தேடி ஆட்கள் வருகிறார்கள்" - பப்புமாமா பேசுவது போலிருந்தது.

வருபவர்கள் யாராக இருந்தாலும் விஷம் தீண்டியவர்களல்ல. விஷம் தீண்டியவர்களாக இருந்தால், கருடனின் சிறகடியோசை கேட்டிருக்கும்.

ஒருவேளை ஆவித்தொல்லை அல்லது யக்ஷியால் பீடிக்கப்பட்ட யாராவதாக இருக்கலாம். சமீப காலமாக இதற்கான நிவர்த்திக் கர்மங்கள் அனேகமாக தினந்தோறும் நடக்கின்றன.

குமாரன்தம்பி பூஜையறைவாசலில் நிலவிளக்கை ஏற்றினான். வீட்டின் கிழக்குப்புறம் இருந்த குளத்தை அடைந்து குளித்துவிட்டு வந்தான். நிலவிளக்கின் முன்பாக நின்றான்.

"என்ன குமாரா! விஷம் தீண்டின யாராவது வருறாங்களா?" -உறக்கத்திலிருந்து விழித்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அங்கு வந்து கேட்டார்.

"யாரோ வர்றாங்க அம்மா. விஷம் தீண்டினவங்களாத் தெரியலை. வேறு ஏதோ தொல்லையா இருக்கணும்."

குமாரன்தம்பி பேசி முடித்த அதே நேரத்தில் வீட்டின் கிழக்குப்புற முற்றத்தில் பயங்கரமான ஓர் அலறல் கேட்டது. உரத்த குரலிலான பேச்சுக் குரல்களும் எழுந்தன.

"இன்னிக்கு வந்திருக்கிறது யாரா இருக்கும்? ஆவியா, பூதமா, ரக்ஷஸா? விஷம் இறக்கும் வேலையை மட்டும் செய்தால்



போதும்னு நான் எவ்வளவோ தடவை சொல்லியிருக்கிறேனே. கேட்டால்தானே? சமீப காலமா இந்த உபாதைகளை நீக்குறதுதான் உனக்கு முழுநேரத் தொழிலா இருக்கு. இந்த வகையறாக்கள் எல்லாமே ஆபத்தானதுங்க. அதுங்களை யெல்லாம் வெறுப்பேத்துறதும் அவ்வளவு நல்லதா தெரியலை" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பொறுமையற்றுப் புலம்பினார்.

அவருடைய மனத்தில் பயம் மகுடி ஊதியது. சமீப நாட்களாக நாள் தவறாமல் உபாதைகளை அகற்றுமாறு வேண்டிக்கொண்டு ஏராளமானவர்கள் வருகின்றனர். ஆவிகள், யக்ஷிகள் மற்றும் துர்த்தேவதைகளின் அலறல்களையும் அட்டகாசங்களையும் கேட்டுக்கேட்டு அலுத்துப்போய்விட்டது. எப்படிப்பட்ட உபாதையையும் அகற்றும் மந்திரஸித்தி தன் மகனிடம் இருப்பது உண்மைதான். அதுவுமன்றி நாளுக்கு நாள் புதிய புதிய மந்திரங்களையும் கற்றுக் கொண்டு அவற்றையும் பிரயோகம் செய்கிறான். சூரக்காட்டு பட்டேரியின் துர்மந்திரவாதப் பிரயோகங்களைத் தடுத்து நிறுத்துவது குமாரனுடைய உபாசனை மற்றும் மந்திரங்களின் வல்லமைதான். இருந்தாலும் தொடர்ந்து இப்படிப்பட்ட துர்த்தேவதைகளுடன் தன் மகன் மல்லுக்கு நிற்பது அவ்வளவு நல்லதாகத் தெரியவில்லை.

சிந்தனையில் ஆழ்ந்துவிட்ட அம்மாவை ஒரு தடவை பார்த்த குமாரன்தம்பி தென்புற தளத்திற்குச் சென்று மந்திரப் பிரம்பைக் கையில் எடுத்தான். பூஜையறை வாசற்படியருகே சற்று நேரம் தியானத்தில் ஈடுபட்டான். பிறகு கம்பீரமாக நடந்து கிழக்குப்புறம் வந்தான்.

கிழக்குப்புற முற்றத்துக்குச் செல்வதற்கான கதவைத் திறந்து அவனுக்கு வழிவிட்ட குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி குரலைத் தாழ்த்தியபடி கூறினார்: "ரக்ஷஸோ, ஆவியோ பீடிச்சிருந்தா வேற மந்திரவாதிகிட்டப் போகச் சொல்லி அனுப்பிடு. இந்த மாதிரி பொல்லாப்பையெல்லாம் நீ உன் தலையில ஏத்திக்க வேண்டாம் குமாரா!"

முற்றத்தின் பக்கமாகத் தாவிய குமாரன்தம்பி அம்மாவின் வார்த்தைகளை முழுவதுமாகக் கேட்கக்கூட இல்லை. முற்றத்தை அடைந்தபோது அவன்கண்ட காட்சி பயங்கரமாக இருந்தது. பிரம்பை ஊன்றிப் பிடித்த மாந்திரீகன் உற்றுப் பார்த்தபடி அப்படியே நின்றுபோனான்.

நான்கு பெண்கள் சேர்ந்து இளம்பெண் ஒருத்தியை வலுவாகப் பிடித்திருந்தனர். அவர்களிடமிருந்து திமிறித் தப்பிக்க முயன்று கொண்டிருந்த பேரழகியான இளம்பெண் கைகால்களை உதைத்தபடி என்னவெல்லாமோ புலம்பிக் கொண்டிருந்தாள். எரிந்துகொண்டிருந்த திப்பந்தத்தை வீசியபடி வயதான ஒருவர் துயரக் குரலில் கூறினார்: “ராத்திரியில சாப்பிட்டுட்டுப் பாயில படுத்துட்டா. படுத்த கொஞ்ச நேரத்துலயே துள்ளிக் குதிக்க ஆரம்பிச்சிட்டா. விடியுறவரைக்கும் கூட காத்திருக்க முடியலை. கட்டுப்படுத்த முடியாததால நடுராத்திரின்னு கூடப் பாக்காம கொண்டு வந்துட்டோம். இவளை இங்க கொண்டு வர்றதுக்கே நாங்க படா்தபாடு பட்டுட்டோம்.”

குமாரன்தம்பி கூட்டத்திலிருந்த பெரியவரை அடையாளம் தெரிந்து கொண்டான். அந்தப் பகுதியின் பெரும்நிலக்கிழாரான மணிமங்கலத்து கேசவன் நாயர். அவருடைய ஒரே மகள் பானுமதியை எப்போதோ ஒரு தடவை பார்த்த ஞாபகம். அன்று அதிசயத்தில் அப்படியே வாயைப் பிளந்துகொண்டு நிற்கவும் செய்தோம். விவரிப்புக்கு அப்பாற்பட்ட அழகி அவள். ஒரு பைத்தியக்காரி மாதிரித் தனக்கு முன்னால் நிற்கும் இந்தப் பெண் அவளேதானா?

சந்தேகத்தைப் போக்கிக் கொள்வதற்காக குமாரன்தம்பி அவரிடம் கேட்டான்:“உங்க மகதானே இது?”

“ஆமாம் தம்பி! மகனும் மகளுமா இவ ஒருத்திதான் எனக்கு” - பெரியவர் கண்ணீர் சிந்தியபடி பதிலளித்தார்.

“இதோ வந்துடுறேன்” - குமாரன்தம்பி அவசரமாக வீட்டிற்குள் நுழைந்தான். நிலவறைக்குச் சென்று விளக்கேற்றி பத்மாசன



மிட்டு உட்கார்ந்து கண்களை மூடினான். பகளாமுகீ மந்திரம் நினைவிற்கு வந்தது.

சமீபத்தில் விதிப்படி பூஜா யந்திரத்தைத் தயாரித்து பகளாமுகீதேவியின் விக்கிரகத்தை வைத்துப் பூஜை செய்திருந்தான். மஞ்சள் உடை உடுத்து, மரமஞ்சளால் செய்த ஜபமாலையைக் கையிலேந்திக் கணக்காகப் பத்தாயிரம் தடவை மந்திரம் ஜபித்து, மஞ்சள் நிறப் புஷ்பங்களை நூற்றியொரு தடவை ஹோமிக்கவும் செய்தான். கண்டிப்பாகத் தனக்கு பகளாமுகியின் மந்திரஸித்தி கிடைத்திருக்கும். அதைப் பரிசோதித்துப் பார்க்கக் கிடைத்திருக்கும் ஒரு சந்தர்ப்பம் இது. பகளாமுகீதேவி வெளிப்பட்டால் எப்படிப்பட்ட துர்த்தேவதையும் கண்மூடித் திறப்பதற்குள் விரட்டியடிக்கப்படும்.

‘தேவீ, மஹாமாயே! என்னை அனுக்கிரகியுங்கள்” அவன் பக்தியுடன் கை கூப்பினான்.

வெள்ளித் தட்டு ஒன்றில் மஞ்சள்தூளை எடுத்து, மரமஞ்சள் மாலையை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டான். மஞ்சள் வேட்டியை அணிந்து, மாந்திரீகப் பிரம்புடன் கிழக்குப்புற முற்றத்தை அடைந்தான் அதற்குள் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி ஒரு நிலவிளக்கை ஏற்றித் திண்ணையில் வைத்திருந்தார்.

துள்ளிக் குதித்துக் கொண்டிருந்த அந்தப் பெண்ணின் தோரணை சட்டென்று மாறியது. அவள் துள்ளலை நிறுத்திவிட்டு சுயநினைவு பெற்றவளைப் போல நிதானமாகப் பேசத் தொடங்கினாள்.

“நீங்க என்னை என்ன செய்யப் போறீங்க?” மாந்திரீகனை உற்றுப் பார்த்தபடி கேட்டாள்.

மஞ்சள் தூளால் முற்றத்தில் யந்திரம் வரைந்து கொண்டிருந்த மாந்திரீகன் தலையை உயர்த்தி எதிர்க்கேள்வி கேட்டான்:

“நீ யார்?”

“அதைச்சொல்ல முடியாது!”

"முடியாட்டால் பரவாயில்லை. ஆனா, கொஞ்ச நேரம் கழிச்சு நீயே சொல்லிட்டு அழப் போற!"

"இல்லடா நாயே! நான் சொல்லமாட்டேன்; அழமாட்டேன். உன் மந்திரசக்தி என்னை ஒண்ணும் பண்ணாது. மரியாதையா நீ வீட்டுக்குள்ள போய்டு. இல்லேன்னா உன்னை நான்..."

"ம்..ம்...முழுசா சொல்லிமுடி!"

"உன்னை நான் கொன்னுடுவேன்."

"சரி! நான் இறந்து போயிடுறேன்"-யந்திரம் வரைந்து முடித்ததும் குமாரன்தம்பி நிலவிளக்கை எடுத்து யந்திரத்தின் மையத்தில் வைத்தான். அதற்கு முன்னால் மந்திரப் பிரம்பையும் வைத்தான்.

"என்ன, இப்ப நம்ம பலாபலத்தைப் பார்த்துடலாமா?" தலையை உயர்த்திய குமாரன் அந்தப் பெண்ணிடம் கேட்டான். அவளது அழகான முகம் பயப்படுத்தக் கூடியதாக மாறியது. கண்களில் குரூரம் மின்னியது. முகத்தின் தசைகள் இறுக்கமடைந்து முறுக்கிக்கொண்டன. தனது சக்தி முழுவதையும் ஒன்று திரட்டிக் கொண்டு அவள் அலறினாள். அவளைக் கட்டுப்படுத்த முடியாமல் அந்த நான்கு பெண்களும் திணறுவதைப் பார்த்த மாந்திரீகன் கூறினான்: "அவ்ளை விடுங்க. யாரும் பிடிக்கவேண்டியதில்லை!"

பெண்கள் அவளை விடுவித்தனர். அவள் மாந்திரீகனுக்கு நேராகக் குதித்தாள். அவன் மந்திரப்பிரம்பை எடுத்துக்கொண்டு அவளை முறைத்துப் பார்த்ததும் சற்றுப் பின் வாங்கினாள்.

பத்மாசனத்தில் அமர்ந்து தியானத்தில் ஆழ்ந்த குமாரன்தம்பி ஜபத்தை ஆரம்பித்தான்:

*ஸௌவர்ண்ணாஸன ஸம்ஸ்திதாத்ரிநயனாம்*
*பீதாம்ஸு"கோல்லாஸினீம்*
*ஹேமாம்பாம் கருசீம் ஸஸாங்க முகுடாம்*



*ஸச்சபகஸ்ரக்யுதாம்*
*ஹஸ்தைர்ம்முத் சரபாஸவஜ்ரரசனா:*
*ஸம்பிப்ரதீம் பூஷனணர்*
*வ்யாப்தாம்கீம் பகளாமுகீம்த்ரிஜகதாம்*
*ஸஸ்தம்பினீம் சிந்தயேத்*

மாந்திரீகனின் மனக்கண்களுக்கு முன்பாக தேவியின் வடிவம் தெளிவடைந்தது. அவன் புளகாங்கிதமடைந்தான். என்ன ஒரு தரிசனம்! பிரபை சொரியும் தங்கப்பீடத்தில் கம்பீரமாக அமர்ந்திருந்தாள் சர்வாபரண பூஷிதையான தேவி. திருக்கண்களிலிருந்து தீப்பொறிகள் கிளம்பின. தலையில் சந்திரப் பிறை பதித்த தங்கக் கிரீடம். நான்கு திருக்கரங்களிலும் பாசக்கயிறு, வஜ்ரம், முத்ஹரம், காஞ்சி போன்றவை இருந்தன.

பக்தியின் போதையில் மூழ்கிய மாந்திரீகனின் உதடுகள் அசைந்தன.

*ஓம் ஹ்ரீம் பகளாமுகீ*
*ஸர்வதுஷ்டானாம் வாசம் முகம்*
*பதம் ஸ்தம்பய ஜிஹ்வாம்கீலய*
*புத்திம் வினாஸய ஹ்ரீம் ஓம்*
*ஸ்வாஹா-ஓம் ஹ்ரீம் ஹூம் ஹ்ரீம் ஃபட்*

அவன் மந்திரத்தை ஜபித்துக் கொண்டேயிருந்தான்.

இளம்பெண் மீண்டும் துள்ளத் தொடங்கினாள். துள்ளலுக்கு நடுவே உடுத்திருந்த உடைகளை ஒவ்வொன்றாக அவிழ்த்து வீசி எறிந்தாள். ரவிக்கையையும் உள்ளுடைகளையும் கண்டபடி கிழித்துக் கொண்டாள். அவளுக்கு உடையணிவிக்க மேற்கொண்ட உறவினர்களின் முயற்சிகள் தோல்வியடைந்தன. அசாதாரணமான உடல்பலம் பெற்றிருந்த அவள் பயங்கர உருவத்துக்கு மாறினாள். பிறந்தமேனியுடன் மாந்திரீகனுக்கு முன்னால் வந்து நின்று ஆபாச வார்த்தைகளால் அர்ச்சித்தாள்.

திண்ணையில் நின்றிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வீட்டிற்குள் போனார். அந்த இளம்பெண்ணின் நிர்வாணத்தை

மறைக்க முயன்று தோல்வியடைந்த உறவினர்கள் என்ன செய்வதென்று தெரியாமல் அவமானத்தில் தவித்தனர்.

"டேய் மந்திரவாதி! உன்னை நான் இப்போ கொல்லப் போறேன். நிறுத்துடா உன் மந்திரத்தை" - அவள் வன்மத்துடன் கத்தினாள்.

மாந்திரீகன் கண்களைத் திறந்தான். வலது கையில் பிரம்புடன் எழுந்து நின்றான். மந்திர ஜபத்துடன் பிரம்பால் அவளது உச்சந்தலையில் ஓங்கியடித்தான்.

"இதுக்குள்ள வந்துநில்''- யந்திரத்தைப் பிரம்பால் சுட்டிக்காட்டிய அவன் கட்டளையிட்டான். அவள் அதற்குக் கீழ்ப்படியவில்லை. இம்முறை அவன், அவளது உடல் பகுதிகளிலெல்லாம் தாட்சண்யமில்லாமல் பிரம்பால் விளாசினான்.

"என்னைக் கொல்லாதீங்க"- கைகளைக் கூப்பியவாறு அவள் யந்திர வட்டத்திற்குள் வந்தாள்.

"நீ யார்? உண்மையைச் சொல்!"

"நான் ஒரு ரக்ஷஸ்."

"உன்னை ஏவுனது யார்?"

"ஒரு மந்திரவாதி."

"எந்த மந்திரவாதி?"

மறுபடியும் பிரம்படி விழுந்தபோது அவள் பதிலளித்தாள்: "சூரக்காட்டு பட்டத்திரி."

"நீதான் இதுக்கு முன்னால என் சித்தியைக் கொல்றதுக்காகக் கரும்பூனை உருவத்துல வந்தியா?"

"ஆமாம்..."

"உன்னை நான் பந்தனம் பண்ணட்டுமா?"



"ஐயோ வேண்டாம். நானே போயிடுறேன். இனிமேல் நான் யாருக்கும் தொல்லை கொடுக்கமாட்டேன்."

"சத்தியம் செய்!"

"சத்தியம், சத்தியம், சத்தியம்!"

"இந்தப் பெண்ணோட உடம்பிலிருந்து விலகின பிறகு மறுபடியும் இவளுக்குத் தொல்லை தருவியா?"

"இல்லை... மாட்டேன்!"

"சத்தியம் செய்."

"சத்தியம், சத்தியம், சத்தியம்'!"

மாந்திரீகன் கண்களை மூடி மந்திரம் சொன்னான். அவள் திடுமென்று பின்புறமாக மல்லாந்து விழுந்தாள். அவளுடன் வந்தவர்களில் ஒருவர் அவளுடைய வேட்டியை எடுத்து அவள் உடம்பைப் போர்த்தினார்.

"பட்டேரி மூலமா யார் இதைச் செஞ்சிருப்பாங்க?"- குமாரன்தம்பி, கேசவன் நாயரிடம் அனுதாபம் தொனிக்கக் கேட்டான்.

அந்தப் பெரியவர் தழுதழுத்த குரலில் பதிலளித்தார்: "எனக்குத் தெரிஞ்சவரையில எனக்கு ஒரேயொரு எதிரிதான் இருக்கான். என் மருமகன் (சகோதரி மகன்) ஸ்ரீகண்டன். சரியான குடிகாரன். பொறுக்கியாத் திரியுற அவனுக்கு இவளைக் கல்யாணம் செஞ்சு தரணுமாம். இவளுக்கோ அவனைப் பார்த்தாலே பிடிக்கலை. என்னோட ஒரே மகளை அவனுக்குக் கட்டிக் கொடுக்க எனக்கும் மனசில்லை. அவன் நெனைச்ச காரியம் நடக்காதுன்னு தெரிஞ்சதும் அவன்தான் பட்டேரி மூலமா இப்படிச் செஞ்சிருக்கணும்."

"சரி, எதுக்காகவும் கவலைப்படாதீங்க. ஒரு பாதுகாப்புத் தகடு எழுதித் தர்றேன். அதைக் கட்டிக் கொண்டால் இனிமேல்

எந்தவிதமான தொல்லையும் இவளுக்கு ஏற்படாது" குமாரன்தம்பி பெரியவரை ஆறுதல்படுத்தினான்.

பொழுது விடிந்து விட்டிருந்தது. கிழக்குக் குளத்தில் குளித்துவிட்டு வருவதற்குள் அந்தப் பெண்ணுக்குச் சுயநினைவு திரும்பியிருந்தது. அவள் வேட்டியை உடுத்து, மார்புக் கச்சையை அணிந்து தலைகுனிந்தபடி நின்றுகொண்டிருப்பதைக் கவனித்த குமாரன்தம்பியின் இதயத்துடிப்பு சட்டென்று அதிகரித்தது. உடம்பு நடுங்கத் தொடங்கியது. மனத்தில் அன்றுவரை இல்லாதிருந்த உடலுறவு வேட்கை முதன் முதலாகத் தளிர்விட்டது. மாந்திரீகனது மனக்கட்டுப்பாட்டிற்கு ஆபத்து தோன்றியது. அவனது கண்கள் அழகான அவளது முகத்தின் மீதே பதிந்திருந்தன. அவன் சுற்றுப்புறத்தை மறந்தான். உடல் சிலிர்த்தது. இதயத்துடிப்புகள் குதிரைகளைப் போல் பாய்ந்தன. பெரியவர் என்னமோ கேட்டது கூட அவன் காதில் விழவில்லை.

அமைதியாக இருந்தாலும் அளவில்லாமல் பேசிய நிமிடங்கள் கடந்து கொண்டிருந்தன. அந்தப் பெண் ஒருமுறை தலையை உயர்த்தியபோது அவளது கண்களுடன் மாந்திரீகனது கண்களும் கலந்தன!

"நாங்க புறப்படலாமா?" -பெரியவர் கேசவன் நாயர் மூன்றாவது தடவையாகக் கேட்டார்.

குமாரன்தம்பி திடுக்கிட்டவாறு பதிலளித்தான்; "அப்படியே ஆகட்டும். தகடு எழுதினதும் நானே அங்க கொண்டு வர்றேன்"

"அது சிரமமில்லையா? இவளைக் கூட்டிட்டு நானே இங்க வர்றேன்" பெரியவர் கூறினார்.

"வேண்டாம்! நான் மணிமங்கலம் வீட்டுக்கு வர்றேன்"- குமாரன்தம்பியின் குரலில் பதற்றம் தெரிந்தது.

# 31

மகனது கருடத் தியானத்தைக் கவனித்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்கு வியப்புடன், தவிப்பும் தோன்றியது.

'இவனுக்கு என்ன ஆகிவிட்டது கடவுளே?' அவர் யோசனையில் ஆழ்ந்தார்.

ஒற்றைக்காலில் நின்றுகொண்டிருந்தான் குமாரன். அவனது உதடுகள் அசைந்துகொண்டிருந்தன. கண்கள் ஏன் திறந்தபடியே உள்ளன? முகத்தைப் பார்த்தால் மனம் எங்கோ அலைபாய்வதாகத் தோன்றுகிறது. இவனுடைய மனத்தின் ஐகாக்ரியம் (ஏக சிந்தை) குலைந்து போய் விட்டிருப்பது உறுதி. காரணம் என்னவாக இருக்கும்?

இன்று காலையில் இங்கு கொண்டுவரப்பட்ட மணிமங்கலத்து கேசவன் நாயரது மகளைப் பீடித்திருந்த உபாதையை நீக்கியதிலிருந்துதான் குமாரனின் போக்கே மாறியிருக்கிறது! குளியலை முடித்து வந்தவுடன் பூஜையறை வாயிலில் நின்று கருடத் தியானம் செய்வதுதான் இதுவரை நடந்து வந்த வழக்கம். அதற்கு மாறாக இன்று இவ்வளவு நேரம் கிழக்குப்புற முற்றத்திலேயே நின்றுவிட்டானே? அதுவும் எவ்வளவு நேரம்! தான் உரத்த குரலில் அழைத்தபோது இனிமைக் கனவிலிருந்து விடுபட்டுப் பூஜை அறையருகே வந்தான். அதன்பிறகுகூட மிகவும் மந்தமாகத்தான் தியானத்தை ஆரம்பித்தான். வழக்கமாக அவன் முகத்தில் தென்படும் உற்சாகம் இன்று இல்லை. ஜபம் முடிவது வரையில் எப்போதும் கண்களை மூடியே வைத்திருப்பவன், கண்களைத் திறந்து வைத்தவாறு சிரத்தையில்லாமல் மந்திரங்களை ஜபிக்கிறான்.

மந்திரகர்மத்திலோ, தியானத்திலோ இப்படியொரு அலட்சியம் இதற்கு முன் இவனுக்கு ஏற்பட்டதில்லை.

இஷ்டதேவதையின் வடிவத்தை மனத்தில் உருவகப்படுத்திக் கொண்டு மனத்தை ஓர் இடத்தில் நிலைநிறுத்துகிற மனோதிடம்தான் ஒரு மாந்திரீகனது மூலதனம். குமாரனுக்கு அது முழுமையாகக் கைவரப் பெற்றதில் தான் எவ்வளவு பெருமிதப்பட்டிருக்கிறோம். இந்த அளவு மனஒருமை (ஐகாக்ரியம்) தனது சகோதரன் பப்புவிற்குக் கூட ஏற்பட்டதில்லை. குமாரனது தியானம் மற்றும் மந்திரகர்மங்களின் அசாதாரணமான சக்தி விசேஷத்தினால்தான் கிருஷ்ணப்பருந்து தொடர்ச்சியாக அவனுக்குக் காட்சியளிக்கிறது.

தன் மகனது மனத்திற்குள் விருந்து வந்திருக்கும் சிந்தனை எதுவாக இருக்கும்? நினைக்க நினைக்கத் தன்னுடைய மனத்தில் பயம் குலவையிடுகிறது.

மணிமங்கலத்து கேசவன் நாயரின் மகளைப் பார்த்த பிறகுதானே குமாரனுக்கு மனமாற்றம் ஏற்பட்டது? ஒருவேளை அவளிடம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டானோ? மாந்திரீகக் கர்மங்களை நடத்திக் கொண்டிருக்கும்போது மலர்பாணமேற்று மாந்திரீகனின் திடசித்தம் குலைய ஆரம்பித்திருக்குமோ? முழுமையைப் புணர்ந்திருக்கும் அவளது அவயவங்களின் அழகு இவனை உன்மத்தம் கொள்ளச் செய்திருக்குமோ? அழகியான அவள் உடலில் ஒரு பொட்டுத் துணியும் இல்லாமல் துள்ளியாடியபோது தன் மகனது பிரம்மச்சரிய விரதத்தின் மூடி திறக்கப்பட்டிருக்குமோ?

பெண்ணின் அழகு மகாயோகிகளையே வழிதவறச் செய்ததில்லையா? பைராகிகளையேகூட பெண்ணின்பப் பித்தர்களாக மாற்றி விடவில்லையா? அவ்வளவு ஏன்? படைப்புக் கடவுளையேகூட பெண்ணின்பப் பித்துக்கொள்ளச் செய்தது பெண்ணழகுதானே? எப்போதோ மத்ஸ்ய புராணத்தில் வாசித்த ஒரு கதை நினைவுக்கு வருகிறது...



பராசக்தியின் அம்சமான பிரம்மா தனது சொந்த தேஜஸ் (ஒளி)ஸில் இருந்து ஒரு பெண்ணைப் படைத்தார். அவளது வடிவழகில் மயங்கிய பிரம்மா அந்த விநாடியே அவள்மீது காமாவேசம் கொண்டார். தன்னைப் படைத்தவரின் மனநிலையை உணர்ந்த அந்த அழகி-சரஸ்வதி வலதுபுறமாக ஒதுங்கினாள். உடனே பிரம்மாவின் வலது புறத்தில் ஒரு முகம் தோன்றியது. தந்தையாரின் சிருங்காரச் சேட்டைகளைப் பார்த்து மனம் நொந்த மகள் மற்றொருபுறம் ஒதுங்கினாள். அந்தத் திசையிலும் பிரம்மாவுக்கு ஒரு முகம் தோன்றியது. கடைசியில் வேறு வழியே கிடையாது என்று தோன்றியபோது சரஸ்வதி ஆகாயத்தின் பக்கமாக உயர்ந்தாள். பிரம்மாவின் ஒரு புதிய முகமும் மேற்புறமாக உயர்ந்து நீண்டது. தப்பிக்க முடியாமல் போனதும் சரஸ்வதி மனத்துயருடன் தனது அப்பாவின் ஆசைக்கு இணங்க வேண்டியதாயிற்று. அதன்பிறகு அவர்கள் ஒரு நூற்றாண்டுக் காலம் தேனிலவு கொண்டாடினார்களாம்.

'என் பித்ருக்களே, கருடபகவானே, என் மகனது மனத்திற்குப் பலம் தாருங்கள்! மாந்திரீகனான விநாடியிலிருந்து கடுமையான விரதத்தை மேற்கொண்டு பிரம்மச்சரியம் காத்துவரும் குமாரனுக்குள் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாமல் காத்தருளுங்கள்!'

'தலைமுறை தலைமுறையாக இந்த வீட்டு மாந்திரீகர்கள் அனுஷ்டித்து வரும் கடினமான விரதம்தான் பிரம்மச்சரியம். பிரம்மச்சரியம் தவறினால் கருடப்பிரீதி குறைந்துகொண்டேவரும். நாளடைவில் கிருஷ்ணப்பருந்து விலகிவிலகிப் பிரிந்துவிடவும் செய்யும். அத்துடன் மாந்திரீகனின் ஸித்தியும் அழிந்துவிடும் என்பதுதான் நம்பிக்கை. என் மங்குப்பாட்டியே, காரணவர்களே, நம் குழந்தைக்கு மனோபலம் தாருங்கள்!'

மனத்திற்குள் விம்மி வெடித்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி மகனருகே சென்று அதட்டுவது போல் கேட்டார்: "உனக்கு என்ன ஆச்சு மகனே! நீ மந்திரம் சொல்றயா இல்ல, கனவு காணுறயா?"

திடுக்கிட்ட குமாரன்தம்பி பதைபதைத்துத் தடுமாற்றத்துடன் பதிலளித்தான்: "ஒண்ணும் இல்லம்மா! நான், நான்..."

அவனது மனத்திற்குள் குற்ற உணர்வு அணிவகுத்து நின்றது. உடல் நடுங்கியது.

உடனே அவன் கண்களை மூடி, கருடசேவையில் ஈடுபட்டான். குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சமையலறைக்குப் போனார்.

ஒரு சில நிமிடங்களிலேயே குமாரன்தம்பி கண்களைத் திறந்தான். கருடசேவையைத் தொடர முடியாதென்பது அவனுக்குத் தெளிவாக விளங்கியது. எவ்வளவோ முயன்றும் மனத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. மாந்திரீகனாகப் பதவியேற்ற பிறகு இப்படி ஓர் அனுபவம் இதுவரை ஏற்பட்டதில்லை. கருட சேவையைத் தொடங்கும் விநாடியிலேயே மனவலிமையும், மனத்தூய்மையும் சுலபத்தில் ஏற்பட்டுவிடும். மனம் ஏக சிந்தனையில் லயித்துவிடும். இதயம் பக்தியின் போதையில் மூழ்கித் திளைக்கும்.

இன்றைய அனுபவமோ? உதடுகளிலிருந்து கருட மந்திரங்கள் பொழிந்தபோது, மனம் மற்றோர் இடத்தில் கேளிக்கையில் திளைத்தது.

சிறகடித்துப் பறக்கும் கிருஷ்ணப்பருந்தின் தேஜோ (ஒளி) மயமான உருவத்தில் மனத்தைச் செலுத்த முயலும் தன்னுடைய முயற்சி தோல்வியடைகிறது. மனத்தின் மதில்களுக்குள் மற்றொரு வடிவம்தான் நிறைந்திருக்கிறது. மார்புக்கச்சை கட்டி, முகம் தாழ்த்தி நிற்கும் பானுமதியின் அழகான வடிவம். அதற்கு முன்னால் தன்னுடைய மனோசக்தியும் ஸித்திகளும் வலுவிழந்து விடுகின்றன!

இப்படிப்பட்ட மனோநிலையில் கருடசேவையைத் தொடரமுடியாது. இன்றைய விடியற்கால பூஜை மற்றும் சடங்குகள் முழுமைபெறாமலே முடிவடையட்டும். பலவீனம் வெற்றி



கொண்டுள்ள மனத்தைப் புனித நதியில் குளிப்பாட்டிய பிறகுதான் மேற்கொண்டு தியானமும், ஜபமும்!

'கொட்டாரத்திற்குப் போகலாமா?' அவன் யோசித்தான். அவ்விடத்தின் புனிதச்சூழல் தன் மனத்திலுள்ள மாசு மறுக்களை அழித்துவிடும் என்று தோன்றியது.

பெருங்குளத்தை வலம் வந்து கொட்டாரத்தை நோக்கி நடந்த குமாரன்தம்பியின் கண்கள் பெண்களின் படித்துறைப் பக்கம் ரகசியமாகப் பாய்ந்தன. மார்புக் கச்சையுடன் குளித்துக் கொண்டிருந்த அரைகுறை நிர்வாணங்களுக்கு மத்தியில் அந்தக் கண்கள் யாரையோ தேடின; பின்பு ஏமாற்றத்துடன் திரும்பவும் செய்தன.

கொட்டார முற்றத்தை அடைந்த குமாரன்தம்பி பப்புமாமாவின் சமாதிக்கு முன்பாக நின்று வணங்கினான். "எனக்கு அருள் புரியுங்கள், பப்புமாமா! என் மனத்தை நேர்வழியில் நடத்திச் செல்லுங்கள்!"

"கருடசேவையில் மனத்தை அர்ப்பணித்து விடு; தானாகவே எல்லாம் சரியாகிவிடும்"-பப்புமாமா சொன்னதுபோல் தோன்றியது.

மனத்தில் அமைதி படிவதைப் போலத் தோன்றவே குமாரன்தம்பி, கொட்டாரத் திண்ணையில் பத்மாசனமிட்டு அமர்ந்தான். கருடனை மனத்தில் நினைவு கூர்ந்தபோது மஹாவிஷ்ணுவின் வடிவம்தான் பாய்ந்து வந்தது. கருடனை வாகனமாகக் கொண்டவரல்லவா மகாவிஷ்ணு! சரி அவரையே தியானிக்கலாம்.

*கல்பாநோஹக மூலஸம்ஸ்திதவயோ*
*ராஜோன்னதாம் ஸம்ஸ்திதம்*
*பௌஷ்பம் பாணமதேக்ஷு சாபகமலே*
*பாசாங்குஸே பிப்ரதம்*
*சக்ரம் சங்ககதே கரைருததிஜா*
*ஸம்ஸ்லிஷ்ட தேஹம் ஹரீம்*
*நாகாபூஷண பக்தலேபகஸுமம்*
*பீதாம்பரம் ஸம்ஸ்மரேல்*

(கற்பக விருட்சத்தின் அடியில் கருடனின் உயர்ந்த கண்டத்தில் (கழுத்துப் பகுதியில்) இருப்பவனும், புஷ்ப அஸ்திரம், கரும்புவில், தாமரைப்பூ, கயிறு, அங்குசம், சக்கரம், சங்கு, கதை போன்ற ஆயுதங்களேந்தி, எட்டுக் கைகளுடன் விளங்குபவனும், ஸ்ரீபகவதியால் அணைக்கப்பட்டவனும், ஆபரணங்களாலும், சிவப்புநிறப் பூக்களால் அலங்கரிக்கப்பட்டவனும், மஞ்சள் நிறப் பட்டுத் துணியை அணிந்திருப்பவனுமான பகவானைத் துதிக்கிறேன்.)

தியான மந்திரம் ஜபித்து முடித்ததும் தன் மனம் மறுபடியும் நிம்மதியற்றுத் தவிப்பதாகத் தோன்றியது. அவனது கண்கள் நிறைந்து வழிந்தன. பானுமதியின் வடிவம் பகவானது வடிவத்தை மறைத்துக் கொண்டு மனத்திரையில் முண்டியடித்து முன்னேறுகிறது!

தெய்வமே, இது என்ன ஒரு சோதனை! அபாரமான மந்திரஸித்தி பெற்றுள்ள தனக்கு இப்படியும் ஒரு மனச்சஞ்சலமா?

அளவற்ற மனோதிடம் கைவந்ததால்தான், குறுகிய காலத்திற்குள் அசாதாரணமான மந்திரஸித்தியைப் பெறத் தன்னால் முடிந்திருக்கிறது. இளமைக்கே உரித்தான பலவீனங்கள் மனத்தைத் தடுமாறச் செய்ய முயன்ற சந்தர்ப்பங்களிலெல்லாம் மனோதிடத்தின் எல்லைவரை சென்று அதிலிருந்தெல்லாம் தப்பித்திருப்பவனல்லவா நான்!

முழுக்க முழுக்கப் பெண்பித்தனாக இருந்த தான், மாந்திரீகனாகப் பதவியேற்ற நேரத்திலிருந்து, நெறிமுறை தவறாமல் நியமங்களைப் பின்பற்றியுள்ளோம். வாழ்க்கையே அதுவாகத்தான் இருந்தது. பிரம்மச்சரியத்திற்கு, மூச்சைவிட முக்கியத்துவம் தரவேண்டியவன்தான் புத்தூர் தறவாட்டு மாந்திரீகன் என்கிற உணர்வை மனத்திற்குள் ஆழப்பதித்து வைத்திருந்தோம். தன்னுடைய களங்கமற்ற கருடபக்தி, அந்த உறுதியைக் குலைக்காமல் பாதுகாக்கவும் செய்திருக்கிறது.

நள்ளிரவு நேரத்தில் தன் படுக்கையறையைத் தேடிவந்த நாணிக்குட்டியைத் திரும்பிச் செல்ல வைத்தது, எப்படிப்பட்ட



ஆடவனையும் மயக்கிவிடக்கூடிய வடயக்ஷிணியின் மாய வடிவத்திற்கு முன்பாகக் கால்இடறி விழத தொடங்கியபோது வியப்புக்குரிய வகையில் தப்பித்தது, இளமைக் கவர்ச்சி நிறைந்த மீனாக்ஷியின் முன்பாக அடிபணியாமல் பிரம்மச்சரியத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது போன்றவை எல்லாம் தன் மந்திர ஸித்தியின் அற்புதமான பலன்களாக இருந்தன.

மாந்திரீக அரங்கில் கெட்டிக்காரனாகிப் புகழ்பெற வேண்டும் என்கிற வேட்கை, உடலின்ப வேட்கைகளை விரட்டியடித்தது என்பதுதான் உண்மை. தன் லட்சியம் நிறைவேறப் போகும் உச்சகட்டத் தருணம் இது. இந்தத் தருணத்தில் மனத்தில் ஊசலாட்டம் என்பதே கூடாது. ஆனால், இப்போது தன் மனம் பலவீனத்தின் நீராளிப்(ஆக்டபஸ்)பிடியில் அகப்பட்டுத் தத்தளிக்கிறது. தர்மசங்கடத்தை ஏற்படுத்தியிருக்கிறது.

இதயத்தின் அடிப் பரப்பிலிருந்து மேலெழும் உடலின்ப வேட்கையின் நீராவி, உடல் முழுவதும் பரவிக் கொண்டிருக்கிறது. அசைக்க முடியாத பாறையாக இருந்த மனம் இப்போது-அந்த நீராவியின் வெப்பத்தில் உருகத் தொடங்குகிறது! எப்படிப்பட்ட ஒரு சோதனை இது?

இப்படிப்பட்ட சோதனைக் கட்டங்களில் ஆராதனா மூர்த்திகளில் யாராவது ஒருவரை உள்ளம் உருகித் தியானித்தால் மனம் அமைதியடைவதும், பக்தியின் கற்சிலையாக மாறுவதும்தான் இதுவரை நேர்ந்துள்ள அனுபவம். ஆனால், இப்போதோ, அப்படிப்பட்ட முயற்சிகள் எல்லாம் தோல்வியில் முடிவடைகின்றன!

மாந்திரீக ஸித்தி மூலம் உறுதி பெற்றிருந்த மனம், ஒரேயொரு நிமிடத்திற்குள் பெண்ணழகின் அம்புத் தாக்குதலில் நொறுங்கியல்லவா போயிருக்கிறது? பானுமதியின் உடலழகில் மனம் எப்படிக் கரைந்து போயிருக்கிறது?

சுயநினைவில்லாமல், பைத்தியக்காரத்தனமான சேட்டைகளில் ஈடுபட்ட பானுமதியின் நிர்வாண வடிவத்தைப்

பார்த்த ஒரு கணத்தில் தனது உள்ளம் அதிர்ந்தாலும் மந்திர கர்மங்களில் மனத்தை அழுத்தித் தன்னால் தப்பிக்க முடிந்தது. அவளுடைய உடம்பிலிருந்து ரக்ஷஸை வெளியேற்றிய பிறகு குளத்திற்குக் குளிக்கச் சென்றபோதும் தன் மனம் சஞ்சல வசப்படவில்லை. அழுக்குச் சேற்றில் அமிழவில்லை.

குளித்துவிட்டு முற்றத்திற்கு வந்தபோது பானுமதிக்குச் சுயநினைவு திரும்பிவிட்டிருந்தது. உடுதுணியால் மார்புவரை மறைத்து, நாணத்துக்கு அடிமைப்பட்டு முகம் தாழ்த்தி நின்றிருந்தவளை தான் ஒருமுறை ஊடுருவிப் பார்க்க நேர்ந்தது. இதயம் நெளிந்து துடித்தது. பாதங்கள் சிலிர்த்து, உடல் முழுவதும் வியர்த்தது. அணைகட்டித் தேக்கி வைத்திருந்த காமஉணர்வுகள் நுரைத்துப் பொங்கிப் பீறிட்ட முகூர்த்தம் அதுவேதான்!

தன்னுடைய அந்த உணர்வுகள் திடுதிப்பென்று ஏற்பட்டவையா என்ன? இல்லை, முன்பொரு முறை தன் மனத்திற்குள் மோகத்தின் முற்றிய விதைகளை ஊன்றிய உடல் அது! நெஞ்சிற்குள் கிளுகிளுப்பூட்டிய முகம் அது! தன் உடம்பின் ஒவ்வொரு அணுவையும் புல்லரிக்கச் செய்த பெண்மையின் பேரழகல்லவா அது!

அது ஒரு மாலை நேரம். சுப்ரமண்யர் கோயிலின் வடபுறத்திலிருந்த ஆலமரத் திண்ணையில் உட்கார்ந்து கஞ்சா நிறைந்த பீடியைப் புகைத்துக் கொண்டிருந்தோம். மீனாக்ஷியின் கணவன் கோபாலன் அப்போது அருகிலிருந்தான்.

அப்போதெல்லாம் மாலைநேரப் பொழுது போக்கும் இடமே அந்த ஆலமரத்தடித் திண்ணைதான். அங்கு உட்கார்ந்திருந்தால், தீபாராதனையை வணங்கக் கோயிலுக்கு வரும் பெண்களை மிக அருகில் பார்க்க முடியும். மாந்திரீகனாவதற்கு முன்புவரை அதுதான் தனது நிரந்தரமான வழக்கமும்கூட!

"கோபாலா! வந்துட்டிருக்கிற அந்த மோகினி யார்?" மெய்ம்மறந்தவனாகக் கேட்டோம்.



அந்தப் பகுதியை உற்றுப் பார்த்த கோபாலன் மந்திரம் மாதிரி முணுமுணுத்தான்: "ஐயோ! அது மணிமங்கலத்து கேசவன் நாயரோட மகளாச்சே!"

இடம்-வலம் திரும்பாமல் நிதானமாக நடந்துவந்து கொண்டிருந்த அவளுடன் மற்றொரு நடுவயதுப் பெண்மணியும் இருந்தாள். தன்னுடைய கண்கள் இமைக்க மறந்தன. மனம் ஓய்வென்பதை அறிந்ததில்லை. காம உணர்வுகளின் பிரவாகத்தில் கஞ்சாவின் போதை மூழ்கிப் போனது!

இவ்வளவு அழகான வேறொரு பெண்ணை இதுவரையில் பார்த்ததே இல்லை. கடைந்தெடுத்த தங்கச்சிலையா இது! பெண்ணழகின் முழுமையான அவதாரமா?

மோகினிகளுக்குக்கூட இவ்வளவு அழகிருக்காது. இவளைப் பார்த்து ரசிக்க நிச்சயமாக இரண்டு கண்கள் போதாது!

திலோத்தமை என்கிற சொர்க்கலோக சுந்தரியின் முழுமையான அழகைச் சரியாகக் காண்பதற்கு பரமசிவனும், இந்திரனும் ஏராளமான கண்களைப் பெற்ற கதையை மகாபாரதத்தில் படித்ததுண்டு. அப்படித்தான் சிவன் நான்முகனானதும், இந்திரனுக்கு ஆயிரம் கண்கள் மலர்ந்து விரிந்ததும்.

'கடவுளே! என்னுடைய தலையின் இடது புறத்திலும் வலது புறத்திலும் பின்புறத்திலும் மேலும் ஒவ்வொரு கண்கள் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்!' அவள் ஆலமரத் திண்ணையை (அங்கு நாக வடிவச்சிலைகள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருக்கும்) பிரதக்ஷிணம் செய்தபோது தான் மனமாரப் பிரார்த்தித்தோம். அவள் கோயிலுக்குள் நுழையும்வரை தன் கண்கள் ஆயிரம் கண்களின் வேலையை ஒரே சமயத்தில் செய்தன.

"குமாரன்தம்பி, அதுக்காக உலை வைச்சிருந்தா அதை அடுப்பிலிருந்து இறக்கிட வேண்டியதுதான்" தனது பார்வையையும் நடவடிக்கையையும் கவனித்த கோபாலன் கேலிச் சிரிப்புடன்

சொன்னான். தொடர்ந்து மணிமங்கலம் கேசவன் நாயரின் மேன்மையையும், செல்வச் சிறப்பையும் பற்றி விவரித்தான்:

"ஏராளமான நிலபுலன்களோட கம்பீரமான ஒரு ஒற்றை யானை. ஒரே மகளைத் தங்கம் மாதிரி பொத்தி வளர்க்கிறார். அழகு மாதிரியேதான் அந்தப் பெண்ணோட குணமும். அவள் கழுத்தில தாலி கட்டுறவன் நிச்சயமா அதிர்ஷ்டசாலிதான்!"

கோபாலனின் வர்ணனை தன் மனத்திற்குள் ஒரு புதிய யோசனையைத் தோற்றுவித்தது. கேசவன் நாயரது மகளைப் பெண் கேட்டுப் போனால்...? மணிமங்கலம் தறவாட்டைவிட மேன்மையானது தன்னுடைய குடும்பம். நிலபுலன் விஷயத்தில் மட்டும் சற்றுத் தாழ்ந்திருக்கலாம். அவ்வளவுதான்.

தனது யோசனையை வெளியிட்டதும் கோபாலனுக்குச் சிரிப்பு வந்தது.

"அம்புலிமாமாவை பிடிக்கிறதைவிடக் கஷ்டமான விஷயத்தைப் பத்தி நீங்க யோசிக்கிறீங்க. நல்ல படிப்பும், நல்லகுணங்களும் உள்ள ஒரு பையனுக்குத்தான் அவர் தன் மகளைக் கொடுப்பார்."

கோபாலனது வார்த்தைகள் ஆட்சேப அம்புகளாகத் தன் நெஞ்சில் ஆழப் பாய்ந்தன. குறைந்த அளவே படித்துள்ள ஓர் ஊதாரியும் போக்கிரியுமல்லவா தான்? இதயத்தினுள் சுயவிமரிசனம் படையொலி எழுப்பியது. படையொலி கேட்டுப் பயந்த ஆசை மயங்கி விழுந்தது.

ரக்ஷஸை விரட்டிவிட்டுக் குளித்துவந்து பானுமதியைக் கவனித்தபோது முன்னொரு காலத்தில் மயங்கி விழுந்திருந்த ஆசை திடுக்கிட்டு விழித்தெழுந்தது. தான் ஒரு மந்திரவாதி என்பதே மறந்து போனது. பிரம்மச்சரியச் சிந்தனை ஓடி ஒளிந்தது.

அந்த விநாடியிலிருந்து இதுவரையிலும் காமவேட்கை தன்னுடைய பக்தியில் கலப்படமாகிக் கொண்டிருக்கிறது.



பித்ருக்களும், தர்ம தெய்வங்களும் குடியிருக்கும தறவாட்டுக் கொட்டாரத்தின் புனிதமான முற்றத்தை அடைந்தால் மனம் நிர்மலமாகிவிடும் என்று எதிர்பார்த்தோம்.

அப்படி அல்ல! பானுமதியுடனான லயிப்புடன் கட்டுப்பாடற்ற உடலுறவு வேட்கைக்கும் அடிமையாகி விட்டிருக்கிறோம்.

கீழ்ப்படிய மறுக்கும் குதிரையைப் போல் பாய்ந்து கொண்டிருக்கும் மனத்தைக் கட்டுப்படுத்த, சுயக்கட்டுப்பாடு என்கிற கடிவாளம் இப்போது கிடைத்தால் நல்லது!

"கருடபகவானே! வேதவேதாந்த விசாரமுள்ளவரான ஹனுமான் தேவா, புவனேஸ்வரியான பகவதீ, பித்ருக்களே, பப்புமாமா, இந்த அக்கினிப் பரீட்சையில் வெற்றிபெற என்னை அனுக்கிரகியுங்கள். தளர்ந்து துவண்டிருக்கும் இவனை எதற்காக இப்படியெல்லாம் பரிசோதிக்கிறீர்கள்? எதற்காக இப்படித் தண்டிக்கிறீர்கள்?" இரண்டு கைகளையும் தலைமீது அமர்த்திக் கொண்டு தழுதழுத்த குரலில் குமாரன்தம்பி பிரார்த்தித்தான்.

# 32

இப்படியொரு கனவை இதற்கு முன்பு ஒருபோதும் கண்டதில்லை. இரவில் கனவு கண்டு விழித்தெழுந்த அனுபவங்கள் எத்தனையோ ஏற்பட்டதுண்டு. கிருஷ்ணப்பருந்தை, பகவதியை, ஹனுமானை, பப்புமாமாவை-இவர்களையெல்லாம் கனவில் கண்டதுண்டு. ஆனால், இந்த இரவில் பார்த்த கனவு முற்றிலும் வேறுபட்டது. திடுக்கிட்டுக் கண்விழித்த பிறகும் கனவுக்காட்சி மங்காமல், மறையாமல் மனத்திற்குள் தெளிவாகவே தெரிகிறது.

அழகான ஓர் இளம்பெண். தங்கத்தின் நிறம் அவளுடையது. அவிழ்ந்து கிடக்கும் தலைமுடி முழங்காலைத் தொட்டுக்

கொண்டிருந்தது. உடையற்ற உடம்பு. காமவேட்கை நிரம்பிய கண்கள். சிருங்காரச் சிரிப்பைச் சிந்தும் சிவந்த உதடுகள். மூச்சுக்காற்றுக்கு ஏற்றவாறு தாளமிடும் மார்பகங்கள். மயிலாட்டமாடும் ஒயிலார்ந்த உடல் வளைவுகள். பார்வையாலேயே தனக்கு அழைப்பு விடுக்கிறாள். அபாரமான அவளது உடலழகு வர்ணனைகளுக்கு அப்பாற்பட்டது.

பேரழகியான வாசவதத்தையை கேசாதிபாதம் வர்ணிக்கும் ஒரு மணிப்பிரவாளக் கவிதை நினைவுக்கு வந்தது.

*நீரேந்தும் மேகம் போல*
*நீரலையும் கார்கூந்தலும்*
*வண்டுகள் ரீங்கரிக்கும் பூச்சரமும்*
*சந்திரப்பிறையை வெல்லும் பளபளத்த நெற்றியும்*
*முருக்கின் பூப்போன்ற ஒளிசொரியும் அதரங்களும்*
*மந்தார மலரனைய வெண்மையான மதுரப் புன்னகையும்*
*முழுநிலவொக்கும் முகத்தாமரையும்*
*கதம்பமாலை போல் நீளும் தண்கைகளும்*
*பெருமிதம் விளைக்கும் கூரான மார்பகங்களும்*
*அவற்றை உயர்த்திப்பிடிக்கும் மாரிடமும்*
*கோமளமான மெல்லிடையும்*
*நெற்கதிர் போல் வரிசையில் முடியிழைகளும்*
*கதலிவாழைத்தண்டுபோல் துடைகளும்*
*தெளிநீர் தடாகத்துத் தாமரையன்ன கடிதடங்களும்*
*தாழம்பூவின் மொட்டாக ஒளிரும் பாதங்களும்*
*மனத்தைக் கவரும் ஒயில்வடிவமும்*
*தெளிந்த பளிங்கு போன்ற கெண்டைக்கால்களும்*
*நட்சத்திரவெண்மையில் மிளிரும் உடல் வண்ணமும்*
*ஒட்டாங்கே ஒளிர்பவள்*

(என்றெல்லாம் பொருள்படும் சுலோகம்)

உண்மையான அதே வாசவதத்தையைத்தானோ தான் கனவில் கண்டது? வேறுபட்ட முகங்களுடன் காட்சியளித்த அந்தக் கனவுக்கன்னி ஒருவேளை ரதிதேவியாக இருப்பாளோ?



பானுமதியின் உருவத்தில் மனத்தை அர்ப்பணித்துப் படுத்திருந்தபோதுதான் உறக்கத்துள் வழுக்கி விழுந்தான். அந்த வீழ்ச்சியிலிருந்து எழுப்பியது கனவுக்கன்னிதான்.

கவர்ச்சிகரமான தோற்றத்தில் தனக்கு முன்னால் வந்து மோகமேற்படுத்திய லாவண்யவதியிடம் தன் மனம் மயங்கி விட்டிருக்கிறது. இதயத்தில் உணர்வு பொங்கி வழிகிறது. உடல் மொத்தமும் குப்பென்று வியர்க்கிறது.

முடியாது! இனிமேல் ஒரு விநாடிகூடத் தாங்க முடியாது. பெண் மணத்தை நுகர்வதற்காக மூக்கு ஆலாய்ப் பறக்கிறது. உலர்ந்து வறண்ட உதடுகளுக்கு முத்த தாகம். மரத்துப்போன கரங்கள் ஆரணங்கை அணைய ஆவேசம் கொள்கின்றன.

உடல் சில்லிடுவது போல்... உடல் தளர்ச்சியடைகிறது. தளர்ச்சியை அகற்ற ஒரு துணை வேண்டும். இனிமேல் சற்று நேரம்கூடத் தாமதிக்க முடியாது.

பானுமதி! அவள்தான் தன் மனத்தின் தலை வாசலைத் தள்ளித் திறந்துகொண்டு உள்ளே நுழைகிறாள். ஆனால், இந்த நள்ளிரவில் அவளைச் சந்திப்பதென்பது நடக்க முடியாத காரியம்.

மீனாக்ஷி, நாணிக்குட்டி, பாறுக்குட்டி - இவர்களில் யாராவது ஒருத்தியாக இருந்தாலும் போதும். அகோரமாகப் பசியெடுக்கும்போது ருசிக்கேற்ற உணவைத் தேர்ந்தெடுப்பது சாத்தியமல்லவே!

தன்னுடைய பிரம்மச்சரியம்! அதை எண்ணி நேரத்தை வீணாக்கும் சந்தர்ப்பமல்ல இது! மாந்திரீகனுக்கு பெண்ணின்பம் தடை செய்யப்பட்டிருப்பது வெறும் ஓர் ஐதீகம்தானே? அது ஒரு நம்பிக்கை மட்டும்தானே?

இணைசேரத் துடிக்கும் ஆசைகளை எத்தனையோ தடவை மந்திரஜபத்தின் மூலமாகவும், தியானத்தின் மூலமாகவும் நெரித்துக் கொன்றாகிவிட்டது. இப்போது அப்படிச் செய்யமுடியாது!

கருடமூர்த்தி ஒருவேளை கோபப்படலாம். ஹனுமான் மனவருத்தப்படலாம். தேவி விரோதம் பாராட்டலாம். பப்புமாமா ஆத்திரப்படலாம். உக்கிரமான சாதனைகளின் (பயிற்சிகளின்) மூலமாகத் தான் பெற்றிருக்கிற மந்திரஸித்திகள் மங்கி விடலாம். பரவாயில்லை. என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும். எது நடப்பதாக இருந்தாலும் அனுபவித்துக் கொள்ளலாம். இதன்மூலம் எது எதிர்ப்பட்டாலும் சந்திக்க வேண்டியதுதான்.

கட்டுப்படுத்த முடியாத அளவில் உடலிச்சைக்கு ஆட்பட்டு விட்ட குமாரன்தம்பி படுக்கையிலிருந்து எழுந்தான். தென்புறக் கதவை மெதுவாகத் திறந்தான். இதயத்துடிப்பின் வேகம் அளவுக்கு மீறியதாக இருந்தது. மூச்சைச் சீராக்க முயன்றபோது கழுத்திலிருந்த ருத்ராக்ஷ மாலை குலுங்கியது. மனம் அங்கலாய்த்தது.

மாந்திரீகனது பவித்திரமான ஆபரணம் ருத்ராக்ஷமாலை. மந்திரோபதேசம் முடிந்தபோது குருவான பப்புமாமா ஆனந்தக் கண்ணீர் பொழிந்தபடி தன் கழுத்தில் இதை அணிவித்தார். தங்கத்தால் இணைக்கப்பட்ட இந்த ருத்ராக்ஷமாலையை.

ஒரு திருடனுடைய பய உணர்வுடன் அந்த மாலையைக் கழுத்திலிருந்து கழற்றிக் கட்டிலிலிருந்த தலையணையின் கீழ் ஒளித்து வைத்தான். இடதுகையின் மேற்பகுதியில் கட்டியிருந்த ரக்ஷாயந்திர (பாதுகாப்புத் தாயத்து) த்தையும் கழற்றி அதையும் மாலையுடன் வைத்தான். உடம்பிலிருந்த மாந்திரீகச் சின்னங்களையெல்லாம் அகற்றி விட்டபோது மிகப் பெரியதொரு பாரத்தை இறக்கி வைத்தது போலிருந்தது.

திடுமென்று இருமல் சத்தம் கேட்ட குமாரன்தம்பி திடுக்கிட்டான். சமையலறைத் திண்ணையிலிருந்துதான் இருமல் கேட்டது. சமையல்காரி பார்கவி அங்குதான் படுத்திருக்கிறாள். கிழவி எழுந்து விட்டிருப்பாளோ? சற்று நேரம் காதைக் கூர்மையாக்கி நின்றான். இல்லை. அவள் விழிக்கவில்லை. அம்மா படுத்திருக்கும் அறையில் எந்தவிதமான சத்தமும் கேட்கவில்லை.



பூனை மாதிரிப் பதுங்கிப் பதுங்கித் தெற்குப்புறத் திண்ணையில் இறங்கினான். சத்தம் எழாமல் கவனமாகக் கதவை மூடினான்.

எங்கே போவது? மீனாக்ஷியை நெருங்க மனம் இடம் தரவில்லை. வெட்கக்கேடாகத் தெரிந்தது. அன்றைய நிகழ்ச்சிக்குப் பிறகு தன்னைப் பார்க்கவே அவள் பயப்படுகிறாள். சில நாட்களுக்கு முன்பு கோயிலில் எதிர்பாராமல் சந்திக்க நேர்ந்தபோதுகூட பதறியடித்து விலகி ஓடினாள்.

நாணிக்குட்டியிடம் போகலாமா? அவளையும் தான் சித்ரவதைப்படுத்தி இருக்கிறோமே? அது மட்டுமா? அவளது அப்பா இறந்துபோன பிறகு அவளையோ, அவளது அம்மாவையோ சந்தித்ததோ, விசாரித்ததோகூட இல்லை. ஏதோ ஒரு போற்றியின் மடத்தில் (வீட்டில்) வெளி வேலைகளைச் செய்து பிழைக்கிறாள் ரோஷக்காரியான நாணிக்குட்டி. இந்த நள்ளிரவில் அவளை நெருங்கினால் அவள் எப்படி நடந்து கொள்வாளோ?

தேவையுள்ளவன் எதற்காகக் கூச்சப்படவேண்டும்? தென்புறமிருந்த குறுக்கு வழியில் சற்றுத்தூரம் கிழக்காக நடந்தால் அவளுடைய வீடு. அங்கேயே போகலாம். பரிதாபகரமான நிலையைச் சொல்லி அழுது புலம்புவாளே தவிர, ஒருபோதும் தன்னை உதாசீனப்படுத்த மாட்டாள். நீண்ட இடைவெளிக்குப் பின் தொடரும் இந்த உறவில் அவள் மகிழ்ச்சியே அடைவாள்.

தென்புறப் படிப்புரை கடந்தவுடன் இடிபோல் முழங்கிய பப்புமாமாவின் குரல் கேட்டது. குமாரன்தம்பி திடுக்கிட்டு நடுங்கினான்.

"குமாரா! வீட்டுக்குத் திரும்பு. நீ புத்தூர் தறவாட்டின் மாந்திரீகனில்லையா? நிலவறைக்குள் நுழைந்து தியானத்தைத் தொடங்கு. உன் மனம் தெளிவடையும்."

"மன்னிக்கணும் பப்புமாமா! பிரம்மச்சரியம் எனக்குத் தேவையில்லை!" - ஒரு விதமாக இந்த வார்த்தைகளைப் பேசிவிட்டு குமாரன்தம்பி கிழக்குப்புறத்தில் விரைவாக நடந்தான்.

"குமாரா, குமாரா... நில் அங்கேயே! நீ ஆபத்தில் குதிக்கிறாயடா. வேண்டாம் குமாரா!" பப்புமாமாவின் குரல் பின்தொடர்ந்தது. கவனிக்காதவனைப்போல் குமாரன்தம்பி நடையின் வேகத்தைக் கூட்டினான்.

நாணிக்குட்டியின் வீட்டு முற்றத்தை அடைவதற்குள் அவன் சோர்வடைந்தான்.

"நாணிக்குட்டி... நாணிக்குட்டி!" - அவன் மூச்சிரைப்புடன் அழைத்தான்.

"யாரது?"- வீட்டிற்குள் இருந்து கேள்வி எழுந்தது. நாணிக்குட்டியின் அம்மாவின் குரல் அது என்பதை உணர்ந்ததும் சற்றுத் துணுக்குற்றான். மீண்டும் அதே கேள்வி உயர்ந்தது. குமாரன்தம்பி தைரியத்துடன் பேசினான்: "நான்தான் புத்தூர் வீட்டு குமாரன்தம்பி வந்திருக்கிறேன்... கார்த்தியாயினி அம்மா."

வீட்டிற்குள் விளக்கு எரிந்தது. கதவைத் திறந்துகொண்டு வலது கையில் மண்ணெண்ணெய் விளக்கை ஏந்தி, கார்த்தியாயினி முற்றத்திற்கு வந்தாள். அவளது முகத்தில் தென்பட்ட வியப்பு கலந்த உணர்ச்சியைப் பார்த்த குமாரன்தம்பி கேட்டான்: "என்ன... தெரியாதவனைப் பார்க்குற மாதிரி பார்க்குறீங்க?"

கார்த்தியாயினி வாய்விட்டுச் சிரித்தாள்: "என் இடுப்பிலேயே தூக்கி வைச்சு வளர்த்த குழந்தையை எனக்கு அடையாளம் தெரியாமப் போகுமா? ஆனா, எங்களை உங்களுக்குத்தான் தெரியாமப் போச்சு!"

"அதெல்லாம் இருக்கட்டும். நாணிக்குட்டியை இப்படிக் கூப்பிடுங்க."

"என்ன சேதி? நாணிக்குட்டிகிட்டச் சொல்ல வேண்டியதை எங்கிட்டயும் சொல்லலாமே?"

குமாரன்தம்பிக்குத் தாங்க முடியாத ஆத்திரம் கிளம்பியது. "நான் சொன்னதைச் செய்யுங்க. நாணிக்குட்டியைக் கூப்பிடச் சொன்னேன்."



அவனது அதிகாரமிடுக்கு கார்த்தியாயினிக்கு எரிச்சலூட்டியது. அவளது குரலின் தொனி மாறியது; "நீங்க இப்போ புத்தூர் தறவாட்டு மாந்திரீகனில்லையா? இந்த நடுராத்திரியில நீங்க நாணிக்குட்டியைப் பார்க்க வேண்டிய அவசியம் என்ன? அவளோட அம்மா நான். எதாயிருந்தாலும் எங்கிட்டச் சொல்லுங்க!"

"நீங்க உள்ளே வாங்க அம்மா" வீட்டிற்குள்ளிருந்து நாணிக்குட்டியின் குரல் உயர்ந்தது. கார்த்தியாயினி விளக்குடன் வீட்டிற்குள் போனாள்.

சில நிமிடங்களுக்குள் நாணிக்குட்டி விளக்குடன் வாசலுக்கு வந்தாள். விளக்கை உயர்த்திப் பிடித்தபடி அவனிடம் கேட்டாள்: "என்னங்க... என்ன விஷயம்?"

குமாரன்தம்பி அவளை இரக்கத்துடன் பார்த்தான். அவளது உருவம் முற்றிலுமாக மாறிவிட்டிருந்தது. பழைய மெருகு மறைந்து விட்டிருந்தது. முகத்தின் இயற்கையான ஒளி குன்றியிருந்தது. கன்னங்களில் பள்ளம் விழுந்திருந்தன. கண்கள் குழிவிழுந்து, உடல் கட்டுத் தளர்ந்து மெலிந்து போயிருந்தாள். அழகியாகவும் ஆரோக்கியமாகவும் இருந்த நாணி, ஆளே மாறிப் போயிருந்தாள். இடைவிடாமல் வழிந்து கொண்டிருந்த அவளது கண்ணீரை இரக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தவன் தழுதழுத்த குரலில் அழைத்தான்: "நாணிக்குட்டி"

"என்ன?" - பணிவுடன் இருந்தது அவள் குரல்.

"உன்னைப் பார்க்கணும்னு தோணுச்சு. அதான் ஓடி வந்திருக்கேன்."

அவனது சோர்வடைந்த குரலில் ஒளிந்திருந்த இங்கிதத்தைப் புரிந்து கொண்டதைப்போல் அவள் கேட்டாள்: "இவ்வளவு நாளா வராத ஆசை, இந்த நடுராத்திரியில மட்டும் ஏற்பட்டதுக்கான காரணம் என்னவோ?"

குமாரன்தம்பியால் பதில் சொல்ல முடியவில்லை. என்ன பதிலைச் சொல்வது என்று அவன் யோசித்துக்

கொண்டிருந்தபோது இரக்கத்திற்குரிய விசும்பலுடன் நாணிக்குட்டி கேட்டாள்: "என்னை புத்தூர் தறவாட்டுக்குக் கூட்டிட்டுப் போக வந்திருக்கீங்களா?"

"நீ என்னை கேலி பண்றியா?"

"உங்களைக் கேலி பண்ண நான் யார்? நீங்க அன்னிக்கு ஒரு நாள் சொல்லலையா... என்னை புத்தூர் தறவாட்டின் மருமகளாக வாழவைப்பேன்; என் கழுத்தில் தாலி கட்டுவேன்னு! சட்டுன்னு அது ஞாபகத்துக்கு வந்ததால கேட்டுட்டேன்."

"நான் மாந்திரீகனாகிட்டதாலதானே, சொன்ன வார்த்தையைக் காப்பாத்த முடியாமப் போச்சு?"- அவன் குரலைத் தாழ்த்தியபடி சொன்னான்: "விளக்கை அணைச்சிட்டு இப்படி வா நீ..."

துயரத்திலும் சிரிக்க முடியும் என்பதை நாணிக்குட்டி புரிந்துகொண்டாள். அவள் சிரித்தாள். கேலி ஊஞ்சலாடும் சிரிப்பு. பிறகு உறுதியான குரலில் சொன்னாள்: "உங்களோட வியாதி என்னன்னு எனக்குப் புரிஞ்சிடுச்சு. என்னை மாதிரி அதை வேற யாரால புரிஞ்சுக்க முடியும்? ஆனால், என்னால அதுக்கு மருத்துவம் செய்ய முடியாது. நான் அந்த மருத்துவத்தையே மறந்துட்டேன். நீங்க வேற ஆளைப் பாருங்க."

"கிருஷ்ணப்பருந்துக்குப் பயப்படுறயா? நான் பிரார்த்தனை செஞ்சாதான் அது வரும்; நீ பயப்படாத!"

"கிருஷ்ணப்பருந்து உடம்பைத்தானே கொத்தும், நெஞ்சைப் புண்ணாக்காதே?"

"சுருக்கமாகச் சொன்னா இப்ப நீ சம்மதிக்கப் போறதில்லை... அவ்வளவுதானே?"

சற்று நேர யோசனைக்குப் பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவளாக நாணிக்குட்டி, குமாரன்தம்பியின் அருகே வந்தாள். பளபளக்கும் அவனது கண்களை கூர்மையாகக் கவனித்தபடி



கேட்டாள்: "ஊரறிய எனக்குப் புடவை தர முடியுமா உங்களால? (புடவைக் கொடை, புடவை தருவது என்பது கேரளத்தின் திருமண வழக்கு. திருமணம் செய்யத் தயாரா என்பது அதன் பொருள்) அதுக்கு மனசிருக்கா உங்களுக்கு?"

தீக்கங்குகளை மிதித்தது போல் உணர்ந்து சட்டென்று காலைப் பின்வாங்கினான் குமாரன்தம்பி. அவனது மனதில் திகிலின் பறையோசை தீவிரமடைந்தது.

தன் கழுத்தைத் தடவியபடி நாணிக்குட்டி கூறினாள்: "இந்தக் கழுத்துல ஒரு தாலிக் கயிறு கட்ட நீங்க தயாரா? தயார்னா... இதோ இந்த உடம்பை உங்களுக்கே விட்டுத்தர்றேன். இப்ப மட்டுமில்ல; இந்த உடம்புல உயிர் இருக்கிற வரைக்கும்."

"நான் ஒரு மாந்திரீகன். எனக்குக் குடும்ப வாழ்க்கை கூடாது நாணிக்குட்டி!"

"நல்லாருக்கே! மாந்திரீகன் ஒரு பெண்ணோட படுத்துக்கலாம்னா, கல்யாணம் பண்ணிக்கிறதுல என்ன தப்பு?."

"நான் உங்கிட்ட விவாதம் பண்ணவரலை. நான் கிளம்புறேன்."

நாணிக்குட்டியை வெறுப்புடன் பார்த்துவிட்டு அவன் நடக்கத் தொடங்கினான். ஏமாற்றமும், கோபமும் ஒன்றுசேர்ந்து மனத்திற்குள் பெரும் ஆரவாரத்தை எழுப்பிக் கொண்டிருந்தன.

கோயிலின் மேற்குப்புறப் பாதை வழியே தென்புறமாக நடக்கும்போது அவன் யோசனையில் ஆழ்ந்தான். 'குறிப்பாக எதையும் தீர்மானிக்காமல், நாணிக்குட்டியின் வீட்டிலிருந்து கிளம்பினோம். நடை அதன்பாட்டுக்கு இதோ மீனாக்ஷியின் வீட்டிற்குக் கொண்டுவந்து சேர்த்திருக்கிறது. அவளிடமும் இதுபோன்றதொரு அனுபவம்தான் கிடைக்குமா? கணவனும் குழந்தைகளும் உள்ளவள். என்ன இருந்தாலும் தன்னிடம் திருமணம் செய்து கொள் என்று அவள் கேட்கப் போவதில்லை.

மீனாக்ஷியின் வீட்டு முன்புறத்தை அடைந்த குமாரன்தம்பி சற்றுத் துணுக்குற்றான். நள்ளிரவு தாண்டிய பின்னும் வெளித்திண்ணையில் உட்கார்ந்து கஞ்சா புகைத்துக் கொண்டிருந்தான் கோபாலன். அவனருகே மண்ணெண்ணெய் விளக்கு ஒன்று எரிந்து கொண்டிருந்தது.

"கோபாலா, நீ இன்னும் தூங்கலையா?" என்று கேட்டபடி குமாரன்தம்பி அவனருகில் உட்கார்ந்தான்.

தரையிலிருந்த விளக்கை எடுத்து வந்திருப்பவனின் முகத்திற்கு நேராகப் பிடித்து அடையாளம் கண்டுகொண்ட கோபாலன் ஆச்சரியத் தொனியில் கேட்டான்: "யாரு, தம்பிசாமியா?" விளக்கை மீண்டும் கீழே வைத்துவிட்டு மடியிலிருந்து கஞ்சா திணித்த பீடி ஒன்றை எடுத்து குமாரன்தம்பியிடம் நீட்டியபடி கூறினான்: "இது அணுகுண்டு மாதிரியான சரக்கு. பீடிச் சுக்கா (புகையிலைத்தூள்) கலக்காம வெறும் கஞ்சா போட்டு ரொப்பியிருக்கேன். எவ்வளவு நாளாச்சு, இதையெல்லாம் நீங்க அனுபவிச்சு? இந்தாங்க, ஆத்மாவைக் கொஞ்சம் சந்தோஷப்படுத்துங்க!"

சற்றுத் தயங்கினாலும் குமாரன்தம்பி இயந்திரகதியில் அதை வாங்கினான். அலைபாயும் மனத்தை இழுத்துப் பிடித்து நிறுத்த இது துணை செய்யும் என்று அவனுக்குத் தோன்றியது.

"அடியே மீனாக்ஷி, எழுந்துவாடி! இப்படி வந்து பாரு யார் வந்திருக்காங்கன்னு!" - கதவைத் தட்டிய கோபாலன் உரத்த குரலில் அழைத்தான்.

"என்ன மனுஷங்க நீங்க... நீங்களும் தூங்குறதில்லை. தூங்குறவங்களையும் ஒழுங்காகத் தூங்கவிடுறதில்லை. நடுராத்திரி தாண்டினதுக்கப்புறம் கஞ்சா போதை அதிகமாயிடுச்சா என்ன?"- தூக்கக் கலக்கத்துடன் கதவைத் திறந்த மீனாக்ஷி கணவனைக் கோபித்துக் கொண்டாள்.

திடுமென்று அந்தக் காட்சியைப் பார்த்தவள் திடுக்கிட்டாள். மாந்திரீகனான குமாரன்தம்பி திண்ணையில் உட்கார்ந்து கஞ்சா புகைக்கிறார்!



"வேலாயுத சாமீ! நான் பார்க்கிறதென்ன கனவா?"- வியப்பின் வசப்பட்ட மீனாக்ஷி வலதுகையைத் தனது நெஞ்சின் மீது பதித்தாள். உள்ளுக்குள் நுரைத்துப் பொங்கிய பீதியைத் தாங்கிக்கொள்ள முடியாமல் அவளது இதயம் திணறியது.

திண்ணையிலிருந்து துள்ளியெழுந்த குமாரன்தம்பி அவளை இறுக்கி அணைதத பிறகுதான் அவள் சுற்றுச் சூழலுக்குத் திரும்பி சுயநினைவு பெற்றாள்.

"ஐயோ...கூடாது!" - அவள் அவனை உதறி விலக்க முயன்றாள். ஆனால், வலுவான குமாரன்தம்பியின் கைச்சிறையிலிருந்து அவளால் தப்பிக்கமுடியவில்லை. அவளை அழைத்துக் கொண்டு அவன் அவளது படுக்கை அறையை நோக்கி நடந்தான்.

"ஐயோ! என்னை ஒண்ணும் செஞ்சுடாதீங்க. நான் அசுத்தமா இருக்கேன். இன்னிக்கு மூணாவது நாள்."

"மூணாவது நாளானாலும் நாலாவது நாளானாலும் நான் உன்னை இன்னிக்கு விடப்போறதில்லை!"- அவளுடன் கட்டிலில் விழுந்தான்.

பைத்தியக்காரத்தனமான உணர்வுச் சுழலில் அகப்பட்டிருந்த குமாரன்தம்பி தன் உடல்பலம் முழுவதையும் அவளிடம் பிரயோகித்தான். இரக்கம் என்பதே கிஞ்சித்தும் இல்லாத மிருகத்தனமான வெறியுடன் கூடியதாக இருந்தது அவனது செயல்.

தான் நசுங்கியே சாகப் போகிறோம் என்று அவளுக்குத் தோன்றியது. அப்படிப்பட்ட பிராணவேதனைக்கு நடுவே அவள் ஹீனஸ்வரத்தில் முனகினாள்: "கதவு திறந்து கிடக்கு..."

"கிடக்கட்டும் விடு..." மூச்சிரைத்தபடி அவன் பதிலளித்தான்.

மீனாக்ஷியின் தீனமான முனகல்கள்- கயிற்றுக்கட்டிலின் அழுகை- குமாரன்தம்பியின் மூச்சிரைக்கும் சத்தம்...

"எத்தனை நாள் கடன் இது! மொத்தமாத் தீர்த்துட்டே வாங்க சாமீ"- வாசற்படியருகே நின்றிருந்த கோபாலன் பிதற்றினான்.

பிறகு அட்டகாசச் சிரிப்புடன் கஞ்சாபீடியை ஆழ்ந்து இழுக்கத் தொடங்கினான்.

## 33

"துணி துவைக்கிற மாதிரியில்ல என்னைத் தொவைச்சுப் பிழிஞ்சிட்டீங்க. அன்னிக்கன்னாடம் வேலை செஞ்சு பிழைக்கிறவகிட்ட இந்த மாதிரி நடக்க எப்படி சாமி உங்களுக்கு மனசு வந்துச்சு? மதம் பிடிச்ச ஒத்தையானை மாதிரியில்ல என்கிட்ட நடந்துக்கிட்டீங்க?" கட்டிலில் அசையக்கூடச் சக்தியற்றவளாகப் படுத்திருந்த மீனாக்ஷி புலம்பினாள். உடம்பு முழுவதும் தீ போல் தகிப்பதாக அவளுக்குத் தோன்றியது; மூச்சு விடுவதே மிகவும் சிரமமாக இருந்தது.

மூச்சிரைத்தபடி எழுந்து விலகிய குமாரன்தம்பி அவிழ்த்துப் போட்டிருந்த வேட்டியைத் தேடி எடுத்து உடுத்திக் கொண்டான். "கருடபகவானே! என் விரதம் தவறிடுச்சு. மன்னிச்சிடுங்க!" அவனது உதடுகள் முணுமுணுத்தன. அதைக் கேட்ட மீனாக்ஷிக்குக் கடுமையான கோபம் ஏற்பட்டது.

"ஆமா... பொல்லாத விரதக்காரர்! என் முதுகெலும்பை உடைச்சு நொறுக்கிட்டு கருடபகவான்கிட்ட மன்னிப்பு வேற. நான் ஒண்ணு சொல்லட்டுமா? மேற்கொண்டு கருடசேவை, மந்திரம், தந்திரம்னு சொல்லிட்டு எதுவும் பண்ணாதிங்க. அது ஆபத்து. அவ்வளவுதான் என்னால சொல்ல முடியும்" அவள் குரலில் எரிச்சலும் சேர்ந்து கொண்டது.

குமாரன்தம்பி அங்கிருந்து மௌனமாக வெளியேறினான். வாசற்படியருகே சுருண்டுபடுத்து உறங்கத் தொடங்கியிருந்த கோபாலனைத் தட்டி எழுப்பினான்.

"ஒரு பீடி தா கோபாலா."



கோபாலன் கொடுத்த கஞ்சாபீடியைப் பற்ற வைத்துப் புகைத்தபடி நடந்தான். மனத்திற்குள் பயத்தின் ஆரவாரம் எழுந்து உயர்வதாகவும், பச்சாத்தாபம் அனத்துவதாகவும் தோன்றியது.

கோயில் சுற்றுப்புறத்தை நெருங்கியபோது அவனது உடம்பு விறைப்படைந்தது. மூடியிருந்த கோபுர வாசலைப் பார்த்த குமாரன்தம்பியின் உள்மனத்தில் பயம் தோன்றியது. குற்ற உணர்வுடன் அவன் கண்களைத் திருப்பிக் கொண்டான். ஓர் உயிர்ப்பிணம் போல அவன் வீட்டை நோக்கி நடந்தான்.

வீட்டின் தென்புறப் படிப்புரையை அடைந்த குமாரன்தம்பியை வரவேற்றது பப்புமாவின் கனத்த குரல். "உள்ளே போடா மாந்திரீகனே! உன்னை வரவேற்க ஒருத்தர் காத்திருக்கார். உன்னோட அழிவு காலம் இதோ ஆரம்பமாயிடுச்சு!"

மனத்தில் இப்போது தைரியத்தின் சன்னமான நூலிழைகூடத் தென்படவில்லை. பப்புமாமாவின் தீர்க்கதரிசனம் ஒருபோதும் தவறியதில்லை. தனக்காகக் காத்திருப்பது யாராக இருக்கும்? ஒருவேளை கிருஷ்ணப்பருந்து கோபாவேசத்துடன் வந்திருக்குமோ?

கிடுகிடுவென நடுங்கிய குமாரன்தம்பி கைகளைக் கூப்பி உயர்த்தித் தொழுதான். "கடவுளுக்கு ஒப்பான பப்புமாமா! என்னோட தவறை மன்னிச்சிடுங்க. இனி ஒருபோதும் நான்..." வார்த்தைகளைப் பூர்த்தி செய்ய முடியாதவனாக குமாரன்தம்பி வாய்விட்டு அழுதான்.

பப்புமாமாவிடமிருந்து இதற்கான பதில் வராமல் போகவே அவன் திடுக்கிட்டான். பப்புமாமா தன்னைக் கைவிட்டு விட்டாரா? ஆபத்துகளிலிருந்து தப்பிக்க அவ்வப்போது உபதேசம் செய்து வந்த, அன்பிற்குரிய மாமா தன்னைக் கைகழுவி விட்டாரா? சாபம் கொடுத்ததுடன் விடைபெற்றுக்கொண்டு விட்டாரா என்ன!

தயங்கித் தயங்கி அவன் வீட்டின் முற்றத்துக்கு வந்தான். கிருஷ்ணப்பருந்தின் சிறகடியோசை கேட்கிறதா என்று காதைக்

கூர்மையாக்கிக் கவனித்தான். இல்லை. சுற்றுப்புறம் பரிபூரணமான அமைதியில் ஆழ்ந்திருந்தது.

பலவீனமான நிலவொளியில் வீடும் சுற்றுப்புறமும் தெளிவாகவே தெரிந்தன. தென்புறத்தையும், கிழக்குப்புறத்தையும் நோட்டம் விட்ட பிறகு அவன் வடக்குப்புற முற்றத்திற்குச் சென்றான். கடைசியாக மேற்குப்புறம் போனான். எங்கும் யாரையும் காணவில்லை. எந்தவிதமான சத்தமும் கேட்கவில்லை.

இரவு முடிவடையப் போவது நினைவில் எழுந்தது. சீக்கிரமாகக் குளித்துவிட்டு வீட்டிற்குள் நுழைய வேண்டும். அம்மா எழுந்து விடுவதற்குள் உடை மாற்றி ருத்ராக்ஷமாலை, ரக்ஷாயந்திரம் எல்லாம் அணிந்து ஒன்றும் அறியாதவனைப் போல் படுக்கையில் படுத்திருக்க வேண்டும். அவன் கிழக்குப்புறக் குளத்தை நோக்கி நடந்தான்.

படிக்கட்டில் இறங்க ஆரம்பித்த குமாரன்தம்பி திடுக்கிட்டான். குளத்தின் கடைசிப்படியில் யாரோ உட்கார்ந்திருக்கிறார்கள்!

குளிர்மிக்க இந்த வேளையில் குளத்தின்படியில் உட்கார்ந்திருப்பது யாராக இருக்கும்? வீட்டில் அம்மாவும் சமையற்காரியும் மட்டும்தான். காரியஸ்தர் இரவில் தங்குவது மகேஸ்வரிதங்கச்சியின் வீட்டில்தான். எனவே அவர்களில் யாருமாக இருக்க முடியாது. அண்டை அயலார் எவரும் பகல் நேரத்திலேயே சர்ப்பக்காவுடன் சேர்ந்த இந்தக் குளத்திற்கு வரமாட்டார்கள். அப்படியானால், வேறு யார் இந்த விடியற்காலை வேளையில்...?

"யாரது?"- அவனது குரல் அதிகாரத் தொனியில் ஒலித்தது. கேள்விக்குப் பதில் கிடைக்காமற போகவே அவனது கோபம் அதிகரித்தது. குளத்தின் படியில் இறங்கி உட்கார்ந்திருப்பதுடன், தன்னுடைய கேள்வியையே சட்டை செய்யாமல் இருந்தது கோபத்திற்கு மேலும் உரமூட்டியது.

"கேட்டது காதுல விழலையா... யாரது?"

---



சலங்கைகள் குலுங்கும் நாதம் உயர்ந்தது. தொடர்ந்து சன்னமான குரலில் பாடல் வரிகள் காற்றில் தவழ்ந்து வந்தன: "மூடமதே ரண நாடகமாடும் பாடச்சர கீடா..." இறந்துபோன லக்ஷ்மிக்குட்டியின் இனிமையான குரலில் வெளிவரும் கதகளிப் பாடல்!

குமாரன்தம்பியின் கண்களில் இருட்டு பரவுவதாகத் தோன்றியது. மனம் பைத்தியக்காரத்தனமாகத் துடித்தது. உடம்பு மொத்தமும் நடுங்கத் தொடங்கியது.

தறவாட்டுக் கொட்டாரத்திலிருந்து ஓலைச் சுவடிகளுடன் வீட்டிற்குத் திரும்பும்போது, தன்னைப் பின்தொடர்ந்து வந்த யக்ஷிதான் இங்கே வந்திருப்பது. லக்ஷ்மிக்குட்டியின் மரணத்துக்குப் பிறகு புதுப்பிறவி பெற்றதாகக் கருதப்படும் யக்ஷி!

என்ன செய்வதென்று தெளிவாகத் தெரியாத நிலை. கருடசேவை செய்து அவளை இப்போது விரட்டியடிக்க முடியாது. அதற்கான சூழ்நிலையில்லை. ஹனுமானையோ, தேவியையோ தியானிக்கவும் இப்போது முடியாது. தான் அசுத்தத்தில் சிக்கியிருக்கும் சபிக்கப்பட்ட நேரம் இது. தகவலை மோப்பம் பிடித்தறிந்தது போல் வந்து சேர்ந்திருக்கிறது யக்ஷி.

பயந்து நின்றுவிடுவதால் எந்தவிதமான பிரயோஜனமும் கிடையாது. திகைப்படைந்து நிற்பதிலும் அர்த்தமில்லை. இப்போது இவளிடம் தந்திரமாக நடந்து கொள்ள வேண்டும். அன்பு வார்த்தைகளால் இவளை மயக்கிய பிறகு உடனே குளித்து விட வேண்டும். குளித்துவிட்டால் மந்திரஜபம் தொடங்கலாம். கருடன் உதவவில்லை என்றாலும் தேவி துணை புரிவாள். தேவியின் அருள் கிடைத்தால் யக்ஷியைச் சுலபமாக விரட்டியடித்து விடலாம். தேவி உபாசனைக்குப் பிரம்மச்சரியம் அவசியம் என்பதில்லை. திருமணம் செய்துகொண்ட மாந்திரீகனுக்குக்கூட தேவி காட்சியளித்து அனுக்கிரகம் செய்வதுண்டு.

அன்பு நிறைந்து வழியும் குரலில் குமாரன்தம்பி பேசினான்: "யார், என் அன்புக்குரிய லக்ஷ்மிக்குட்டியா இது! தங்கமே! இப்பத்தான் எனக்கு ஆள் யார்னு அடையாளம் தெரிஞ்சது."

சலங்கைகளின் சத்தம் நின்றது; பாட்டும் நின்றது. படிக்கட்டிலிருந்து கேள்வியொன்று புறப்பட்டது. "குமாரனேட்டனுக்குத் திடீர்னு எங்கிட்ட இப்படி அன்பு வழிந்தோடக் காரணம் என்னவோ?"

பதிலளிக்காமல் நின்ற குமாரன்தம்பி, தொடர்ந்து அவள் கூறிய வார்த்தைகளைக் கேட்டு வியப்படைந்தான் : "இப்போ நீங்க கிருஷ்ணப்பருந்தால என்னை விரட்டியடிக்க முடியாது. தெரியுமில்லையா?"

"ஏன்?" - அவனையும் மீறி சட்டென்று வார்த்தைகள் அவன் வாயிலிருந்து வெளியே வந்தன.

"குமாரேட்டனோட பிரம்மச்சரியம் நொறுங்கிப் போயிடுச்சே? இந்த நேரத்தில நீங்க கூப்பிட்டா கிருஷ்ணப்பருந்தும், ஹனுமானும், தேவியும் வரமாட்டாங்களே?" என்றபடி யக்ஷியாக வந்த லக்ஷ்மிக்குட்டி வாய்விட்டுச் சிரித்தாள்.

"உனக்கு இப்ப என்ன வேணும்? எனக்குத் தொல்லை கொடுக்கப் போறியா?" பொறுத்துக் கொள்ள முடியாமல் கேட்டான்.

மறுபடியும் சலங்கைகள் குலுங்கின. அவள் எழுந்து கற்படிகளில் ஏறி அவனுக்கு நேராக வந்து நின்றாள்.

நூலாடையின்றி எதிரே நின்று கொண்டிருக்கும் பெண்ணுருவை அவன் வியப்புடன் பார்த்தான். தெளிவாகத் தெரியவில்லை என்றாலும் லக்ஷ்மிக்குட்டி மாதிரியே தோற்றமளித்த மிகவும் அழகான பெண்ணொருத்தி தனக்கு முன்பாக நிற்கிறாள் என்பது புரிந்தது. குரல்கூட அப்படியேதானிருந்தது.

"நான் குமாரேட்டனைத் தொந்தரவு செய்ய வரலை. உங்ககூட வசிக்கிறதுக்கு வந்திருக்கேன். உங்களுக்கு மட்டுமில்லை, நான் யாருக்குமே தொல்லை குடுக்கிறது இல்லை. பகல் வேளையில யார் கண்ணுக்கும் தட்டுப்படாம இந்தப் பகுதியிலேயே அலைஞ்சு திரிஞ்சிட்டிருப்பேன். ராத்திரி நேரத்துல



மட்டும் உங்க படுக்கைக்கு வருவேன். குமாரேட்டனைத் தவிர வேற யாரும் என்னைப் பார்க்க முடியாது. என்னோட குரலும் வேற யாருக்குமே கேக்காது. என்ன சொல்றீங்க?"

திகைப்பை வெளிக்காட்டாமல் குமாரன்தம்பி சொன்னான்: "ஓ... அதுக்கென்ன? உன் இஷ்டப்படியே நடக்கட்டும். இப்ப நீ கொஞ்சம் வழிவிட்டா நான் குளிச்சிடுவேன்!"

அவள் ஒரு முட்டாள் மாதிரி இடைவிடாமல் சிரித்தாள். சிரிப்பு அடங்கியதும் அவள் சொன்னாள்: "குமாரேட்டா, பழைய லக்ஷ்மிக்குட்டி இப்போ யக்ஷிக்குட்டி. அந்த மந்திரவாத வித்தையெல்லாம் எங்கிட்ட வேண்டாம். நீங்க குளிக்கிறதுக்கு முன்னாடி நான் இங்க வந்திருக்கிறதே திட்டம் போட்டுத்தான். நீங்க குளிக்கறதுக்கு நான் உங்களை அனுமதிக்கணும்னா, அதுக்கு முன்னால நீங்க எனக்கு ஒரு சத்தியம் செஞ்சு தரணும். புரிஞ்சுதா?"

"நான் சத்தியம் செய்யணுமா? என்னன்னு சத்தியம் செய்யணும்?"

"குமாரேட்டா, உங்களோட மரணம் வரையில என்னை எந்தவிதமாகவும் தொல்லைப்படுத்துறதில்லேன்னும், என்னை விட்டுப்பிரிய மாட்டேன்னும் சத்தியம் பண்ணணும். அவ்வளவுதான்."

குமாரன்தம்பி மோசமான தர்மசங்கடத்துக்கு உள்ளானான். மாந்திரீகர்கள் மோகினிகளை (யக்ஷிகளை)ச் சத்தியம் செய்ய வைத்திருக்கிறார்களே தவிர, எந்த ஒரு மாந்திரீகனும் மோகினியிடம் சத்தியம் செய்ய நேர்ந்ததில்லை. தனக்கு அப்படிப்பட்ட சூழ்நிலையும் ஏற்பட்டுவிட்டதா? அது மட்டுமா? இறப்பதுவரை ஒரு மோகினியுடன் வாழ்கிறேன் என்று சத்தியம் செய்ய வேண்டுமாம். என்ன ஒரு சோதனை இது! கருடன் ஹனுமான், பகவதி போன்ற தெய்வங்களின் சான்னித்தியம் உள்ள இந்தத் தறவாட்டுக்குள் துர்த்தேவதையான ஒரு மோகினியை நுழைய விடுவதா? இவளால் எப்படிப்பட்ட கஷ்டங்கள்,

மிரட்டல்கள் , ஏற்படுவதாக இருந்தாலும் பரவாயில்லை. அப்படியொரு சத்தியத்தை செய்யத் தன்னால் முடியாது. ஆனால், அதை எப்படி இவளிடம் வெளிப்படையாகச் சொல்வது? முடியுமட்டும் இவளைக் கோபப்படுத்தாமல் இருப்பதல்லவா இப்போதைக்கு நல்லது?

வஞ்சகச் சிரிப்பு ஒன்றைப் பரிசளித்தபடி அவன் வித்தையை மாற்றினான் : "நீ என் உயிர் மாதிரி. நாம ஒண்ணாவே வாழலாம். ஆனால், என்னை நம்பாத மாதிரிச் சத்தியமெல்லாம் செய்ய வற்புறுத்தக் கூடாது."

"குமாரேட்டனை நான் நம்பமாட்டேன். எப்படிப்பட்ட ஒரு மந்திரவாதியையும் ஒரு மோகினி நம்பமாட்டா! நீங்க சத்தியம் செஞ்சே தீரணும். இல்லேன்னா உங்களைக் குளத்திற்குள்ள இறங்க நான் விடமாட்டேன். இது உறுதி!"

ஏதோ மாற்று உபாயம் கண்டுபிடித்தவனைப் போல் அவன் வீட்டு முற்றத்திலிருந்த கிணற்றை நோக்கி ஓடினான். மின்னல் வேகத்தில் வாளியில் நீர் இறைத்துக் குளிப்பதுதான் அவன் திட்டம்.

கிணற்றை நெருங்கிய குமாரன்தம்பி, கிணற்று உருளையில் அவள் தொங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

"இனிமே வேற எங்கதான் போவீங்க? சந்தேகமே வேணாம். நீங்க எங்க போனாலும் நிச்சயமா நான் அங்க இருப்பேன்"- சொல்லிவிட்டு உரத்த குரலில் சிரித்துக் கொண்டே இருந்தாள்.

'உருளையில் தொங்கிக் கொண்டிருக்கும் இவளது கால்கள் கிணற்றின் அடிப்பரப்பை நோக்கி உள்ளன. உருளையின் பிடி நழுவினால் நேராகக் கிணற்றில் விழுவாள். அப்படி இவளைத் தள்ளி விட்டால் என்ன?' - குமாரன்தம்பியின் சிந்தனை ஒரு விநாடி அந்த வழியில் திரும்பியது.

திடுமென்று அவனுக்கு ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. யக்ஷிகளுக்கு சாதாரண மனிதர்களைப் போன்ற மரணமெல்லாம்



கிடையாது. கிணற்றில் விழுந்தால் அவள் மாயமாகத் தப்பித்து விடுவாள். கண்ணுக்குத் தெரியாமல் மறையும் சக்தி யக்ஷிகளுக்கு உண்டு. அதேபோல் சட்டென்று வெளிப்படவும் செய்யும்.

"என்ன, குமாரேட்டா குளிக்கலையா? பொழுது விடியப் போகுதே!" - அவளது குரலில் ஏளனம் தொனித்தது.

"நான் குளிச்சுக்கிறேன். நீ உன் வேலையைப் பார்" - கோபத்துடன் குளத்தை நோக்கி நடந்தான் குமாரன்தம்பி. படிக்கட்டில் கால் வைத்த குமாரன்தம்பி வியப்படைந்தான். அவள் பழையபடி அதே இடத்தில் உட்கார்ந்திருந்தாள்.

இனியும் இவளுடன் வாதிடுவதில் அர்த்தமில்லை என்று அவனுக்குப் புரிந்தது. 'கடைசிப் படிக்கட்டில் அதாவது நீர்ப்பரப்பைத் தொட்டுக்கொண்டிருக்கும் படியை அடைந்தால் சட்டென்று குளத்திற்குள் குதித்துவிட வேண்டியதுதான். ஒரு தடவை தண்ணீரில் மூழ்கி எழுந்துவிட்டாலே குளித்ததற்குச் சமமாகிவிடும்.' உடனே தேவி தியானத்தைத் தொடங்கிவிடலாம். அத்துடன் இவளது தொல்லையும் தீர்ந்துவிடும்!

ஒவ்வொரு படியாக இறங்கினான். கடைசிப் படிக்கட்டில் அவன் கால் வைத்த அதே நேரத்தில், மோகினியும் குளத்தில் பாய்ந்தாள்.

குளத்தைப் பார்த்த குமாரன்தம்பி ஒரு கணம் நடுங்கினான். யக்ஷியின் வடிவமே மாறிவிட்டிருந்தது. யக்ஷி கோர வடிவில் குளம் முழுவதும் பரவி நிறைந்திருந்தாள்.

திடுமென்று குளத்திலிருந்து பயங்கரமான ஓர் அலறல் உயர்ந்தது. அது யக்ஷியிடமிருந்து புறப்படும் பயமுறுத்தல் என்பதை உணர்ந்த குமாரன்தம்பி நயமாகச் சூழ்நிலையைச் சமாளிக்கத் திட்டமிட்டான். அன்பாகவும், தந்திரமாகவும் அவளை வெற்றி கொள்ள வேண்டுமென்பது அவனுக்குப் புரிந்தது.

"நீ சொல்றபடியே நான் நடந்துக்கிறேன். முதல்ல நீ கரையேறி வா!" - அவன் கெஞ்சும் குரலில் பேசினான்.

"சரி, அப்படின்னா சத்தியம் செய்யுங்க. தெய்வ சத்தியமா, தேவி சத்தியமா உன்னை நான், என் மரணம் வரையில விட்டுப் பிரியமாட்டேன்னு மூணு தடவை சொல்லணும்."

"சரி, இதோ நான் சத்தியம் செய்றேன். தெய்வ சத்தியமா, தேவி சத்தியமா, உன்னை, நான் என் மரணம் வரையில விட்டுப் பிரிய மாட்டேன்" : அவன் நழுவுவது போல் பேசினான்.

"போதாது. மூணு தடவை சொல்லணும்" - அவள் கட்டளையிடுவது போல் கூறினாள். வேறு வழி புலப்படாததால் அவன், அவள் சொன்னபடியே செய்தான்.

உடனே யக்ஷி மாயமாக மறைந்தது. அவன் சட்டென்று குளத்தில் இறங்கி நூற்றியொரு தடவை மூழ்கி எழுந்தான்.

குளித்ததும் ஈரத்துணியுடன் வீட்டின் தெற்குப்புறத் திண்ணைக்கு வந்த குமாரன்தம்பி அதிசயித்துப் போனான். தான் வெறுமனே சாத்திவிட்டுப் போயிருந்த கதவு உள்புறமாகத் தாழ்போடப்பட்டிருந்தது. ஒருவேளை அம்மா இப்படிச் செய்திருப்பார்களோ?

அவன் கதவை வலுவுடன் தள்ளினான். யாரோ உள்ளிருந்து கதவின் தாழை நீக்கினார்கள். உட்புறம் நுழைந்ததும் ஒரு வெள்ளை வேட்டியை நீட்டியபடி யக்ஷி நின்று கொண்டிருந்தது.

"நீ வீட்டுக்குள்ள நுழைஞ்சு குடியிருக்கவே ஆரம்பிச்சுட்டியா?" -அவன் குரலில் கோபம் தெரிந்தது.

"கோபப்படாம முதல்ல ஈரத்துணியை மாத்துங்க குமாரேட்டா!"

அவன் உடை மாற்றினான். அவனிடமிருந்து ஈரத்துணியைக் கையில் வாங்கிக் கொடியில் உலரப்போட்டதும் அவள் மறைந்தாள். அதன் பிறகுதான் அவனுக்கு மூச்சே சீராக வரத் தொடங்கியது.

கண்களில் தூக்கம் குறும்புகாட்டுவதாகத் தோன்றவே, குமாரன்தம்பி சப்ரமஞ்சக் கட்டிலில் ஏறி நீட்டி நிமிர்ந்து படுத்தான்.



தூக்கம் கண்களைத் தழுவத் தொடங்கியபோது யாரோ தன்னுடன் படுத்திருப்பதுபோல் தோன்றியது. அதே நேரம் அவனை ஒரு கை சுற்றி வளைத்தது.

"பயப்படாதிங்க, நான்தான் குமாரேட்டா!"–அவனுடைய காதில் கிள்ளைக் குரல் ஒலித்தது.

தாங்கமுடியாத எரிச்சலுடன் அவன் கண்களை இறுக மூடிக்கொண்டான். எத்தனை நிமிடங்கள் கடந்தனவென்று அவனுக்குத் தெரியவில்லை. அவனுடைய எரிச்சல் மகிழ்ச்சியூட்டும் இன்ப அனுபவமாக மாறியது. அன்றுவரை வாழ்க்கையில் அனுபவித்தறியாத பரமானந்தமாக இருந்தது.

"லக்ஷ்மிகுட்டி!" அவன் அழைத்தான். பதில் கிடைக்கவில்லை. படுக்கையைத் தடவிப் பார்த்தான். அவள் அங்கு இல்லை. சுரதம் முடிவடைந்த மறுவிநாடியே அவள் மறைந்து விட்டிருந்தாள்.

சப்ரமஞ்சத்திலிருந்து எழுந்திருக்க முற்பட்டபோது தன் உடல் மிகவும் சோர்வடைந்திருப்பதை உணர்ந்தான். யக்ஷியுடன் கூடினால் கிடைக்கும் இன்பத்துடன் இப்படியொரு துயர அனுபவமும் ஏற்படும் போலிருக்கிறது. அவன் யோசனையில் ஆழ்ந்தான்.

மிகவும் சிரமத்துடன் சப்ரமஞ்சத்திலிருந்து எழுந்து கதவைத் திறந்தான். நடந்து, உட்கார்ந்து, ஊர்ந்து ஒரு விதமாகக் குளத்தை அடைந்தான். குளிர்ந்தநீரில் சற்று நேரத்தைச் செலவழித்த பிறகு உடல் சோர்வு விலகியது.

குளித்துவிட்டு வீட்டின் கிழக்குப்புற முற்றத்திற்கு வந்த குமாரன்தம்பியின் கண்ணில் தட்டுப்பட்டது. திண்ணையின் தூண் ஒன்றில் சாய்ந்தபடி முணுமுணுத்துக் கொண்டிருந்த அம்மாதான்.

"என்னம்மா?"

"என்னத்தைச் சொல்றது குமாரா? முற்றத்தைப் பெருக்குற சத்தம் கேட்டுக் கண்விழிச்சேன். பார்க்கிறயே... யாரோ வந்து வீட்டைச் சுற்றிப் பெருக்கிட்டுப் போயிருக்காங்க."

"குஞ்ஞுச்சிருத வந்து பெருக்கியிருப்பாங்கம்மா!"

"இல்லையே, அதானே ஆச்சரியமே! குஞ்ஞுச்சிருத இப்பதான் வர்றா. வந்தவ, வடக்குப்புற முற்றத்தில நிற்கிறாள். அவளை ஒதுக்கிவிட்டு வேற யாரையோ நாம வேலைக்கு வெச்சுட்டோம்கிறது அவளோட புகார்."

"வேற யாரும்மா இங்க வந்து முற்றத்தையெல்லாம் பெருக்கப் போறாங்க?" குமாரன்தம்பி வியப்புடன் கேட்டான்.

"அம்மச்சி, இங்கே வாங்களேன்" வடபுறத்திலிருந்து சமையற்காரியின் குரல் கேட்டது. குஞ்ஞுக்குட்டிதங்கச்சி அந்தப் பக்கமாக ஓடினார்.

"அம்மச்சி, வடக்குப்புறக் குளியலறைக்குள் நுழைஞ்சு பாருங்களேன். பெரிய தவலையில தண்ணீர் கொதிக்குது. சமையலறைக்குள்ள கவிழ்த்து வைச்சிருந்த தவலையை எடுத்து, தண்ணி இறைச்சு அடுப்பில ஏத்திக் கொதிக்க வைச்சது யார்? நான் இப்பத்தான் சமையலறைக்குள்ள நுழையுறேன்."

குளியலறைக்குள் நுழைந்த குஞ்ஞுக்குட்டிதங்கச்சி வியப்பில் வாயடைத்துப் போனார். அடுப்பில் தீ எரிந்து கொண்டிருக்கிறது. தவலையிலிருந்த தண்ணீர் கொதிக்கிறது!

"என் பித்ருக்களே, நான் என்னவெல்லாம் பார்க்க வேண்டியிருக்கு!" நெஞ்சில் கைவைத்தபடி பேசினார் அவர்.

பூஜையறை வாசலில் விளக்கேற்ற வந்த குஞ்ஞுக் குட்டித்தங்கச்சி கேட்டார்: "குமாரா... இங்க நடக்கிற இந்த அதிசயங்களுக்கெல்லாம் காரணம் என்ன? சொல்லு!"

"எனக்கு ஒண்ணும் புரியலையே அம்மா!" கையை விரித்தபடி அவன் பதிலளித்தான்.

# 34

"இந்த வீட்டுக்குள்ள ஒரு ரக்ஷஸோ இல்லேன்னா வேற எதுவோ ஒண்ணு நுழைஞ்சிருக்கிறது உறுதி. மாந்திரீகனான உனக்கு அதைப்பத்தி எதுவும் தெரியாதுன்னு சொன்னா, நான் நம்பத் தயாரா இல்லை. எங்கிட்ட உண்மையைச் சொல்லமாட்டியா, குமாரா? இந்த மாதிரி அதிசயங்கள் இந்த வீட்டுக்குள்ள நடக்கிறதுக்கு ஏதாவது ஒரு காரணம் இருக்கணுமே?" –விடியற்கால பூஜையை முடித்துவிட்டு, காலைப் பலகாரத்திற்காக வந்த குமாரன்தம்பியிடம் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கேட்டார்.

"எனக்கும் ஒண்ணும் புரியலையே?"

"நீ வேணும்னே பொய் சொல்ற! ஆமாம், நான் ஒண்ணு கேட்கட்டுமா? இன்னிக்கு விடியற்காலையில இந்த வீட்டு முற்றத்தைப் பெருக்கினது யார்? சமையலறையிலிருந்த பெரிய தவலையை எடுத்துக் கொண்டுபோய், குளியலறையில வென்னீர் விளாவினது யார்? கொஞ்ச நேரத்திற்கு முன்னால கிழக்குப்புறக் குளத்தில் யாரோ துணி துவைக்குற சத்தம் கேட்டதால பார்கவி ஓடிப் போய்ப் பார்த்தாள். துவைக்கிறது யார்னு தெரியலை. ஆனால், என்னோட அழுக்கான புடவையையும், ரவிக்கையையும் நல்லாத் துவைச்சுப் பிழிஞ்சு படிக்கட்டில வைச்சிருந்தது. வீட்டிற்குள்ளிலிருந்து துணியை எடுத்துக் கொண்டு போய் துவைச்சது யார்? இதெல்லாம் ஏதோ ஒரு துர்த்தேவதையோட வேலைதான். ஆரம்பத்தில இந்த மாதிரி நல்ல வேலைகளையெல்லாம் செய்யும்.. கடைசியில் வீட்டை நாசப்படுத்திட்டுப் போய்டும். என் பித்ருக்களே! எனக்குப் பயமாக இருக்கே!"

"பயப்படாதீங்க அம்மா! எல்லாம் சரியாயிடும்"–மகன் அம்மாவுக்கு ஆறுதல் கூறினான்.

இதெல்லாம் யக்ஷியின் சேட்டைகள்தான் என்பது குமாரன் தம்பிக்குத் தெரியத்தான் செய்தது. யக்ஷியைக் கட்டுப்படுத்தி வைக்காவிட்டால், சிக்கல்கள் அதிகரிக்கும் என்றும் அவனுக்குத் தோன்றியது.

இன்று ஒருநாள் பகல் முழுவதும் அவள் இந்த வீட்டைச் சுற்றிச் சுதந்திரமாக உலாவட்டும். இரவில் தன்னுடன் படுக்க வரும்போது அவளை பந்தனம் செய்து தோட்டத்தின் ஏதாவது ஒரு மூலையில் ஸ்தாபிதம் செய்து விட வேண்டும். தனக்குத் தெரியாமல் அவள் அசையவே கூடாது. தன் மரணம் வரையில் அவளைப் பிரியப் போவதில்லையென்று சத்தியம் செய்து கொடுத்துள்ளோம். ஆனால், அவளைச் சுதந்திரமாக உலவவிடுவதாக ஒப்புக்கொள்ளவில்லை.

ஒருவிதத்தில் பார்த்தால் தான் செய்யப் போவது ஸ்தம்பன (செயலற்றுப் போகச் செய்யும்) கர்மம்தான். ஸ்தம்பனம் என்பது க்ஷுத்ர (துர்மந்திரவாத) கர்மங்களில் ஒன்று.

யக்ஷியாகவே இருந்தால்கூட தன்னை நேசிக்கும் ஒருத்தியைப் பந்தனம் செய்து செயலிழக்கச் செய்வது தனக்கும் உடன்பாடானதல்ல. வருத்தம் தோன்றவே செய்கிறது. அவளுடன் தான் கொண்ட உறவின் சுகமான நினைவுகள் இப்போதும் மனத்தைக் குளுமைப்படுத்திக் கொண்டிருக்கின்றன.

வீட்டிலிருந்து சற்றுத்தள்ளிக் கிழக்குப்புறத்தில் ஒரு சிறிய ஓலைக்குடிசை உள்ளது. மரத்திலிருந்து வெட்டும் தேங்காய்களைப் போட்டு வைப்பது அதில்தான். தேங்காய் கிட்டங்கி. விசாலமான ஒரேயொரு அறை மட்டுமே உள்ள அந்தக் குடிசையைச் சுத்தம் செய்து, யக்ஷியை அதில் குடியமர்த்த வேண்டும். மந்திரச் சரடு கட்டிய தாழ்போட்டு அறையைப் பூட்டிவிட்டால் பயப்படத் தேவையில்லை. சாவியை மட்டும் பத்திரமாக பாதுகாத்தால் போதும்.

தேங்காய் கிட்டங்கியில் யக்ஷியைக் குடியமர்த்தும் விஷயத்தை பரமரகசியமாக வைத்திருப்பதென்று தீர்மானித்தான்.



விசேஷமான ஒரு சில நாட்களில், குறிப்பிட்ட ரகசிய பூஜைகளை நடத்துவதற்கு, கிட்டங்கியைப் பூஜை அறையாகப் பயன்படுத்தப் போவதாக அம்மாவிடம் தெரிவித்தான். அந்த அறையைச் சுத்தப்படுத்த காரியஸ்தரிடம் உத்தரவும் போட்டான்.

மாலை நேரத்திற்கு முன்பாக தேங்காய் கிட்டங்கி சுத்தமான ஓர் அறையாக மாறியது. இரவு நேரத்தில் யக்ஷியை பந்தனம் செய்து அதற்குள் ஸ்தாபிதம் செய்யத் தேவையான கர்மங்களைக் குறித்து யோசித்தவாறே மாலை நேரத்தில் கொட்டாரத்திற்குப் போனான்.

பப்புமாமாவின் மாடத்துக்கு முன்பாக விளக்கேற்றியபோது குமாரன்தம்பியின் கைகள் நடுங்கின. மிகவும் சிரமப்பட்டுத் திரியைக் கொளுத்தினான்.

பப்புமாமாவையும் மற்ற காரணவர்களையும் மனத்தில் தியானித்துக் கைகூப்பி நின்றிருந்த குமாரன்தம்பி சட்டென்று திடுக்கிட்டான். பப்புமாமாவின் கோபம் நிறைந்த கேள்வி அவனது காதுகளை விறைக்க வைத்தன: "இங்கிருந்து எடுத்துப் போன ஓலைச்சுவடிகளை ஏன் இன்னும் கொண்டு வந்து வைக்கவில்லை?"

அதன் பயன் முடிந்ததுமே இங்கு கொண்டு வந்து வைத்திருக்க வேண்டும். பலதடவை நினைத்த விஷயமும்கூட. வலுவான குற்றஉணர்வு மனதில் தோன்றவே குமாரன்தம்பி தலை குனிந்தபடி பதிலளித்தான்: "மன்னிக்கணும் மாமா. சீக்கிரமா கொண்டுவந்து வைச்சிடுறேன்."

"சுவடிகளை பழைய இடத்தில வைச்ச பிறகு உடனடியா நீ நமது தறவாட்டிலுள்ள மற்றொரு வாரிசுக்கு மந்திரோபதேசம் தரணும். நீ மாந்திரீகப் பதவியை உதறிவிடவேண்டும்." பப்பு மாமாவின் குரலில் கடுமை தொனித்தது.

குமாரன்தம்பிக்கு தலை சுற்றுவதுபோல் இருந்தது. அவன் அப்படியே மாடத்துக்கு முன்னாலிருந்த மணற்பரப்பில் உட்கார்ந்து விட்டான்.

தன்னுடைய மாந்திரீகப் பதவியை உதறிவிட வேண்டுமா? 'என்றாவது ஒரு குடும்பஸ்தனாக வேண்டும் என்று தோன்றினால், அப்போது மாந்திரீகப் பதவியை விட்டுவிடவேண்டும்.' என்று மந்திரோபதேசத்தின்போது பப்புமாமா எச்சரித்தது நினைவுக்கு வந்தது. ஆனால், இந்தச் சமயத்தில்...

கட்டுப்படுத்த முடியாத காமவேட்கை மனக்கட்டுப்பாட்டின் கனத்த சுவர்களைத் தகர்த்தபோது, தான் பிரம்மச்சரிய விரதத்தை மீறியதென்னவோ உண்மைதான். ஆனால், இன்னும் தான் ஒரு குடும்பஸ்தனாகி விடவில்லை. ஒருமுறை தவறு செய்ததற்கு இவ்வளவு கடுமையான தண்டனையை அனுபவிக்க வேண்டுமென்றா பப்புமாமா தீர்ப்புச் சொல்கிறார்?

தான் ஒருபோதும் இந்த மாந்திரீகப் பதவியை விரும்பியதில்லை. தன்னுடைய இயல்புகளையெல்லாம் நன்றாக அறிந்திருந்த மாமா, மாந்திரீகப் பதவி என்கிற முள்கிரீடத்தை தன் தலையில் வைத்து விட்டார். தன்னுடைய இயல்புகள் மாறி நல்லவனாகி விடுவோம் என்கிற ஓர் எதிர்பார்ப்பும், தன் மீது அவருக்கு இருந்த அன்பும்தான் அதற்கு அவரைத் தூண்டியிருக்க வேண்டும். அவர் எதிர்பார்த்ததைவிட அதிகமாகவே அதில் தான் வெற்றி பெற்று உயரவும் செய்திருக்கிறோம்!

முழுவதுமாக அர்ப்பணித்த மனத்தோடுதான் மந்திரங்களைக் கற்றோம். பயிற்சி பெற்றோம். கர்மங்களை நிர்வகித்தோம்! ஓலைச் சுவடிகளிலிருந்த மந்திரங்களையெல்லாம் மனப்பாடம் செய்தோம். சாதனைகளை நியமம் தவறாமல் செய்தோம். கருட பகவானை மனம் ஒன்றிச் சேவித்தோம். வெவ்வேறு உபாசனா மூர்த்திகளைக் களங்கமில்லாத பக்தியுடன் பூஜை செய்தோம். மந்திர தந்திரங்களையெல்லாம் வசப்படுத்தினோம். சாந்தி கழித்தல், வசியம், செயலிழக்கச் செய்தல் (ஸ்தம்பனம்), எதிரியை அழித்தல், உச்சாடனம், தூளியம் வைத்தல் உட்பட்ட ஷட் (எட்டுவிதக்) கர்மங்களை நடத்தும் வல்லமை பெற்றோம். நல்லதற்கான சாந்தி கர்மங்களை மட்டுமே அனுஷ்டிப்பது என்கிற பாரம்பரிய நியதியை வரிக்கு வரி அனுசரித்திருக்கிறோம்.



பப்புமாமா சேகரித்து வைத்திருக்கும் ஓலைச் சுவடிகளை சரியாகப் பயன்படுத்தி உள்ளோம். மந்திரசாரம், யந்திரசாரம், தந்திரசாரம், பிரயோகசாரம், க்ரியாசாரம், பிரபஞ்சசார தந்திரம், சௌந்தர்ய லஹரி, லலிதா ஸஹஸ்ர நாமம், பூஜா விதிகள் உட்பட எத்தனையெத்தனையோ சுவடிகளுடன் தான் மல்லுக்கு நின்றிருக்கிறோம்?

மந்திரங்களில் ஸித்தி பெறுவதற்காக எத்தனை கடுமையான விரதங்களைப் பின்பற்றியிருக்கிறோம்? எத்தனை ஹோமங்கள், தர்ப்பணங்கள், அர்ச்சனைகள், பூஜைகள் செய்திருக்கிறோம்! புத்தூர் தறவாட்டில் மகாமாந்திரீகர்களாக இருந்த காரணவர்களின் வாரிசு என்கிற பெயருக்கு எந்தவிதமான இழுக்கும் ஏற்படுத்தாமல் இத்தனைக் காலமும் வாழ்ந்திருக்கிறோம். ஆனால், ஓரேயொரு சிறு தவறு நேர்ந்துவிட்டது.

தவறு செய்யாதவர்கள் யார்? பாவம் செய்யாத மனிதர்கள் இருக்கிறார்களா? செய்த தவறைத் திருத்திக் கொள்ளப் பரிகாரம் எதுவுமே கிடையாதா? பாவத்திற்குப் பிராயச்சித்தமில்லையா?

மாந்திரீகப் பதவியைத் துறப்பது மட்டும்தான் ஓரேயொரு பரிகாரமா? அன்பு நிறைந்தவரான பப்புமாமாவால் வேறு எந்த யோசனையையும் சொல்ல முடியவில்லையா?

அது முடியாது! தறவாட்டிலுள்ள வேறு ஒருவரை மாந்திரீகனாக்கிவிட்டு, இந்த மாந்திரீகப் பதவியிலிருந்து என்றென்றைக்குமாக விடை பெற்றுக் கொள்வதென்பது ஒரு போதும் முடியாத காரியம்! பப்புமாமாவின் வார்த்தைகளுக்குக் கீழ்ப்படியாமல் இருப்பது குருநிந்தை என்பது தெரிகிறது. ஆனால், தான், தன்னுடைய நிலையையும் பாதுகாக்க வேண்டி உள்ளதே. மாந்திரீகப் பதவி போய் விட்டால், தான் மீண்டும் பழைய குமாரன்தம்பியாக மாற நேரிடும். அது கூடாது!

பிரம்மச்சரியத்தை இழந்துவிட்டால் கருட சேவையைத் தொடரக் கூடாது என்கிற பழங்கால நம்பிக்கையைப் பற்றித்

தனக்கும் தெரியும். தறவாட்டின் குலதெய்வமான கருட பகவான் தன்னுடைய பிரத்தியட்ச தெய்வமும்கூட. முந்தைய மாந்திரீகர்களுக்கு ஸித்தித்ததைவிட அதிகமாக கருடனின் அருளை தான் பெற்றுள்ளோம். முன்னொரு காலத்தில், யாரோ ஒருவர் ஏற்படுத்திய இந்தப் பழைய வழக்கத்தை மீறிவிட்டால் இஷ்ட தெய்வமான கிருஷ்ணப்பருந்து கோபித்துக் கொள்ளுமா என்ன?

குடும்ப வரலாற்றைப் பார்த்தால்கூட மங்குப் பாட்டியின் காதலனாக இருந்த கேளு நாயர் கொள்ளுத்தாத்தா கருட பக்தனாகவும், தேர்ந்த மாந்திரீகனாகவும் விளங்கவில்லையா? பிரம்மச்சரியத்தை இழந்த கேளு நாயரின் மந்திர வல்லமையால் தானே இந்த வீட்டின் பிந்தைய வாரிசுகளுக்கு இதெல்லாம் கிடைத்திருக்கிறது? பின் தலைமுறையினர் கர்மஸித்தி பெறவில்லையா என்ன?

எது எப்படி இருந்தாலும் இந்த விஷயத்தில் பப்புமாமாவின் ஆணையைத் தன்னால் ஏற்றுக்கொள்ள முடியாது. எப்படிப்பட்ட துன்பங்களை அனுபவிக்க நேர்ந்தாலும் சரி... மாந்திரீகப் பதவியைத் தியாகம் செய்வது என்கிற பேச்சுக்கே இடமில்லை. மரணம் நெருங்கிவிட்டதென்று தோன்றுகிற நேரத்தைத் தவிர வேறொருவருக்கு மந்திரோபதேசம் வழங்கப் போவதுமில்லை.

உறுதியான ஒரு தீர்மானத்திற்கு வந்தவனைப்போல் குமாரன் தம்பி எழுந்தான். வீட்டை நோக்கி வேகமாக நடந்தான்.

வீட்டை அடைந்த குமாரன் தம்பி குளித்தவுடன் பூஜைறை வாசலை அடைந்து கருட சேவையில் ஈடுபட்டான். மனத்தின் ஒருமுகத் தன்மை சிதறியபோதும், அதைப் பொருட்படுத்தாமல் தியானத்தைத் தொடர்ந்தான்.

தியானம் முடிந்ததும் ஏற்றிய நிலவிளக்குடன் அவன் நிலவறைக்குச் சென்றான். அங்கிருந்த எல்லா விளக்குகளையும் ஏற்றிய பிறகு பத்மாசனத்திலமர்ந்து தேவி தியானத்தைத் தொடங்கினான்.



அவனது உதடுகளிலிருந்து மோகனகௌரி மந்திரம் வெளியேறியது.

*கீர்வ்வாண ஸங்கார்ச்சித பாதபங்கஜா—*
*ருணப்ரபா பாலஸஸாங்க சேகரா*
*ரக்தாம்பரா லேபன புஷ்பயுங்ஙமுதே*
*ஸ்ருணிம் ஸபாசம் தததீ சிவாஸ்துத:*

(தேவ கணங்களால் அர்ச்சிக்கப்படுகிற பாதபங்கஜங்களுடன் இணைந்து சிவப்பான உடலொளியுடன், சந்திரகலை (பிறை) எனப்படும் கிரீடம்சூடி சிவப்பான உடையணிந்து, அங்குசம், பாசம் போன்றவற்றை ஏந்திய இரண்டு கைகளுடன் சோபிதமாக விளங்கும் கௌரி ஆனந்தத்தை நல்கட்டும்.)

சிறியதொரு கறுப்புக் கயிறையும் விபூதியையும் ஒரு வெள்ளித் தட்டில் வைத்து, இரு கைகளையும் உயர்த்திப் பிடித்தபடி அவன் ஜபத்தைத் தொடர்ந்தான்:

*ஓம் ஹ்ரீம் நமோ பிரம்மஸ்ரீ ராஜிதே ராஜபூஜிதே ஜயவிஜயே கௌரீ திரிபுவன சங்கரீ சர்வலோக வசங்கரீ சர்வ ஸ்த்ரீ புருஷவசங்கரீ ஸுஸு துது ஹெஹெ வாவக்னிம் ஸ்வாஹா.*

ஜபத்தை முடித்துக்கொண்டு அவன் வீட்டிற்குள் நுழைந்தபோது நேரம் நள்ளிரவை நெருங்கிவிட்டிருந்தது. ஜபித்த விபூதியையும், கயிறையும் ஒரு சிறிய துணியில் வைத்துக்கட்டி சப்ரமஞ்சத்திலிருந்த தலையணைக்கு அடியில் பத்திரப் படுத்தினான்.

"என்ன குமாரா, இன்னும் ஜபம், பூஜை ஏதாவது செய்யப் போறியா?"–படுக்கப் போகாமல் கிழக்குப்புறத் தளத்தில் கண்விழித்து உட்கார்ந்திருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கேட்டார்

"இன்னும் கொஞ்ச நேரத்துக்குப் பிறகு ஒரு கர்மம் செய்ய வேண்டியிருக்கு."

"தேங்காய் கிட்டங்கிக்கு உள்ளேயா?"

"ஆமாம் அம்மா!"

"கேக்குறது சரியில்லைதான்... இருந்தாலும் கேக்குறேன். அப்படி என்ன கர்மத்தை அங்க செய்யப்போற?"

"அது ஒரு ரகசிய கர்மம் அம்மா."

அதன் பிறகு குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி எதுவும் கேட்கவில்லை. மகனைச் சாப்பிட வருமாறு அழைத்தார்.

"இன்னிக்கு உபவாசம்!"–அம்மாவுக்குப் பதில் சொன்னான்.

நேரம் நள்ளிரவைக் கடந்து விட்டது. உறக்கத்தைத் தொலைவிலேயே நிறுத்தி வைத்தபடி யக்ஷியின் வரவை எதிர்பார்த்துக் காத்திருந்தான் குமாரன்தம்பி.

'இவளுக்கு இன்றைக்கு என்ன ஆகிவிட்டது?'–அவன் யோசித்தான். ஒருவேளை தன் திட்டத்தை உணர்ந்து கொண்டிருப்பாளோ? தன்னுடைய பிரம்மச்சரிய விரதம் முறிவடைந்ததைத் தெரிந்து கொண்டதைப்போல், ஒருவேளை இதையும் தெரிந்து கொண்டிருப்பாளோ?

படுக்கையிலிருந்து எழுந்து தென்புற அறைக்கதவைத் திறந்தவன் சற்று நேரம் எதையோ யோசித்தபடி நின்றான். பிறகு தலையணையின் கீழிருந்து விபூதியையும் கயிறையும் வெளியே எடுத்து மடியில்செருகினான். சிறிய நிலவிளக்கு ஒன்றில் நெய்யை ஊற்றி, திரியைக் கொளுத்தி வலதுகையில் எடுத்தான். இடதுகையில் மந்திரப் பிரம்பையும் எடுத்துக் கொண்டு தேங்காய் கிட்டங்கியை நோக்கி நடந்தான்.

கிட்டங்கியின் சாணம் மெழுகிய தரையில் நிலவிளக்கை வைத்தான். பிரம்புடன் வெளியே வந்தான்.

யக்ஷி இந்தவீட்டின் சுற்றுப்புறத்தில்தான் எங்காவது ஒளிந்திருக்க வேண்டுமென்று ஊகித்தான். குளத்தை ஒட்டிய சர்ப்பக்காவில் ஒரு பனைமரமும், பாலைமரமும் இருப்பது நினைவில் எழுந்தது. பனை மற்றும் பாலை மரத்திலும் யக்ஷிகள் தங்குவதுண்டு. சோதித்தே பார்த்து விடுவது என்ற தீர்மானத்துடன் கருட மந்திரத்தை உருவிட்டபடி அவன் சர்ப்பக்காவை நோக்கி விரைந்தான்.



நல்ல நிலவொளி. விசிலடிப்பது போல் தவழ்ந்து வந்த தென்றலின் வருடலை ஏற்றுக்கொண்ட மரத்தின் உச்சிப் பகுதிகள் மயிலாட்டம் ஆடின. இரவுப் பறவைகள் இடைவெளி விட்டுக் குரல் எழுப்பிக் கொண்டிருந்தன. சர்ப்பக்காவின் மையத்திலிருந்த (சித்ரகூடம்) சவுக்கையை ஒட்டி வளர்ந்திருந்த பாலைமரத்தடியை நெருங்கியபோது குமாரன்தம்பியைக் காரணமற்ற பயம் சூழ்ந்து கொண்டது.

மந்திரப்பிரம்பை இறுகப் பிடித்தபடி அவன் ஹனுமானைத் தியானித்தான். அப்போது ஏற்பட்ட பயங்கரமான அலறல் சத்தத்தைக் கேட்டு அவன் உடல் கிடுகிடுவென நடுங்கியது. மனத்தின் ஒருமுகத்தன்மை சிதைந்தது.

குற்ற உணர்வுடன் ஹனுமானைத் தியானித்தான். பிரம்மச்சரியத்தை இழந்து விட்டவனுக்கு ஹனுமானின் தரிசனம் கிடைக்காதோ என்கிற பயத்துடன் தொடங்கிய தியானத்தை முழுமை அடையாமலேயே முடித்துக் கொள்ள வேண்டியதாகி விட்டது.

பாலை மரம் குலுங்குவதாக அவனுக்குக் தோன்றியது. திடுமென்று பாலைப்பூக்கள் உதிர்ந்து விழத்தொடங்கின. இதுதான் நல்ல சந்தர்ப்பம் என்பதைப் புரிந்துகொண்ட குமாரன்தம்பி, தேவியை. மனதில் கற்பித்துக்கொண்டு பாலை மரத்தடியில் உட்கார்ந்தான்.

யக்ஷியுடன் தனது பலாபலத்தைச் சோதித்துப் பார்க்காமல் அவளைச் ஸ்தம்பிக்கச் செய்து, பலவீனப்படுத்துவது என்று தீர்மானித்தான்.

தாரா தேவியைத் தியானித்தபடி ஸ்தம்பன கர்மத்தைத் தொடங்க முற்பட்டான். அவன் மந்திரங்களை நினைவுகூர்ந்தான்:

*ரக்தாம் வஸ்யே*
*ஸ்வர்ண்ண வர்ணாம் ஸ்தம்பனே*
*மாரணே ஸிதாம்*
*உச்சாடனே தூம்ரவர்ண்ணாம்*
*ஸாந்தௌ ஸ்வேதாம் ஸுரேதிமாம்.*

(வசிகரணம் நடத்தும்போது தேவியைச் சிவந்த நிறமாகவும், ஸ்தம்பனத்திற்குத் தங்க நிறமாகவும், மாரண கர்மங்களுக்குக் கறுப்பு நிறமாகவும், உச்சாடனத்துக்குப் புகையின் நிறமாகவும் பரிகார கர்மங்களுக்கு வெண்மை நிறமாகவும் தியானிக்க வேண்டும்.)

தேவியின் வடிவத்தைத் தங்கநிறத்துடன் மனத்தில் உருவகப்படுத்திக்கொண்டு தியானத்தில் ஆழ்ந்தபடி சற்று நேரம் அமர்ந்திருந்தான். பிறகு பாலைமரத்தின் உச்சியைப் பார்த்தபடி குரல் எழுப்பினான்: "நீயா கிழே இறங்கி வர்றயா... இல்லை உன்னை இறங்கிவரச் செய்யட்டுமா?"

உரத்த குரலில் கலகலவெனச் சிரித்த சத்தத்தைக் கேட்ட குமாரன்தம்பி ஒரு கணம் திடுக்கிட்டான். கெக்கலிச் சிரிப்பு தொடர்ந்து கொண்டிருந்தது.

ஒருவாறாகத் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அவன் கேட்டான்: "என்னைக் கேலி பண்றயா?"

அதற்குப் பதிலாக மீண்டும் சிரிப்புச்சத்தம் முழங்கியது. பொறுமை இழந்த குமாரன்தம்பி கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தான்.

*ஓம் ஹூம் ஹ்ரீம் க்ளீம்*
*ஹஸௌம்; ஹூம் ஃபட்*
*ஓம் ஹ்ரீம் ஹூம் ஹ்ரீம்*
*ஹூம் ஃபட்*



*ஸ்ரீ ஹூம் ஹ்ரீம் ஹூம் ஃபட்*
*ஸ்ரீ ஹூம் ஃபட்*

மிகவும் நெருக்கத்தில் சலங்கைகளின் சத்தம் கேட்டபோதும் அவன் கவனிக்கவில்லை. இரக்கத்திற்குரிய வகையில் விசும்பல்கள் உயர்ந்தபோதும், அவன் மந்திரோச்சாரணத்தைத் தொடர்ந்தான்.

"என்னை அழிச்சிடாதீங்க!" புலம்பலுடன் கூடிய வேண்டு கோளைக் கேட்டதும் கண்களைத் திறந்தான். பரவச உணர்வுடன் நின்ற நிலையில் தேம்பியழுது கொண்டிருந்த யக்ஷியிடம் அவனுக்கு இரக்கம் ஏற்பட்ட போதிலும், அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் எழுந்தான். மடியிலிருந்த பொட்டலத்திலிருந்து ஒரு சிட்டிகையளவு விபூதியை எடுத்து யக்ஷியின் முகத்துக்கு நேராக ஊதிவிட்டான்.

"வா... என்கூட வா. . .!"—கட்டளையிட்டான்.

வலதுகையில் உயர்த்திப்பிடித்த பிரம்புடன் தேங்காய் கிட்டங்கியை நோக்கி நடந்தான். அசையும் ஒரு பொம்மையைப் போல் யக்ஷியும் அவனைப் பின்தொடர்ந்தாள்.

கிட்டங்கிற்குள் நுழைந்த குமாரன்தம்பி நிலவிளக்கின் பின்புறமாக அமர்ந்தான். அவனுக்கு எதிரே அவனைப் பார்த்தபடி யக்ஷியும் அமர்ந்தாள்.

"உச்சாடன கர்மங்கள் செஞ்சு உன்னைத் தொலைச்சுக்கட்ட எனக்குத் தெரியும். ஆனால், நான் சத்தியத்தை மீற விரும்பலை. அதனால உன்னை இங்கேயே ஸ்தாபிக்கப் போறேன். அடிக்கடி இங்க வந்து உன்னைச் சந்திக்கிறேன்"—அவனது குரலில் அன்பும் இருந்தது.

"என்னை பந்தனம் பண்ணிட்டிங்க இல்லையா. . . இனிமே உங்க இஷ்டம்!" அவளது குரல் சோர்வுடன் ஒலித்தது.

"சரி, யாரோட கண்ணுக்கும் தெரியாம இதற்குள் இருந்து கொள். நான் வந்து கூப்பிடும்போது மட்டும் வந்தால் போதும்" அவன் பேசி முடித்தபோது யக்ஷியின் வடிவம் மறைந்தது.

நிலவிளக்கை எடுத்துக்கொண்டு வெளியே வந்த குமாரன்தம்பி கிட்டங்கியின் கதவை இழுத்துமூடிப் பூட்டினான். சாவியை மடியில் பத்திரப்படுத்திக் கொண்டான். ஏற்கெனவே ஜபித்து வைத்திருந்த கறுப்புச்சரடால் தாழ்ப்பாள் பகுதியை இறுக்கிச் சுற்றினான்.

வீட்டிற்குத் திரும்பி வந்த குமாரன்தம்பியின் மனம் அமைதி அடைந்திருந்தது.

"பெரியதொரு தொல்லை ஒழிந்தது!" ஒரு பெருமூச்சுடன் ஹுமுணுத்தான்.

சப்ரமஞ்சக் கட்டிலில் நீண்டுநிமிர்ந்தும், சாய்ந்தும், ஒருக்களித்துப் படுத்துப் பார்த்தும் அவனைத் தூக்கம் நெருங்கவில்லை. அவனுடைய மனதிற்குள் எதிர்பாராத விருந்தாளியாக வந்த பெண்ணுருவம், 'அவனது தூக்கத்தை விரட்டியடித்தது.

"என்னை மறந்துட்டிங்களா?" – அவள் கேட்கிறாள்.

'உன்னை மறக்கிறதா? பிரம்மச்சர்யத்தை கைவிட்டாகி விட்டது. உன்னைச் சொந்தமாக்கிட்டுக் குடும்பவாழ்க்கையைச் சுவைக்க என்னால் முடிந்தால்...!'

அவனது உள்மனம் அவனுக்குப் பதிலளித்தது.

"தாயத்துடன் (ரக்ஷா யந்திரத்துடன்) வீட்டுக்கு வர்றதாச் சொன்னதை மறந்துட்டிங்களா என்ன?"

'இல்லை பானுமதி. . . மறக்கலை, பொழுது விடியுறதுக்காகக் காத்துட்டிருக்கேன்.'

# 35

பானுமதி அணிந்து கொள்வதற்காக மகிஷமர்த்தினி யந்திரமே இருக்கட்டுமென்று குமாரன்தம்பி தீர்மானித்தான். மகிஷமர்த்தினி யந்திரம் எல்லாவிதமான எதிரிகளையும், பூதப்பிரதே ரக்ஷஸுகளின் தொல்லைகளையும், சகலவிதமான அபாயங்களையும் விரட்டி அழித்துவிடும் வல்லமை கொண்டது.

தங்கத்தகட்டையும் தாயத்து உருளையையும் எடுத்துக் கொண்டு நிலவறையை அடைந்த குமாரன்தம்பி, நிலவிளக்கின் திரிகளை ஏற்றினான். *"மஹிஷமர்த்தினி ஸ்வாஹா"* என்று ஜபித்தபடி தங்கத்தகட்டில் பன்னிரண்டு கட்டங்கள் உள்ள ராசிச் சக்கரத்தை வரைந்தான். பிறகு மஹிஷமர்த்தினி மந்திர சுலோகத்தை எழுதினான்.

*ம்ருத்யோ ஸ்துல்யம் த்ரிலோகிம் க்ரஸிது மதிரஸா*
*ன்னி: ஸ்ருதா: கிம்னு ஜிஹ்வா:*
*கிம்வா க்ருஷ்ணாஹ்ரி பத்மத்யூதிபி ரருணிதா*
*விஷ்ணு பத்யா பதவ்யா: .*
*பிராப்தாஸ்ஸந்த்யா ஸ்மராரே ஸ்வயமுத னுபிதி*
*ஸ்திஸ்ர இத்யூ ஹ்யமானா*
*தேவைர்த்தேவ்யா ஸ்த்ரீ சூலக்ஷத மகிஷ ஜுஷோ*
*ரக்த தாரா ஜயந்தி*

தேவியின் வடிவத்தை மனத்தில் தியானித்துக்கொண்டு தகடைச் சுருட்டி, தாயத்துக் கூட்டினுள் செருகினான்.

காய்ந்த வாழைஇலைத் துண்டு ஒன்றில் விபூதியையும் துளசி இலைகளையும் தூவினான். தாயத்தை அதன்மீது வைத்து, பொட்டலமாகக் கட்டி மடியில் பத்திரப்படுத்தினான்.

விளக்குகளை அணைத்தபிறகு நிலவறையிலிருந்து தென்புறத் தளத்தை அடைந்த குமாரன்தம்பி, சிவப்பு நிறப் பட்டுத்துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டான். மாந்திரீகப் பிரம்புடன் முற்றத்திற்கு வந்தபோது காரியஸ்தர் அங்கு அவனுக்காகக் காத்திருந்தார்.

"சங்குசாரே... புறப்படுங்க. ஒரு இடம் வரைக்கும் போய்விட்டு வந்துடலாம்." சங்குசாருடன் குமாரன்தம்பி நடக்கத் தொடங்கினான்.

"நாம எங்க போறோம்?" - வீட்டின் படிப்புரையைத் தாண்டியதும் சங்குசார் பணிவுடன் கேட்டார்.

"மணிமங்கலம் வீடு வரைக்கும் போறோம். கேசவன் நாயரோட மகளுக்கு ஒரு தாயத்துக் கொடுக்கணும்!"

சங்குசார் வியப்படைந்தார். 'பொதுவாகத் தாயத்துகள் வேண்டி வருவோர் புத்தூர் வீட்டுவாசலில் காத்திருப்பது வழக்கம். ஆனால், இப்போது என்னடாவென்றால் இவர் தாயத்துடன் மணிமங்கலம் வீட்டிற்குப் போகிறார்! ஓகோ இதற்காகத்தான் விடிந்ததும் விடியாதுமாகத் தன்னை அனுப்பித் தங்கத்தகட்டையும், தாயத்தையும் வாங்கிவரச் சொன்னாரா? மணிமங்கலத்து வீட்டாருடன் தம்பிக்கு இந்த அளவு ஈடுபாடு ஏற்படக் காரணம் என்னவாக இருக்கும்?'

"சங்குசாரே. . ."

"சொல்லுங்க!"

"நீங்க என் காரியஸ்தரில்லையா? உங்ககிட்ட நான் எந்த ரகசியத்தையும் மறைக்கிறது நல்லதில்லேன்னு தோணுது. அதாவது நான் மாந்திரீகப் பதவியை விட்டுடுறதா, வேணாமாங்கிற யோசனையில இருக்கேன்."

"ஐயோ, என்னங்க இது. . .?"

"குடும்பஸ்தனாகிடலாம்கிற ஆசைதான் சங்குசாரே!"



சங்குசாரால் உடனடியாக அதற்குப் பதில் சொல்லமுடிய வில்லை. 'புத்தூர் தறவாட்டு மகாமாந்திரீகனுக்குக் குடும்பஸ்தன் ஆகவேண்டும் என்கிற ஆசையா? பிரம்மச்சாரிக்கு பெண்ணின்பச் சிந்தனையா? ஊரார் ஒரு யோகீஸ்வரனாகக் கருதும் இவர், விரதத்தை முறித்துக் கொள்வதா? எவ்வளவு சீக்கிரமாக இவர், புகழ்பெற்றார். மாந்திரீக வித்தையில் இப்போது இவரை வெற்றிகொள்ள இந்தப்பகுதியில் யார் இருக்கிறார்கள்? சூரக்காட்டு பட்டேரி எவ்வளவோ போராடிப் பார்த்துக், கடைசியில் ஒதுங்கி விடவில்லையா? புதுமனை தந்திரியுடன் இணைந்து பூஜை செய்ய முடிந்த ஒரேயொரு பிராமணரல்லாத பூசாரி இவர்தானே! இவ்வளவு பெருமைக்குரிய பதவியைத் தூக்கி எறிந்துவிட்டு, குடும்ப வாழ்க்கையில் மூழ்க இவருக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?'

"என்ன பதிலையே காணோம்?"

"பதில் சொல்ற அளவுக்கு இல்லை."

குமாரன்தம்பி வாய்விட்டுச் சிரித்தான். "சங்குசாரே, உங்களுக்குத்தான் தெரியுமே, சின்னவயசிலிருந்தே நான் ஒரு உல்லாசப் பேர்வழி. இப்படி மாந்திரீகனாகணும்கிற ஆசையே என்கிட்ட இருந்ததில்லை. பப்புமாமா கட்டளையிட்டபோது ஒப்புக்க வேண்டியதாச்சு. அவ்வளவுதான். எப்படியோ இத்தனை நாட்களையும் ஒருவிதமாகத் தள்ளிவிட்டேன். ஆனால், இனிமேலும் அப்படி இருக்க முடியாது."

"வேற யாருக்காவது உபதேசம் தராம மாந்திரீகப் பதவியைச் சட்டுன்னு விட்டுவிட முடியுமா என்ன?"

"அதைத்தான் நானும் யோசிக்கிறேன். எதிரியாகிப்போய்ட்ட வடக்குவீட்டு சேகரனுக்கு நான் மந்திரோபதேசம் கொடுக்க முடியாது. தறவாட்டின் வேறு கிளைகள்ல தகுந்த நபர்கள் வேற யாரும் கிடையாது. என் மருமகன் ஆண்பிள்ளைதான்னாலும் பன்னிரண்டு வயசுதான் ஆகுது."

சற்று நேரம் எதையோ யோசித்தபடி மௌனமாக நடந்த சங்குசார், சட்டென்று ஏதோ ஓர் உபாயம் கண்டுபிடித்தவரைப்

போல் பேசினார்: "என்னுடைய பாழாப்போன மனசில தட்டுப்படறதைச் சொன்னா, நீங்க தயவு செய்து கோபிச்சுக்கக் கூடாது. மாந்திரீகப் பதவியை விடாமலே..."

"முழுசா சொல்லுங்க!"

"பதவியை விடாமலே நீங்க ஒரு குடும்பஸ்தனாகக் கூடாதா என்ன?"

மனத்தில் தோன்றிய மகிழ்ச்சியை மறைத்துக்கொண்டு குமாரன்தம்பி பூடகமாகக் கேட்டான்: "நீங்க என்ன வார்த்தை பேசுறீங்க? 'குடும்பப் பாரம்பரியத்தைத் தொலைச்சிட்டு நான் அதர்மமா நடந்துக்கணும்கிறீங்களா?"

"தர்மம்-அதர்மம்ங்கிறதெல்லாம் நம்மளோட கற்பிதங்கள் தானே தம்பி! எப்படி இருந்தாலும் உங்க பதவி—போய்டக் கூடாதுங்குறதுதான் என்னோட ஆசை."

காரியஸ்தரின் வார்த்தைகள் குமாரன்தம்பியின் மனதிற்குப் புதுப்பலம் தந்தன. பாரம்பரிய நியமங்களும் அனுஷ்டானங்களும் தொடர்ந்து கடைப்பிடிக்கப்பட வேண்டுமென்பது வெறும் ஒரு சடங்குதானே? இந்தச் சடங்குகளை மீறினால் என்ன நடக்கும்? இன்றைய வழக்கம், நாளைய பரம்பரைப் பழக்கமாகிவிடும். இன்றைய ஆசாரத்திற்கு எதிரானவை நாளைக்கு ஆசாரமாகக்கூடும். மருமக்கள்தாயமென்கிற இப்போதைய நடைமுறை நாளைக்கு மக்கள்தாயமாக மாறிவிடக்கூடாதா என்ன? நம்பூதிரிகளுக்கும், போற்றிமார்களுக்கும் மட்டுமே பெண் கொடுப்போம் என்கிற தனது குடும்பத்தின் பரம்பரைப் பழக்கம் மாறவில்லையா? இன்று கணவர்கள், மனைவியரின் வருமானத்தைக் கொண்டல்லவா வாழ்க்கை நடத்துகிறார்கள்? மனைவியர், தங்களது கணவரது பராமரிப்பில் வாழும் ஒரு காலம் வரக்கூடாதா என்ன? தான் திருமணம் செய்து கொண்டால் தன் மனைவி, தன்னுடைய வீட்டில்தான் வாழ வேண்டும். இந்த ஊரில் அதுவே ஒரு அதிசயமான விஷயமாகத் தோன்றும். ஆண்மையுள்ள ஒரு சிலராவது இந்தக் காரியத்தில் தன்னைப்



பின்பற்றினால் அதுவே பிற்பாடு நாட்டு நடப்பாகிவிடாதா? கருடசேவை செய்பவன் பிரம்மச்சாரியாக இருக்க வேண்டுமென்ற ஒரு நம்பிக்கை உண்டு. அது வெறும் ஒரு கற்பனை மட்டும்தானே? அதுவும் மாறிவிடாது என்று சொல்ல முடியுமா என்ன?

மணிமங்கலத்து வீட்டுப் படிப்புரையை அடைந்தபோது குமாரன்தம்பி சிந்தனைகளிடமிருந்து விடுதலை பெற்றான்.

குமாரன்தம்பி படிப்புரையைத் தாண்டி வருவதைப் பார்த்ததும் வீட்டின் கிழக்குப்புறத் திண்ணையில் சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த கேசவன் நாயர் பணிவுடன் எழுந்து நின்றார்.

"இவ்வளவு கஷ்டப்பட்டு நீங்க இங்க வந்திருக்கணுமா என்ன?"-கேசவன் நாயர் குசலம் விசாரிப்பைக் கேள்வியுடன் தொடங்கினார்.

"இதெல்லாம் ஒரு கஷ்டமா என்ன? எப்பவாவது வீட்டிலிருந்து இப்படியெல்லாம் வெளியில வரவேணாமா? அதிருக்கட்டும், உங்க வீட்டுப் பூஜையறை எங்க இருக்கு?"

கேசவன் நாயர் குமாரன்தம்பியைப் பணிவுடன் பூஜையறைக்கு அழைத்துப் போனார்.

"இது ஒரு சின்னக் கோயிலேதான்!"—நிறைய நில விளக்குகளும் தேவி-தேவர்களின் ஏராளமான படங்களும் தென்பட்ட பூஜையறைக்குள் நுழைந்த குமரான்தம்பி வியப்படைந்தான்.

கேசவன் நாயர் ஒரு நிலவிளக்கில் திரிபோட்டுத் தீபம் ஏற்றினார். நிலவிளக்கிற்கு முன்பாகச் சப்பணமிட்டு உட்கார்ந்த குமாரன்தம்பி கூறினான்: "பொன்னணைக் கூப்பிடுங்க!"

மடியிலிருந்து வாழையிலைப் பொட்டலத்தை எடுத்து முன்புறமாக வைத்தபிறகு, கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தான் குமாரன்தம்பி.

தாய்-தந்தையுடன் நாணத்தோடு பூஜையறைக்கு வந்த பானுமதியின் கண்கள், தியானத்தில் அமர்ந்திருந்த குமாரன்தம்பியின் முகத்தில் ஒரு நிமிடம் பதிந்து நின்றன. கம்பீரம் நிறைந்த அந்த முகத்தின் ஒளி அவளைக் கவர்ந்தது.

கண்களைத் திறந்த குமாரன்தம்பி மிடுக்கான குரலில் கூறினான்: "வாம்மா, இப்படி வந்து உட்கார்!"

தளக்கு மிக நெருக்கத்தில் தலைகுனிந்து கூச்சத்துடன் உட்கார்ந்திருந்த பானுமதியை, குமாரன்தம்பி ஆவலுடன் பார்த்தான்.

நெஞ்சிற்குள் பெரும்பறை ஒன்று பேரோசையுடன் முழங்குவதாக அவனுக்குத் தோன்றியது. தங்கத்தில் கடைந்தெடுத்த பேரழகுச் சிற்பமல்லவா இது! சர்வாங்க அழகியாகத் தோன்றும் இவளது முகத்தில் விளையாடும் களங்கமற்ற தன்மை தன் மனத்தில் மத்தாப்புக் கொளுத்துகிறது. வெட்கத்தினால் கூம்பிப்போன கருநீலக் கண்களால் தன் ஆத்மாவையே வேரோடு பிடுங்குகிறாள். இவளது நடுங்கும் பவழ இதழ்களுக்குள் ஊடுருவித் தேனருந்த தனது நாக்குத் துடிக்கிறது. சிறைப்பட்டிருந்தன என்றாலும் வலுவாகச் சித்தத்தைப் பிடித்திழுக்கும் மார்புப் பகுதிகள், தனது விசாலமான-பரந்த மார்பை விருந்துக்கு அழைக்கின்றன. 'இரவின் அமைதியில் என் கனவில் காட்சிதரும் அழகியே, நீ என்றென்றுமாக எனக்கு நித்திய தரிசனம் தா! என் மந்திரஸித்திகள் முழுவதையும் உன் அழகுக்காக அர்ப்பணித்தால்கூட ஈடாகாது!'

அரைமயக்க நிலையில் அவன் வாழையிலையிலிருந்து ஒரு சிட்டிகை விபூதியெடுத்து அவளது நெற்றியில் அழுத்தித் தேய்த்தான். துளசி இலைகளை எடுத்து அவளது தலையில் போட்டான். கடைசியாக சரடில் கோக்கப்பட்டிருந்த தாயத்தை அவளிடம் நீட்டினான். இரு கைகளையும் சேர்த்து மலர்த்தியவாறு அவள் அதைப் பெற்றுக் கொள்ளும்போது அவளது முகத்தில் பக்தியுணர்வு பளபளத்தது.

"உடம்பில எங்க வேணும்னாலும் கட்டிக்கங்க"- தழுதழுத்த குரலில் குமாரன்தம்பி பேசினான்.



"மத்தியான நேரமாயிடுச்சே... சாப்பிட்டுக் கிளம்பலாம்." - விடைபெற வந்த குமாரன்தம்பியிடம் கேசவன் நாயர் பணிவான குரலில் கேட்டுக் கொண்டார்.

"அதெல்லாம் இன்னொரு தடவை பார்த்துக்கலாம். இப்போ நான் அவசரமா கிளம்பவேண்டியிருக்கு."

தாயத்து மற்றும் தங்கத்தகடின் விலையையாவது பெற்றுக் கொள்ள வேண்டுமென்கிற கேசவன் நாயரது வேண்டுகோளையும் குமாரன்தம்பி நன்றிபூர்வமாக மறுத்தான். "பானுமதியை அன்னியப் பெண்ணா நான் நினைக்கலை. அவளுக்கு இனிமேல் எந்தவிதமான தொந்தரவும் இருக்காது." ஒரு நீண்ட பெருமூச்சுடன் குமாரன்தம்பி பதிலளித்தான்.

குமாரன்தம்பியும், காரியஸ்தரும் விடைபெற்றுப் புறப்பட்டனர். கேசவன் நாயர் படிப்புரைவரை வந்து அவர்களை வழியனுப்பி வைத்தார்.

படிப்புரையை விட்டு வெளியே வந்ததும் குமாரன்தம்பி சங்குசாரிடம் தாழ்ந்த குரலில் கேட்டான்: "கேசவன் நாயரோட மகளை நீங்க பாத்திருக்கிறீங்களா?"

"பார்த்திருக்கிறேனே! தங்கக்கிளி மாதிரியான பெண்ணு!"

"நாம அவளைப் பெண் கேட்டா என்ன?"

"உங்களுக்குத்தானே?"

"ஆமாம்... என்ன சந்தேகம்?"

"ஒண்ணுமில்லை, மணிமங்கலத்துக்காரங்க பழைய தறவாட்டுக்காரங்க. நிலபுலனில் எந்தக் குறையும் கிடையாது. போதாதற்குக் கேசவன்நாயரோட ஒரேயொரு செல்லப் பெண்ணும்கூட! ஆனா..."

"என்ன ஆனா...?"

சுற்றுமுற்றும் ஒரு முறை கண்களைச் செலுத்திய சங்குசார் மந்திரிப்பது போல் பேசினார்.- "மணிமங்கலத்துக்காரங்க தொருவக்காரங்க. நல்ல நாயர்கள்னு சொல்ல முடியாது. புத்தூர்

பெரிய அம்மாவுக்கு இந்த விஷயத்துல எல்லாம் ரொம்பவும் கவனிப்பாங்க."

குமாரன்தம்பி வாய்விட்டுச் சிரித்தான். "ஐயோ அப்பாவியே... எப்படியிருந்தாலும். இதை அம்மா ஒப்புக்க மாட்டாங்க. அது மட்டுமா? ஆசாரமே உடைபடும்போது ஜாதிங்கிறது ஒரு பெரிய விஷயமா? நீங்க போய் கேசவன் நாயர் கிட்டப் பேசுங்க. நான் வீட்டிற்குப் போறேன். சீக்கிரமா வந்து எங்கிட்டத் தகவல் சொல்லணும்; என்ன?"

சங்குசார் படிப்புரைக்குள் நுழைந்தார்; குமாரன்தம்பி தனது வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

"நான் என்ன பதிலைச் சொல்றதுன்னு யோசிக்கிறேன் சங்குசாரே. இனிக்கிறதால துப்பவும் முடியவில்லை; கசக்கிறதால விழுங்கவும் முடியலைங்கிற நிலைதான் எனக்கு.'' எல்லாவற்றையும் கேட்டபிறகு கேசவன் நாயர் பதிலளித்தார்.

அவரது மனம் குழப்பத்தில் ஆழ்ந்தது. புத்தூர் தறவாட்டுடன் சம்பந்தம் வைத்துக் கொள்வது பெருமைக்குரிய ஒன்றுதான். அதே சமயம் யோகியைப்போல் வாழவேண்டிய புத்தூர் மந்திரவாதிக்குத் தன் ஒரே மகளைத் திருமணம் செய்து கொடுப்பதைப்பற்றி யோசிக்கும்போது மனத்திற்குள் நடுக்கமாகவும் இருக்கிறது. திருமணம் செய்த பிறகு குமாரன்தம்பி மாந்திரீகப் பதவியைத் துறப்பதானால் அது நல்லதென்று சொல்ல முடியாது. மாந்திரீகன் என்கிற பெயரையும் புகழையும் ஒதுக்கி வைத்துவிட்டால் இந்த குமாரன்தம்பி யார்? தன் மகளுக்குச் சற்றும் பொருத்த மில்லாதவன்! திருமணத்திற்குப் பிறகு மாந்திரீகப் பதவியைத் தொடர்ந்தால் அதனால் ஏதாவது அனர்த்தங்கள் ஏற்படுமோ? அப்படியானால் பாதிக்கப்படுவது தன் மகளாகத்தான் இருப்பாள். இந்த விஷயத்தில் குமாரன்தம்பியுடன் கருத்து வேறுபாடு ஏற்படுத்திக் கொள்வதும் சரியில்லை. அசாதாரணமான மாந்திரீகஸித்தி கைவரப்பெற்ற அவன் பழிவாங்க முற்பட்டால், தன் கதி என்னாவது?



"இதில மேற்கொண்டு யோசிக்கிறதுல அர்த்தமே இல்லை. புத்தூர் தறவாட்டோட சம்பந்தம் ஏற்படுறது சாதாரணமான விஷயமா, என்ன? குமாரன்தம்பியின் பழைய பழக்கங்கள் எல்லாம் அப்படியே தலைகீழா மாறிடலையா? அவரோட இன்றைய நிலை என்ன? அவர் நமது பெண்ணை விரும்பும் நிலையில நாம அதுக்கு தடை சொல்லாம இருக்கிறதுதானே நல்லது?" அருகில் நின்றபடி எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்த கேசவன் நாயரின் மனைவி, தன் அபிப்பிராயத்தை வெளியிட்டாள்.

"மந்திரவாதத்தையும் குடும்ப பந்தத்தையும் ஒண்ணா கொண்டுபோக முடியுமா? புத்தூர் மந்திரவாதிகள் பிரம்மச்சரியம் கைக்கொள்றவங்கன்னு கேள்விப்பட்டிருக்கிறோம்?''– கேசவவன்நாயர் தனது சந்தேகத்தை வெளியிட்டார்.

சங்குசார் அதற்குப் பதிலளித்தார்: "பழைய ஆசாரங்கள்லாம் மாறி வர்ற காலமில்லையா இது? புத்தூர் மந்திரவாதி கல்யாணம் செய்யுறதுல என்ன தவறு? ஆகாயம் இடிஞ்சு விழுந்துடுமா என்ன? இன்னொரு விஷயத்தையும் சொல்லிடுறேன். மாந்திரீகப் பதவியை விட்டுவிடக் கூடாதுண்ணு நீங்களும் அவர்கிட்டச் சொல்லணும். அவருக்குப் பிறகு அவரோட மகன் ஒருத்தன் மாந்திரீகனாகட்டுமே! அப்பாவின் உரிமை பையனுக்குக் கிடைக்கக்கூடாதா என்ன?"

கேசவன் நாயரது தலைக்குள் புதியதொரு வெளிச்சம் வீசியது. தன் மகளுக்குப் பிறக்கும் ஒரு குழந்தைக்குப் புத்தூர் தறவாட்டின் அபூர்வமான மந்திரஸித்தி கிடைப்பதென்பது பெருமைக்கு உரிய காரியம்தான். இதையெல்லாம்விட மற்றொரு நன்மையும் உள்ளது. பானுமதியைத் தொல்லைப்படுத்துவதற்காக எந்தவிதமான அதர்மக் காரியத்தையும் செய்யத் தயாராக உள்ள ஸ்ரீகண்டனை மண்ணைக் கௌவச் செய்ய இந்தக் கல்யாணம் உதவும். புகழ்பெற்ற மாந்திரீகனான குமாரன்தம்பியைவிட வலுவான ஓர் எதிரி ஸ்ரீகண்டனுக்கு ஏற்பட முடியாது!

"சங்குசாரே, ஜாதகப் பொருத்தம் சரியா அமைஞ்சா பானுமதியை அவருக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்க

எனக்குச் சம்மதம்னு அவர்கிட்ட சொல்லிடுங்க." கேசவன் நாயர் உறுதியான குரலில் அறிவித்தார்.

சங்குசார் விடை பெற்றார். தனது நோக்கம் வெற்றி பெற்றதால் எல்லையற்ற மகிழ்ச்சியுடன் அவர் புத்தூர் வீட்டிற்குத் திரும்பினார்.

தென்புறப் படிப்புரையில் பொறுமையற்றவனாகக் காத்திருந்தான் குமாரன்தம்பி. சங்குசாரைப் பார்த்ததும் கேட்டான்: "என்ன பழம்தானே?"

"எல்லாம் மங்களமா முடியுற நிலைமைதான். ஜாதகம் பார்க்கணும்; முகூர்த்தத்தைப் முடிவு பண்ணணும் அவ்வளவுதான்."

குமாரன்தம்பியின் மனத்தில் குலவைப் பூக்கள் மலர்ந்து விரிந்தன. கதகளி வாத்திய ஓசைகள் கேட்டுக் காதுகள் குளிர்ச்சியடைந்தன.

'கண்களைக் கூசச் செய்யும் ஒளி சொரியும் ஆட்ட விளக்கு கண்ணுக்கு முன்னால் தெளிவடைகிறது. கதகளி வேடதாரிகள் அரங்கத்திற்கு வருகிறார்கள், பலே, பேஷ்! குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் ஸ்ரீமதி சுயம்வரம் கதை. இரயிம்மன் தம்பியின் மகளல்லவா குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி! அப்பாவைப் போலவே சிருங்காரப் பதப்பிரயோகத்தால் கதகளி ரசிகர்களைப் பித்துப்பிடிக்கச் செய்த திறமைசாலியான மகள்!

ஆனந்தபைரவி ராகத்தில், செம்படதாளத்தில் காதில் ஒலிக்கும் பாடல் எவ்வளவு இனிமையாக உள்ளது!'

குமாரன்தம்பி சுற்றுப்புறத்தை மறந்து போனான். கதகளிப்பாட்டு வரிகள் மட்டுமே காதில் ரீங்கரித்தன. கண்களை அகல விரித்தபடி நின்றுவிட்ட காரியஸ்தருக்குத் தானும் கதகளி அரங்கத்தின் முன் நிற்பதாகவே தோன்றியது!

( முதல்பாகம் முற்றுப் பெறுகிறது )